# THE MADRAS LEGISLATIVE ASSEMBLY

**Monday, the 9th February 1959.**

The House met in the Assembly Chamber, Fort St. George, at nine of the clock, Mr. Speaker (THE HON. DR. U. KRISHNA RAO in the Chair.

### I.—WELCOME TO HON. SPEAKER ON HIS RETURN FROM OVERSEAS TOUR.

THE HON. SRI C. **SUBRAMANIAM** : கனம் சபாநாயகர் அவர்களே, வெளிநாடு சென்று திரும்பிவந்திருக்கும் கனம் சபாநாயகர் அவர்களுக்கு இந்த சபையின் சார்பில் நல்வரவு கூற விரும்புகிறேன். அவர் வெளிநாட்டில் பெற்றுள்ள அனுபவமும் அங்கே அவர் பார்த்துள்ளவைகளும் இந்த சபையின் நடவடிக்கைகளுக்கு மிகவும் உபயோகமாக இருக்கும் என்று நான் நம்புகிறேன். அவர் வெளிநாட்டிற்குச் சென்று இன்னும் நல்ல திடகாத்திரமான தேகத்துடன் திரும்பி வந்திருப்பது நம் எல்லோருக்கும் மகிழ்ச்சியை அளிக்கக்கூடிய விஷயம்.

MR. **SPEAKER** : கனம் நிதி மந்திரி அவர்களுக்கும் மற்ற கனம் அங்கத்தினர்களுக்கும் என்னுடைய நன்றி கலந்த வணக்கம். வெளிநாடுகளில், அங்குள்ளவர்கள் என்னை அன்போடும் மரியாதையோடும் வரவேற்றார்கள். நான் வெளிநாடுகளுக்கு இந்த சபையின் பிரதிநிதியாகத்தான் சென்றேன். ஆகையால் வெளிநாடுகளில் எனக்குச் செய்யப்பட்ட மரியாதைகள் இந்த சபைக்குத் தான் சேரும் என்று நான் திடமாகச் சொல்லலாம். நான் சென்றிருந்த நாடுகளில் என்ன என்ன பார்த்தேன், என்ன அனுபவங்கள் எல்லாம் பெற்றேன் என்பதை ஒரு நாள் இந்த சபையின் கனம் அங்கத்தினர்கள் எல்லோருக்கும் சொல்ல வேண்டும் என்று நான் விரும்புகிறேன். இந்த சபை சம்பந்தமாக எத்தனையோ விசேஷமான சமாசாரங்கள் உங்கள் எல்லோருக்கும் சொல்லப்பட வேண்டியிருக்கின்றன என்று நான் நினைக்கிறேன். அவைகளை நீங்கள் ஒப்புக்கொள்வீர்களா இல்லையா என்பது வேறு விஷயம். என் அனுபவங்களையும் அபிப்பிராயங்களையும் உங்களிடம் சொல்லி உங்கள் ஆதரவைப் பெற வேண்டும் என்று நான் நினைக்கிறேன். நீங்கள் எல்லோரும் இப்போது என்னை அன்புடன் வரவேற்றதற்கு உங்கள் எல்லோருக்கும் இன்னொரு முறை நன்றி செலுத்துகிறேன்.

### II.—QUESTIONS AND ANSWERS.

## STARRED QUESTIONS.

*Wild life and birds*

*121 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there is any proposal to make a survey of the wild life and birds that are available in the State; and

(*b*) what the wild species are that are found in the Kanyakumari district and Shencottah taluk?

[9th February 1959

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) No such survey has so far been made in this State. However, the District Forest Officer, Gudalur, has been recently instructed to carry out the enumeration of the wild life in the Game reserves in the Mudumalai Range annually in the months of February-March and submit a report to the Government in April.

(b) Wild animals such as tiger, panther, deer, elephants, etc., which are commonly found in other parts of the State are found in the forest areas of Kanyakumari district and Shencottah taluk.

SRI K. SATTANATHA KARAYALAR : முதுமலை வட்டாரத்தில் காணப்பட்டிருப்பதைப் போன்று, இதர பாகங்களிலும் மிருகங்கள் காணப்படுகின்றனவே, அவைகளையும் " என்யூமெரேட் " பண்ணுவதற்கு ஏற்பாடு செய்யப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : எல்லா மிருகங்களையும் கணக்கெடுக்கும் உத்தேசம் அரசாங்கத்திற்கு இல்லை. ஆனால், ஆனை மலையிலும், கன்னியாகுமரி ஜில்லாவிலும்கூட " பர்ட் ஸாங்சுவரி "களை அமைக்கலாம் என்ற உத்தேசம் அரசாங்கத்திற்கு இருக்கிறது.

SRI A. A. RASHEED : Sir, have the Government any information as to the number of man-eaters in these forests?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Perhaps the Government have that information, but I do not have it with me now.

SRI V. SUBBIAH : வன விலங்குகளிலும், பறவைகளிலும், விவசாயப் பொருள்களை அழிக்கும் இனங்கள் இருக்கின்றன. அப்படிப்பட்ட பறவைகள் பயிர்களை அழித்துவிடாமல் காப்பாற்றுவதற்கு ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா ? அப்படிப்பட்ட பறவைகளை அழிக்க ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : விவசாயத்திற்கு பாதகம் அளிக்கும் விலங்குகள் யாதாயினும் அவைகளைத் தவிர்க்க அரசாங்கம் அவ்வப்போது நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டு தான் இருக்கிறது. இந்த விஷயத்தில் விவசாயிகளுக்கும் ஆதரவு அளிக்கப்பட்டு வருகிறது.

SRI T. T. DANIEL : May I know whether any survey has been made, whether steps are being taken to preserve rare species and may I know when the Government would open the game sanctuary in Kanyakumari district?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I have just now answered that there is a proposal with the Government to have a game sanctuary in the Kanyakumari district.

*Bird Sanctuary, Vedanthangal*

* 122 *Q*.—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) the steps taken to improve the Bird Sanctuary at Vedanthangal;

(b) whether there is any intention to ring the young ones in Vedanthangal; and

(c) if so, what steps are taken to do the same?

9th February 1959]

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The Government have sanctioned the provision of the following facilities and improvements to the Vedanthangal Bird Sanctuary :

1. Increased water-supply to the lake at Vedanthangal.
2. Extension of the lake bund.
3. Insulating the ditch.
4. Restocking of Baringtonia trees.
5. Planting of fruit trees.
6. Construction of observation posts.
7. Provision of dust bin.
8. Provision of canteen.
9. Provision of bus service.
10. Declaration of the area as reserved land.
11. Prohibition of shooting of birds.
12. Prohibition of fishing.
13. Ban on photography.

(*b*) & (*c*) The answer is in the negative.

SRI K. SATTANATHA KARAYALAR : இப்போது வேடந்தாங்கலுக்குப் போய்வருவது மிகவும் கஷ்டமாக இருப்பதால், அந்த இடத்திற்குச் செல்ல பஸ் போக்குவரத்திற்கும், அங்கே ஒரு காண்டீன் அமைப்பதற்கும் அரசாங்கம் முதலிடம் கொடுத்து ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இவைகள் கவனிக்கப் பட்டுத்தான் வருகின்றன.

SRI A. A. RASHEED : Sir, is it a fact that some of the species of birds in this sanctuary migrate from Australia and Russia?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : There is no doubt that some of the birds have migrated from very long distances, but I cannot say whether any birds have come from Australia or other countries.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : What is the Central aid we are receiving for the improvement of this bird sanctuary?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : We expect Central help for the construction of a Travellers' Bungalow in that place.

*Permission to open IV Form in schools*

* 123 *Q.*—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Finance be pleased to state—

(*a*) the number of applications received seeking permission to start IV Form during the year 1958–59;

(*b*) the number (i) permitted; and (ii) rejected ; and

(*c*) whether particular reasons have been assigned in every case of rejection;

(*d*) whether these applications were disposed of before the commencement of in academic year 1958–59: and

(*e*) if not, the reasons therefor?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) 120, Sir.

(*b*) (i) 50 and (ii) 70.

(*c*) Yes, Sir, in all the cases in which the Government issued orders.

(*d*) All applications seeking permission to start Form IV during 1958–59 received well in advance of the beginning of the academic year were disposed of without delay. Orders of rejection or grant of permission might have been received by some managements after the commencement of the academic year.

(*e*) Some applications were received late and it was not therefore possible to dispose of them before the commencement of the academic year.

SRI S. LAZAR : 70 மனுக்கள் நிராகரிக்கப்பட்டிருக்கின்றன. இவைகள் நிராகரிக்கப்பட்டதற்கு பொதுவான காரணங்கள் என்னென்ன என்று கனம் அமைச்சர் தெரிவிப்பாரா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சாதாரணமாக, போதுமான கட்டிட வசதிகள் இல்லாதது, மனுச் செய்துகொண்டுள்ள பள்ளிக்கூடத்திற்குப் பக்கத்தில் வேறு பள்ளிக்கூடங்கள் இருப்பது, பள்ளிக்கூடத்திற்கு விளையாட்டு மைதான வசதி இல்லாதது முதலிய காரணங்களால் இவைகள் நிராகரிக்கப்பட்டிருக்கின்றன.

SRI S. LAZAR : சம்பந்தப்பட்ட விதிகளின்படி, பள்ளிக்கூடக் கட்டிடங்கள் மிகப் பெரியனவாக அமைக்கப்பட வேண்டியிருக்கின்றன. அவைகளை (விதிகளை) மாற்றியமைக்கும்போது, " சீப்-கன்ஸ்ட்ரக்ஷன் "-ல் கட்டினாலும் அனுமதி கொடுக்கலாம் என்னும் முறையில் அவைகளை மாற்றி யமைக்க அரசாங்கம் முன்வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த மாதிரியான கட்டிடம் தான் ஆரம்பத்தில் இருக்க வேண்டும் என்று இல்லை. கட்டிட வசதி முதலில் போதுமானதாக இருந்தால் அனுமதி கொடுத்து விடுகிறோம். பின்னர் ஸ்திரமாகக் கட்டும்போது தகுந்த முறையில் கட்டிடங்கள் கட்டலாம். இருந்தாலும், ஆரம்பத்தில் ஓரளவு கட்டிட வசதி அவசியம்தான். இந்த அடிப்படையில்தான் அனுமதிகள் அளிக்கவோ மறுக்கவோ படுகின்றன.

SRI M. D. THIAGARAJA PILLAI : அநேக மனுக்கள் கட்டிட வசதி இல்லை என்ற காரணத்தைக்கொண்டு ஜில்லா போர்டாலும் அரசாங்கத்தாலும் மறுக்கப்படுகின்றன. எனவே, தனிப்பட்டவர்கள் ஜில்லா போர்டு பாடசாலைகளை எற்று நடத்த முன்வந்தால் அவர்களுக்கு அனுமதி அளிக்க அரசாங்கத்தார் முன்வருவார்களா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது தனியாகக் கேட்கப்பட வேண்டிய கேள்வி. இது மூலக் கேள்வியுடன் சம்பந்தப்பட்டதில்லை.

SRI C. MUTHIAH : இதுவரையில் இந்த மனுக்களைப் பரிசீலித்து உத்தரவு போடுவதை டி.பி.ஐ. ஆபீஸே செய்துவந்தது. இந்த ஆண்டு இந்த அலுவல் கவர்ன்மெண்டுக்கு வந்ததற்குக் காரணம் என்ன? இதனால் தாமதம் ஏற்படவில்லையா ? இனிமேல் இந்தப் பொறுப்பு மீண்டும் டி.பி.ஐ-யிடமே ஒப்படைக்கப்படுமா ?

9th February 1959]

THE HON. SRI C. SUBRAMANIAM : இவைகளை கவனித்து உத்தரவு போடுவதை டி.பி.ஐ-யே செய்யலாம். மனுக்கள் நிராகரிக்கப்பட்டால் சர்க்காருக்கு அப்பீல்கள் வருகின்றன. அந்த சந்தர்ப்பங்களில்தான் சர்க்கார் உத்தரவு போட வேண்டியிருக்கிறது. சர்க்காருக்கு அப்பீல் அனுப்புவது வேண்டாம் என்றால், இந்தப் பொறுப்பை விட்டுவிடுவதற்கு நாங்கள் தயார்.

SRI S. LAZAR : மாணவர்களை மற்றப் பள்ளிகளுக்குச் செல்ல விடாமல் தன்னிடமே நிறுத்தி வைத்துக்கொள்ளும் பள்ளிகளுக்காவது அரசாங்கம் அதிகமான நிபந்தனைகளைப் போடாமல் அனுமதியளிக்க நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்த யோசனைப்படி அனுமதி அளிக்க ஆரம்பித்தால், ஒவ்வொரு பள்ளி நிர்வாகத்தினரும் தங்கள் பள்ளியிலேயே பிள்ளைகளை நிறுத்தி வைத்துக்கொண்டு அனுமதி கோர ஆரம்பிப்பார்கள். எனவே, எங்கெங்கே வசதிகள் இருக்கின்றனவோ, எங்கெங்கே பள்ளிக்கூடங்கள் அவசியமோ அங்கெல்லாம்தான் அனுமதி வழங்கப்படும்.

SRI D. S. AUTHIMOOLAM : " சீப் டைப்-டிஸைன் " ஏதாவது சர்க்காரால் கண்டுபிடிக்கப்பட்டிருக்கிறதா? இல்லாவிட்டால் அது ஒன்றைக் கண்டுபிடிக்க சர்க்கார் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : மக்களே " சீப் டிஸைன் " கண்டுபிடித்திருக்கிறார்கள்.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR: இப்போது 10,000 ரூபாய்க்கு ஏற்கெனவே சர்க்கார் கிராண்டு வாங்கிய கிராமங்களுக்குக் கிராண்டு கிடையாது என்று விதிகள் இருக்கும்போது, பல பள்ளிகள் கிராண்டுகள் வாங்க முடியாமலிருக்கின்றன. அப்படிப்பட்ட பள்ளிக் கூடங்களில் போதிய வசதிகள் செய்துகொடுக்க அரசாங்கம் ஏற்பாடு செய்திருக்கிறதா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இது " லோகல் டெவலப்மெண்ட் " சம்பந்தப்பட்ட விதிகளைப் பொறுத்தது. இதற்கும் மூலக் கேள்விக்கும் சம்பந்தமில்லை.

### *Economic condition of the Harijans*

*125 *Q*.—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) ஹரிஜன சமூகத்தினர் பொருளாதாரத் துறையில் முற்போக்கு அடைய என்னென்ன நடவடிக்கை 1957-58-ல் அரசாங்கத்தாரால் எடுத்துக்கொள்ளப்பட்டுள்ளன ? 9-10 a.m.

(ஆ) இதற்கென ஒதுக்கியுள்ள தொகை எவ்வளவு ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) Though the activities of the Harijan Welfare Department as a whole are generally calculated to improve the economic conditions of the Scheduled Castes, the Government sanctioned in 1957–58 special schemes for the grant of financial assistance to 4,627 Scheduled Caste families at Rs. 285 each for agricultural purposes like the purchase of plough bulls, agricultural implements and seeds and to 242 Scheduled Caste families at Rs. 1,500 each for sinking irrigation wells. In addition to the continuance of 22 Cottage Industrial Co-operative Societies started in the previous year, eleven new cottage industrial

[9th February 1959

co-operatives were started in 1957–58 to benefit 981 Harijans. Subsidies in the shape of tools and materials were given to 680 technically trained persons to settle down in trade or business.

(b) A sum of Rs. 23·82 lakhs was allotted for these special schemes in 1957–58.

SRI P. G. MANICKAM : ஒவ்வொரு ஜில்லாவிலுமுள்ள ஹரிஜனங்களுடைய பொருளாதார நிலை உயர வேண்டுமென்றால் ஆங்காங்கு கைத்தொழில் பயிற்சி நிலையங்கள் ஏற்படுத்துவது அவசியமென்பது எல்லோரும் ஒப்புக்கொள்ள கூடிய விஷயமாகையால் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஒவ்வொரு கைத்தொழில் பயிற்சி நிலையம் ஏற்படுத்த சர்க்கார் நடவடிக்கைகள் எடுக்குமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : கூட்டுறவு முறையில் எங்கெல்லாம் கைத்தொழில்கள் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றனவோ அங்கெல்லாம் வேண்டிய உதவி அளிக்கப்பட்டு வருகிறது. அவைகளில் பயிற்சி பெறுகிறவர்களுக்கு மான்யமும் அளிக்கப்பட்டு வருகிறது.

SRI M. D. THIAGARAJA PILLAI : ஹரிஜன முன்னேற்றத்திற்காக அநேக லட்சக்கணக்கான ரூபாய்கள் ஒதுக்கப்பட்டிருந்தபோதிலும் ஒவ்வொரு சேரியிலிருந்தும் மிக அவசியமான குடி தண்ணீர் வசதி, ரஸ்தா வசதி போதாது என்று வருகிற அநேக மகஜர்களைப் பரிசீலனை செய்து திட்டங்களை நிறைவேற்றுவதற்கு, போதிய இன்ஸ்பெக்டர்கள் இல்லாததால் மிகத் தாமதம் ஏற்படுகிறது. ஆகவே அதிகப்படி இன்ஸ்பெக்டர்களை நியமிப்பதற்கு அரசாங்கம் ஏற்பாடு செய்யுமா ?

THE HON. SRI P. KAKKAN : இக்கேள்வி, ஹரிஜனங்களின் பொருளாதார முன்னேற்றத்தைக் கொண்டுவருவதற்கான கேள்வியாகும். ஹரிஜனங்கள் வாழ்கிற இடங்களில் பாதைகள் இல்லாவிட்டால் நிலத்தை அக்வயர் செய்து பாதைகள் அமைக்க துரிதமாக ஏற்பாடுகள் செய்யப்படும்.

SRI S. LAZAR : அமைச்சர் அவர்கள் எடுத்துச்சொல்லிய சலுகைகளும், வசதிகளும் ஹரிஜன கிருஸ்துவர்களுக்கு கொடுக்கப்படுகிறதா ? அப்படி கொடுக்கப்படாததற்கு காரணங்கள் என்ன ?

THE HON. SRI P. KAKKAN : இவை, ஹரிஜன கிருஸ்துவர்களுக்கு கிடையாது. மத்திய அரசாங்கம் எந்த அடிப்படையில் இந்த நிதியை கொடுக்கிறதோ அந்த அடிப்படையில்தான் செலவழிக்கப்படுகிறது என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

*Pablo boats*

MR. SPEAKER : The hon. Member Sri M. Jagannathan is not in his seat. The question and answer will be printed in the official proceedings.

(Sri A. A. Rasheed rose.)

MR. SPEAKER : If the hon. Member wants to put the question, he must get up quickly.

* 126 *Q.*—SRI A. A. RASHEED (on behalf of Sri M. Jagannathan) : Will the Hon. the Minister for Local Administration be pleased to state—

(*a*) the number of Pablo type fishing boats distributed so far to the South Arcot district;

9th February 1959]

(*b*) the number of boats distributed to each of the places in the district; and

(*c*) the number of boats distributed to Cuddalore areas?

THE HON. SRIMATHI LOURDHAMMAL SIMON: (*a*) Five.

(*b*) Sonakuppam—Two.

Killai—One.

Porto Novo—One.

Cuddalore—One.

(*c*) Three.

*Nathaswaram*

*127 *Q.*—SRI A. VEDARATHNAM: கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) நாதஸ்வரம் செய்யும் தொழிலை வளர்க்கத் திட்டம் ஏதேனு முண்டா?

(ஆ) அப்படியானால், அதன் விவரம் என்ன?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) No, Sir.

(*b*) Does not arise.

SRI A. VEDARATHNAM: இந்தத் தொழில் தெரிந்தவர்கள் மிகச்சிலரேயிருப்பதால் இந்த நாதஸ்வரம் செய்கிற தொழிலுக்கு நாம் புத்துயிர் கொடுக்கவில்லையானால் அடுத்த தலைமுறையில் இந்த வேலை செய்கிற ஆட்களே இல்லாமல் போய்விடுவார்கள். அதற்கு அரசாங்கம் என்ன ஏற்பாடு செய்ய யோசித்திருக்கிறது?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: எனக்குத் தெரிந்த வரையில் இந்த தொழிலில் ஈடுபட்டிருக்கிறவர்கள், தஞ்சாவூர் ஜில்லாவிலுள்ள நரசிங்கம்பேட்டை என்ற கிராமத்தில்தான் செய்கிறார்கள். இதைச் செய்வதில் கஷ்டமொன்றுமில்லை. வீணை செய்வது போல் அல்ல. மேலும் அகிலயிந்தியா ஹாண்ட்டிகிராப்ட்ஸ் போர்ட் அரசாங்க உதவிபெற்று சங்கீதவாத்யாலயம் ஒன்றை சென்னையில் அமைத்திருக்கிறது. அதிலுள்ள மாணவர்களுக்கு சங்கீத கருவிகள் செய்ய சொல்லிக்கொடுக்கப்படுகிறது. அதில் நாதஸ்வரமும் செய்யலாம்.

SRI M.R. KANDASWAMI MUDALIYAR: இது, கலைகளில் மிகச் சிறந்த கலையாக இருப்பதால் இது வளர்ச்சி பெறுவது அவசியம். ஆகவே இந்தக் கலையில் பயிற்சி பெறக் கூடியவர்களுக்கு அரசாங்கம் ஏதாவது ஒத்தாசை புரிகிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: இது, நாதஸ்வரம் செய்வதைப் பற்றிய கேள்வி. கலையைப் பற்றியதல்ல. கலைப் பயிற்சிக்கு ஆதரவு கொடுக்க தேவஸ்தானங்கள் சார்பாக ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகிறது.

[9th February 1959

SRI V. K. KRISHNAMURTHY : இசைக் கருவிகளில் ஒன்றாகிய யாழ் உற்பத்தி செய்வதற்கு அரசாங்கம் தனி முயற்சி எடுத்து உதவி செய்யமுடியுமா என்று கேட்டுக்கொள்வதுடன் இது மிகவும் கடுமையானது என்று அமைச்சர் அவர்களே கூறியிருப்பதால் தனியாக இதற்கு சலுகைகள் கொடுப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஆம், அதற்கு கூட்டுறவு சங்கங்கள் அமைக்கப்பட்டு வேண்டிய ஆதரவு அளிக்கப்பட்டு வருகிறது.

*Ambar charkas*

*128 *Q.*—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவு செய்து பதிலளிப்பாரா—

(அ) இந்த மாநிலத்திற்கு ஆண்டுதோறும் எத்தனை அம்பர் ராட்டை தேவையாயிருக்கிறது ?

(ஆ) இவை எங்கே செய்யப்படுகின்றன ?

(இ) இதற்குத் தேவையான இரும்பு உறுப்புகள் இங்கே தயாராகிறதா ? இல்லையெனில் எங்கிருந்து வருகிறது ?

(ஈ) அவற்றை இங்கே தயாரிக்க என்ன முயற்சி எடுக்கப்பட்டிருக்கிறது ?

(உ) எப்போது அவ்வேலை பூர்த்தியாகும் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Nine thousand Ambar charka sets will be required by this State during 1958–59 and 21,000 Ambar charka sets will be required during 1959–60.

(*b*) At present, complete Ambar charkha sets are manufactured at the Saranjam Karyalayas at Guindy in Madras and Pettai in Tirunelveli district. The remaining four Saranjam Karyalayas at S.V. Nagaram in North Arcot district, Vadalur in South Arcot district, Tirupur in Coimbatore district and Tiruchirappalli in Tiruchirappalli district will start production of complete Ambar charka sets early this year.

(*c*) The metallic parts required for the manufacture of Ambar charkha sets are not manufactured in this State at present. The metallic parts required by the Saranjam Karyalayas for the manufacture of Ambar Charkha sets are now being purchased from the Khadi and Village Industries Commission.

(*d*) This Government have set up a Central Workshop at Madras for the manufacture of the metallic parts required for assembling of Ambar charka sets.

(*e*) Even though the construction of the building for the Central Workshop at Madras has been completed, the workshop could not start functioning for want of certain machinery required for the manufacture of the metallic parts for the Ambar charka sets. These items of machinery are not available in India at present and they have to be imported from foreign countries such as United Kingdom, Germany, etc. As sanction of foreign exchange is necessary, this Government have taken up the matter with the Union Government. Orders of the Government of India for the sanction

9th February 1959]

of foreign exchange applied for are still awaited. The Central Workshop will go into production only after receipt of all items of machinery required for the manufacture of metallic parts for Ambar charka sets.

SRI A. VEDARATHNAM : ஏராளமான அம்பர் சர்க்கா இந்த மாநிலத்தில் தேவையாயிருக்கிறது என்ற காரணத்தினால் அதற்கான இரும்புக் கருவிகள் உற்பத்தி செய்யக்கூடிய இயந்திரங்கள் எப்பொழுது நம் மாநிலத்திற்கு கிடைக்குமென்று அரசாங்கம எதிர்பார்க்கிறது ? அது வரையில் வெளியில் இருந்துதான் வாங்கவேண்டுமா ? இங்கு செய்யக் கூடியவற்றையாவது செய்ய முயற்சி எடுத்துக்கொள்ளப்படுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதுபற்றி எல்லாவித முயற்சிகளும் எடுத்துக் கொள்ளப்பட்டுவருகின்றன. ஆனால் எப்பொழுது எல்லா இயந்திரங்களும் கிடைக்குமென்று நான் சொல்வதற்கில்லை.

SRI M. R. KANDASWAMI MUDALIYAR : அம்பர் ராட்டைக் கொண்டு நூற்பவர்களுக்கு அதிகக் கூலி கிடைப்பதால், இரும்பு கிடைக்கவில்லை என்ற காரணத்தை வைத்து நிதானமாக இல்லாமல் வெளியிலிருந்து இரும்பு தருவித்து சீக்கிரம் இந்த அம்பர் ராட்டை எல்லாயிடங்களிலும் பரவலான முறையில் கிடைக்கும்படிச் செய்வதற்கு அரசாங்கம் துரிதமாக வேண்டிய நடவடிக்கைகள் எடுக்க முயற்சி எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அங்கத்தினர் கூறியது போல் அரசாங்கம் வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டிருக்கிறது என்பது என் பதிலிருந்து விளங்கும்.

SRIMATHI RAJATHI KUNCHITHAPATHAM : அம்பர் சர்க்கா செய்வது ஒரு இலாகாவும் அதை விநியோகிப்பது இன்னொரு இலாகாவும் என்று இருப்பதால் விநியோகம் செய்வதில் தடை ஏற்படுகிறது. அம்பர் சர்க்கா டயரக்டர் அவர்களிடத்தில் அம்பர் சர்க்கா செய்கிற பொறுப்பையும் கொடுத்தால் அவைகளை விநியோகிப்பதிலும் புது பரிசிரமாலயங்கள் திறப்பதிலும் தாமதம் ஏற்படாது என்பதை அமைச்சர் அவர்கள் உணர்ந்து அதற்கு ஒரு விளக்கம் தருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அம்பர் சர்க்கா செய்வது ஒரு தொழில். ஆகவே அது தொழில் இலாகாவிடம் இருக்கிறது. அதையும் காதி டயரெக்டர் அவர்களிடம் கொடுத்தால் அவர் வேலை அதிகப் படும். இப்பொழுதுள்ள முறையில் எவ்வித கஷ்டமும் இல்லை.

*House-rent allowance*

* 129 Q.—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Finance be pleased to state whether there is any proposal to give House-rent allowance to Government servants, who draw less than Rs. 150 per mensem, serving in villages?

THE HON. SRI C. SUBRAMANIAM : There is no such proposal under consideration.

SRI A. A. RASHEED : Sir, do the Government servants working in the City and towns get any house-rent allowance? If so, how much?

THE HON. SRI C. SUBRAMANIAM : They get house-rent allowance. But I do not have the figures with me now.

[9th February 1959

*Prizes to Harijan students*

*130 Q.—SRI P. G. MANICKAM: கனம் பொது மராமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) 1956, 1957, 1958-ல் பரீட்சையில் தேர்ச்சி பெற்ற ஹரிஜன மாணவர்களுக்கும், மாணவிகளுக்கும் பரிசுகளை வழங்குவதற்காக ஒதுக்கப் பட்ட தொகை எவ்வளவு ?

(ஆ) ஒவ்வொரு வருஷமும், எத்தனை பேர்களுக்கு எத்தனை ரூபாய் கள் மதிப்புள்ள என்னென்ன பரிசுகள் வழங்கப்பட்டன ?

THE HON. SRI P. KAKKAN : (*a*) No amount was allotted for the year 1956–57 and 1957–58. During the current year a sum of Rs. 1,560 has been sanctioned towards the award of medals to the Harijan students who came out successful in the 1957 S.S.L.C. Examination in each district.

(*b*) No prizes have been given so far.

SRI P. G. MANICKAM: எஸ்.எஸ்.எல்.ஸி. வகுப்பைத் தவிர மேல் வகுப்பு பரீட்சையிலும் தேர்ச்சி பெறுகிற மாணவர்களுக்குப் பரிசு கொடுப்பார்களா ?

THE HON. SRI P. KAKKAN : அப்படி இல்லை.

*Veterinary Colleges*

9-20 a.m. *131 Q.—SRI A. VEDARATHNAM : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) நம் மாநிலத்தில் எத்தனை கால்நடை மருத்துவக் கல்லூரிகள் இருக்கின்றன ?

(ஆ) இவற்றில் ஆண்டுதோறும் படிக்கும் மாணவர்கள் எத்தனை பேர் ?

(இ) இவர்கள் எந்தெந்த மாநிலத்தைச் சேர்ந்தவர்கள் ? எத்தனை பேர் ?

(ஈ) ஆண்டுதோறும் நம் மாநிலத்தில் கால்நடை மருத்துவரின் தேவை என்ன ? அதில் பற்றுக்குறை ஏதேனும் உண்டா ?

(உ) அப்படியானால், அதை நிவர்த்திக்க அரசாங்கம் என்ன முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) One college in Madras City.

(*b*) The number of students admitted to the B.V.Sc. Course every year is 120.

(*c*)

| | |
|---|---|
| Madras ... ... ... ... ... ... | 77 |
| Andhra Pradesh ... ... ... ... | 23 |
| Mysore ... ... ... ... ... ... | 5 |
| Kerala ... ... ... ... ... ... | 2 |
| Jammu and Kashmir ... ... ... ... | 4 |
| Foreign students nominated by the Government of India ... ... ... ... ... ... | 6 |
| Demobilised personnel, etc. ... ... ... | 3 |
| Total ... | 120 |

9th February 1959]

(d) Average annual requirements about ... ... 110
Estimated deficit per year ... ... ... 30

(e) Total admissions to the B.V.Sc. Course were increased from 80—100 during the academic year 1955–56 and again from 100 to 120 from 1956–57 onwards. The Government of India have also been addressed to dereserve the 23 seats allotted to Andhra Pradesh as they have since got increased facilities in their State itself and their final reply is awaited.

**Sri A. VEDARATHNAM** : நம்முடைய மாநிலத்தில் கால்நடை மருத்துவர்களுடைய பற்றுக்குறை மிகமிக அதிகமாக இருப்பதனால் பல ஆஸ்பத்திரிகளைத் திறந்தும் அங்கே இன்னும் டாக்டர்களை நியமிக்க முடியாமல் இருக்கிறது. ஆகவே அதிகமான பேர்களுக்கு கால்நடை வைத்தியப் பயிற்சியை அளிக்க அக் காலேஜில் ஷிப்டு முறையை அனுசரிக்க இந்த அரசாங்கத்தார் முன் வருவார்களா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : இந்தப்பற்றுக் குறையை நீக்க வேண்டுமென்று தான் வெடர்னரி காலேஜில் சேர்ந்து படிக்கக் கூடிய மாணவர்களின் எண்ணிக்கையை அதிகப்படுத்தியிருக்கிறோம். ஷிப்டு முறையை ஏற்படுத்துவது என்பது முடியாத காரியம். அதற்கு லாபரடிரி வசதி வேண்டும்.

**Sri V. SUBBIAH** : போஸ்ட் க்ராஜ்வேட் மாணவர்களுக்கு நம் ராஜ்யத்தில் எவ்வளவு ஸ்டைபண்டு கொடுக்கப்படுகிறது ?

**Mr. SPEAKER** : அடுத்த கேள்வி போஸ்ட் க்ராஜ்வேட்டைப் பற்றியது. இந்த உபகேள்வியை அதில் போடுங்கள்.

**Sri M. R. KANDASWAMY MUDALIYAR** : போதுமான கால் நடை வைத்தியர்கள் இல்லாத காரணத்தினால் அங்கே உள்ள ஆடு மாடு கள் நஷ்டம் அடைகின்றன. ஆகையால் ஷிப்டு முறையை வெடர்னரி காலேஜில் அனுசரிப்பதானது கொஞ்சம் அனுகூலமாக இருக்கும் என்ற காரணத்தினால் அமைச்சர் அவர்கள் அதை ஏற்படுத்த முன் வருவார்களா என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : முன்பே கனம் வேத ரத்தினம் அவர்களுடைய கேள்விக்கு நான் பதில் சொல்லியிருக்கிறேன். அதாவது ஷிப்டு முறையை ஏற்படுத்துவது அசௌகரியமானது, சாத்திய மில்லை என்று சொன்னேன்.

**Sri V. R. RAMASWAMY MUDALIYAR** : I understand that both in the Kerala and Mysore States, they have started Colleges. If it is a fact, will the Hon. Minister kindly address the Government of India and see that no seats are allotted to those States?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : Afer all, we allot very few seats for those States. I shall, however, look into the question.

### *Veterinary Colleges*

* 132 Q.—**Sri A. VEDARATHNAM** : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கால்நடை கல்லூரியில் உயர்தரக் கல்லூரி வகுப்பு (Post-Graduate) எப்போது ஆரம்பிக்கப்பட்டது ?

(ஆ) இந்த வகுப்பில் எந்தெந்த மாநிலத்தவர் எத்தனை பேர் படிக்கிறார்கள் ?

(இ) கால்நடை மருத்துவக் கல்லூரியை விஸ்தரிக்கும் உத்தேசம் அரசாங்கத்திற்குண்டா ? அப்படியாயின் அதன் விபரமென்ன ?

[9th February 1959

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) On 1st September 1958.

(*b*) Eighteen students belonging to different States as stated below are undergoing the course :—

| | Students. |
|---|---|
| Madras ... ... ... ... ... ... | 9 |
| Andhra Pradesh ... ... ... ... ... | 5 |
| Mysore ... ... ... ... ... ... | 1 |
| Kerala ... ... ... ... ... ... | 1 |
| Bihar ... ... ... ... ... ... | 1 |
| Orissa ... ... ... ... ... ... | 1 |

(*c*) Yes.

Three more groups in the M.V.Sc. Degree course with nine students for each group are proposed to be introduced from 1959–60 onwards as follows :—

Group III—
Physiology,
Pharmacology, and
Therapeutics.

Group IV—
Anatomy,
Surgery, and
Gynaecology.

Group V—
Medicine,
Hygiene, and
Meat Inspection.

SRI A. VEDARATHNAM : இந்த மாநிலத்திலேயே கால்நடை மருத்துவர்கள் பற்றாக்குறையாக இருக்கும்போது வெளி மாகாணத்து மாணவர்களை இங்கே சேர்க்க வேண்டிய அவசியம் என்ன ? அந்த அந்த மாநிலங்களிலேயே அவர்களுக்குப் பயிற்சி கொடுக்கும்படியாகச் செய்ய முடியாதா ? அல்லது வேறு மாநிலங்களிலே உள்ள கால்நடைக் கல்லூரிகளில் படிக்க வசதி செய்யக்கூடாதா ? அதுவும் நம்முடைய பற்றாக் குறை நீங்கும் வரைக்கும் என்று கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது போஸ்ட்-கிராஜ்வேட் பற்றியது. ஒவ்வொரு மாநிலத்திலும் உள்ள கல்லூரியில் அமைக்க முடியாது. ஆகவே மத்திய அரசாங்கத்தின் அனுமதியைப் பெற்று இங்கே ரீஜனல் போஸ்ட்-கிராஜ்வேட் கோர்ஸ் ஏற்படுத்தப்பட்டுள்ளது. ஆகவே இதர மாகாணத்தவர்களையும் சேர்த்துக்கொள்ளத்தான் வேண்டும்.

SRI V. SUBBIAH : போஸ்ட்-கிராஜ்வேட் மாணவர்களுக்கு ஸ்டைபண்டு கொடுக்கப்படுகிறதா ? கொடுக்கப்படவில்லையென்றால் கொடுக்கும் உத்தேசம் உண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : ஸ்டைபெண்டு ஓரளவு கொடுக்கப்பட்டு வருகிறது. அதைப்பற்றிய தகவல் என்னிடம் இல்லை.

9th February 1959]

*Institute of Veterinary Preventive Medicine, Ranipet*

* 133 *Q.*—Sri S. B. ADITYAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the employees working in the Institute of Veterinary Preventive Medicine, Ranipet, have been made permanent; and

(*b*) whether they are given weekly off-day?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) The employees (mazdoors) working in the Institute of Veterinary Preventive Medicine, Ranipet, are paid from contingencies and are not governed by any statutory rules. The question of making them permanent does not arise. However, they are retained permanently according to the number of posts sanctioned.

(*b*) Yes. The mazdoors are permitted to avail themselves of the afternoon on Sundays and other authorised public holidays by turns (half the staff working and the other half availing the holidays) without dislocation to the normal work of the institute.

Sri S. B. ADITYAN : ஒரு வருஷம் அல்லது இரண்டு வருஷம் காலவரை ஏற்படுத்தி அதற்கு மேலும் தொடர்ந்து வேலை செய்து வருகிற தொழிலாளர்களை பர்மனென்ட் செய்ய ஏற்பாடு செய்வார்களா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : அதைப்பற்றித் தனியாகக் கேள்வி போட்டால் நான் பார்த்து பதில் சொல்கிறேன்.

*Irrigation facilities*

* 134 *Q.*—Sri M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Public Works be pleased to state with reference to the reply given to starred question No. 635 on 30th September 1958, the nature of further action taken for providing irrigation facilities to the villages of Kanthadu and Kottikuppam in Tindivanam taluk, South Arcot district?

The Hon. Sri P. KAKKAN : The proposals for the provision of irrigation facilities to the villages of Kanthadu and Kottikuppam in Tindivanam taluk of South Arcot district by forming irrigation tanks in these villages have been dropped after careful examination by the Chief Engineer (Irrigation) and the Collector of South Arcot.

Sri T. S. RAMASWAMY PILLAI : May I know the reasons to why this proposal was dropped?

The Hon. Sri P. KAKKAN : காந்தடு கிராமத்தில் புதியதாக ஒரு குளத்தைச் செப்பனிட வேண்டுமானால் அதனால் பிரயோஜனமில்லை. முப்பது, முப்பத்திரண்டு ஏக்கராவுக்குத்தான் பயன்படும். 15 டன் தான் லாபகரமாக இருக்கிறது. செலவு அதிகமாகிறது. தவிர ஹரிஜனங்களை பாதிக்கிறது என்பதனால் அது கைவிடப்பட்டிருக்கிறது.

[9th February 1959

*Temple Executive Officers*

* 135 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether Executive Officers of the Hindu Religious and Charitable Endowments Board are entitled for pension or Provident Fund ; and

(*b*) whether it is a fact that the service conditions of the Non-Gazetted Government Officers are applicable to the Executive Officers of the Temples?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) No, Sir.

SRI K. SATTANATHA KARAYALAR : இவர்களுடைய சர்வீசும், நிபந்தனையும் கிட்டத்தட்ட என்.ஜி.ஓ.-க்களுக்கு இருப்பது போலவே இருக்கிறதா இல்லையா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இவர்கள் குறிப்பிட்ட தேவஸ்தானத்தில் சிப்பந்திகளாக இருக்கிறார்கள். அறநிலைய பாதுகாப்பு இலாகா சிப்பந்திகளும் அல்ல.

SRI C. MUTHIAH : அவர்களுடைய விண்ணப்பத்தின் பேரில் இந்த ஆண்டாவது ஏதாவது நடவடிக்கை எடுத்துக் கொள்ளும்படியாக தேவஸ்தான இலாகா அதிகாரிகளுக்கு உத்தரவு போட முடியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அதைப்பற்றி அறநிலைய பாதுகாப்புக் கமிஷனர் கவனம் செலுத்திக்கொண்டு வருகிறார்கள்.

*Pest attack on paddy crops in Tirunelveli district*

* 136 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) the taluk and the area under paddy crops in each taluk affected by pest in Tirunelveli district recently ; and

(*b*) the loss in the production of paddy due to the pest attack?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) *Taluks and area affected*—

| | ACRES. |
|---|---|
| Srivaikuntam ... ... ... ... ... | 300 |
| Tenkasi (including Shencottai) ... ... ... | 700 |
| Kovilpatti ... ... ... ... ... | 250 |
| Sankarankoil ... ... ... ... ... | 200 |
| Ambasamudram ... ... ... ... ... | 1,000 |
| Tirunelveli ... ... ... ... ... | 800 |
| Tiruchendur ... ... ... ... ... | 200 |
| Total ... | 3,450 |

(*b*) The loss will be about 10 to 15 per cent.

9th February 1959]

SRI K. SATTANATHA KARAYALAR : விளைவு பாதிக்கப்பட்ட இந்த வட்டாரத்திலுள்ள நிலங்களுக்கு கிஸ்தி ரெமிஷன் கொடுக்க ஏற்பாடு செய்வார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கிஸ்தி ரெமிஷனுக்கு இடம் இருந்தால் அதை ரெவின்யூ இலாகா கவனிக்கும்.

*Charcoal bags*

* 137 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) விறகு வண்டிகளுக்கு அனுமதிச்சீட்டு இருப்பதுபோல் கரி மூட்டைகளை ஏற்றிச் செல்ல அனுமதி உண்டா ?

(ஆ) இல்லை என்றால் ஏன் ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) Under the existing rules, no permit is necessary for the transport of charcoal under the Timber Transit Rules worked by the Forest Department. A proposal to bring charcoal within the scope of the rules is separately under consideration. 9–30 a.m.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், இப்பொழுது காடுகளை வைக்க வேண்டும் என்று சொல்லக்கூடிய நேரத்தில் விறகு வண்டிகள் போனால் மட்டும் அனுமதி வாங்கிக் கொண்டு போகவேண்டுமென்று சொல்லப்படுகிறது. ஆனால் கரியாக ஆக்கி எந்த விதமான அனுமதியும் இல்லாமல் நூற்றுக்கணக்கான டன்கள் கொண்டு போகும் நிலைமை இருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது பற்றிக் கவனிக்கப்பட்டு வருகிறது என்று முன்பே சொன்னேன்.

*Pottery articles to the Industrial Exhibition*

* 138 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

வட ஆற்காடு ஜில்லா, குடியாத்தம் தாலூகா, கரிகேரியில் செய்யும் மண் பாண்டங்களை சர்வதேசக் கண்காக்ஷிக்கு அனுப்பப்பட்டது சர்க்காருக்குத் தெரியுமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : No pottery articles produced at Karigiri were sent to any International Exhibition

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், வட ஆற்காடு ஜில்லாவில் இருக்கக்கூடிய Assistant Director of Fisheries அவர்களால் இந்த மண் பாண்டங்களை சர்வ தேசக் கண்காட்சிக்கு அனுப்பப்பட்டதா ? நேருஜி அவர்கள் கூட அதைப் பார்த்து பாராட்டியதாகச் சொல்லப்படுகிறது. பெருமை தரக்கூடிய இந்த மண் பாண்டங்களை மேலும் செய்ய அரசாங்கம் தனியாகப் பணம் ஒதுக்கி இதைத் தீவிரப் படுத்த முன் வருமா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சமீபத்தில் இந்தியாவில் இத்தகைய ஒரு கண் காட்சி நடைபெற்றதாகத் தெரியவில்லை. இந்தத் தொழிலை அபிவிருத்தி செய்ய கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.

[9th February 1959

*Untouchability (Offences) Act*

* 139 *Q*.—SRI T. S. RAMASWAMY PILLAI (on behalf of Sri M. Jagannathan) : Will the Hon. the Minister for Public Works be pleased to state with reference to the answers given to unstarred question No. 5 placed on the table of the House on 24th March 1958, the reasons for the non-disposal of 54 cases of offences committed under the Untouchability (Offences) Act of 1955, in 1955–56?

THE HON. SRI P. KAKKAN : All cases pending disposal at the end of the year 1955–56 have already been disposed of.

*Suppression of Immoral Traffic Act*

* 140 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state whether there is any proposal to make suitable changes in the Suppression of Immoral Traffic Act in view of the Court's order that only Deputy Superintendent of Police should prosecute under the above Act?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Sir, the answer is in the negative.

SRI N. K. PALANISAMI : கோர்ட் முடிவுப் பிரகாரம் ஒரு டிபுடி சூப்பிரண்டுதான் இந்தக் குற்றத்துக்காக ஒருவரைப்பற்றி பிராது செய்ய முடியும் என்று தீர்ப்பு இருப்பதன் காரணமாக இந்தச் சட்டத்தைத் திருத்த என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : முன்பே அரசாங்கம் உத்தரவு இட்டிருப்பதாகச் சொன்னேன். நகரில் Assistant Police Commissioner என்றும், அதற்குக் கீழ் இருக்கக்கூடாது என்றும், ஜில்லாக்களில் Deputy Superintendent of Police என்றும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

SRI A. A. RASHEED : Sir, what is the number of cases charge sheeted in 1958 under this Act ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : I would like to have notice, Sir.

*Delinquent children*

* 141 *Q*.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

() the steps taken by the Government to treat delinquent children in a scientific manner : and

(*b*) Whether any Degree-holders are employed for treating such children ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) The training afforded to delinquent children in the Certified Schools is reformatory rather than punitive in character. Vocational and educational training is imparted to these children by experienced officers some of whom have undergone technical training. Many of the officers

9th February 1959]

and subordinates in the Certified Schools have undergone training under the Honorary Adviser in Psychology in the Department of Certified Schools and Vigilance Service. The problem cases among the Children are sent to the Juvenile Guidance Bureau, Madras, for clinical study and advice.

A committee has been appointed by Government for the purpose of preparing a scheme for the re-organization of the educational and vocational training of children in the Certified Schools.

Dr. G. D. Boaz, Professor of Psychology, University of Madras, has been appointed by Government as an Honorary Adviser in Psychology in the Department of Certified Schools and Vigilance Service.

(*b*) All the Gazetted Officers in the Certified Schools are degree holders. Under the rules direct recruits to the post of Assistant Superintendents have to be degree-holders.

SRI N. K. PALANISAMI : இளம் குற்றவாளிகளையும், அனாதைச் சிறுவர்களையும் ஒரே இடத்தில் வைத்து அவர்களுக்கு "ட்ரெயினிங்" கொடுக்கப்படுவதாகச் சொல்லப்படுகிறது. அவர்களுக்கு தனித்தனியாக "ட்ரெயினிங்" கொடுக்க அரசாங்கம் நடவடிக்கை எடுக்குமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது பற்றிச் சமீபத்தில் இந்த மன்றம் ஒரு சட்டம் நிறைவேற்றி இருக்கிறது. அந்தச் சட்டப் படி சில ஏற்பாடுகள் புதிதாக எடுத்துக் கொள்ளப்படும்.

*Shifting of Magistrate's Court at Nannilam*

MR. SPEAKER : அங்கத்தினர் இல்லாததால் கேள்வி பதில் சட்டசபை நடவடிக்கைகளில் போடப்படும்.

* 142 *Q.*—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—தஞ்சை ஜில்லா, நன்னிலம் தாலூகாவில் தலைநகரத்திலிருந்த மாஜிஸ்ட்டிரேட் கோர்ட்டைத் திருவாரூருக்கு மாற்றியதன் காரணங்கள் யாவை ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Nannilam is not easily accessible to the majority of the villages lying in the territorial jurisdiction of the Sub-Magistrate. There is no residential Bar as such at Nannilam. Litigant public from the villages in Kodavasal and Koradacheri Police station limits have to pass through Tiruvarur to reach the Court House at Nannilam. Tiruvarur is a religious and commercial centre and a junction of railway lines and roads. At Tiruvarur there is a District Munsiff's Court with a permanent Bar for legal aid. It is easily approachable from all the villages in the jurisdiction of the Sub-Magistrate. For the reasons mentioned above the Sub-Magistrate's Court at Nannilam was shifted to Tiruvarur.

*Madras Commercial Crops Markets Act,* 1933

* 143 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the steps taken by the Government to implement the Expert Committee's recommendations made in its report on the review of the Madras Commercial Crops Markets Act, 1933?

[9th February 1959

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government have, in consultation with the Heads of Departments concerned, examined carefully the various recommendations of the Expert Committee on Marketing Legislation and have arrived at decisions on them. To implement these decisions, a comprehensive Marketing Bill is being drafted and will be introduced in the Legislature shortly.

SRI A. GOVINDASAMY : இந்தக் கமிட்டியார் தென்னாற்காடு மாவட்டத்தில் உள்ள மணிலா பயிரிடுகிற விவசாயிகளுக்கு நல்ல பொறுக்கு விதை வாங்கித் தருமாறு சிபாரிசு செய்திருக்கிறதா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : என்னிடம் இப்பொழுது தகவல் இல்லை. தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI N. K. PALANISAMI : கமிஷன் முறை ஒழிக்கப்படவேண்டும் என்ற முக்கியமான சிபாரிசு சர்க்கார் கொண்டு வரப்போகும் மசோதாவில் இடம் பெறுமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இந்தச் சட்டத்தி லட்சியமே அதுதான்.

MR. SPEAKER : The hon. Member must not anticipate what is coming before the Legislature.

SRI A. GOVINDASAMY : ஏற்கனவே தென்னாற்காடு மாவட்டத்தில் மணிலா மார்க்கெட் கமிட்டி விவசாயிகளுக்கு நல்ல பொறுக்கு விதைகளை வழங்கி வந்தது என்பது அரசாங்கத்துக்குத் தெரியுமா? மீண்டும் அந்தப் பொறுக்கு விதைகளைக் கொடுக்க அரசாங்கம் யோசிக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப் பற்றித் தனிக் கேள்வி போட்டால் பதில் சொல்லுகிறேன்.

SRI N. K. PALANISAMI : இந்த மாதிரி மார்க்கெட்டை எல்லா ஜில்லாக்களிலும் விஸ்தரிப்பதற்கு ஏதாவது ஏற்பாடு செய்யப்படுகிறதா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : புதிதாக சட்டம் ஏற்படுத்திய பிறகு எல்லா ஜில்லாக்களுக்கும் இந்த மார்க்கெட் வசதி ஏற்படுத்துவது என்பது சர்க்காரின் நோக்கம்.

### *Special Police Forces*

* 144 Q.—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state the present strength of—

(i) the Special Armed Police in the State; and

(ii) the Malabar Special Police retained in this State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (i) The strength of the Special Armed Police is one Headquarter company and 14 active companies (including companies formed of Tamilian Personnel repatriated from Andhra Pradesh).

(ii) Half Headquarter company and 6 active companies.

SRI N. K. PALANISAMI : இந்த மலபார் ஸ்பெஷல் போலீஸ் என்று இன்னும் தனியாக வைத்துக் கொண்டிருப்பதின் காரணம் என்ன ? ஏன் ஸ்பெஷல் ஆர்ம்டு போலீஸ் என்று பொதுவாக வைக்கக்கூடாது என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அவ்வாறு இரண்டையும் ஒன்றாகச் சேர்ப்பதிலும் சில கஷ்டங்கள் இருக்கின்றன. இப்பொழுது மலபார் ஸ்பெஷல் போலீஸ் என்று முன்னதாக ஏற்படுத்தப்பட்டதில் சில பேர் இன்னும் இருக்கிறார்கள்.

9th February 1959]

**Sri A. A. RASHEED** : Sir, when do the Government propose to have a joint Armed Police Force for South India?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : I cannot tell the hon. Member when such a common Force will come into existence.

**Sri S. LAZAR** : Is there a proposal to do away with the Malabar Special Police, Sir?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : There is at present no such proposal.

### *Ex-Criminal Tribes in Tirunelveli district*

* 145 *Q*.—**Sri T. VELUCHAMI** : Will the Hon. Minister for Public Works be pleased to state—

(*a*) what are the schemes sponsored by the Central Government and the State Government with regard to starting of Industries for the uplift of ex-Criminal Tribes in Tirunelveli district; and

(*b*) the amounts available under the various schemes?

**The Hon. Sri P. KAKKAN** : (*a*) & (*b*) A lump sum provision of Rs. 2 lakhs has been made for the starting of small scale industries like the manufacture of bricks, tiles, hume pipes, etc., for the welfare of ex-Criminal Tribes in the State during the current year. The detailed schemes for the Tirunelveli district are still under the investigation of the Director of Industries and Commerce.

**Sri A. R. SUBBIAH MUDALIAR** : செங்கல் தொழிலை சங்கரன் கோயில் பகுதியில் ஆரம்பிக்க சர்க்கார் திட்டமிட்டிருக்கிறதா?

**The Hon. Sri P. KAKKAN** : எந்த இடத்தில் ஆரம்பிப்பது என்பது பரிசீலனையில் இருக்கிறது.

**Sri K. SATTANATHA KARAYALAR** : இன்னும் பரிசீலனையில் இருக்கிறது என்றால் இதற்காக ஒதுக்கப்பட்ட பணம் இந்த ஆண்டில் செலவு செய்யப்படுமா? அப்படியானால் எப்பொழுது?

**Mr. SPEAKER** : அதை எப்படிக் கேட்க முடியும்?

**Sri A. R. SUBBIAH MUDALIAR** : மாஜி குற்றப் பரம்பரையினருக்காக அதிக அளவில் சிறு கைத்தொழில்களை ஆரம்பிக்க சர்க்காருக்கு உத்தேசம் உண்டா?

**The Hon. Sri P. KAKKAN** : எந்த இடத்தில்?

**Sri A. R. SUBBIAH MUDALIAR** : சங்கரன்கோயில், நாங்குனேரி, கோயில்பட்டி தாலூகாக்களில்.

**The Hon. Sri P. KAKKAN** : திருநெல்வேலி ஜில்லாவில் எந்த இடத்தில் ஆரம்பிக்கப்பட வேண்டும் என்பதும் பரிசீலனையில் இருக்கிறது என்று முன்பே பதில் சொன்னேன்.

[9th February 1959

*Sugar factory*

* 146 *Q.*—SRI A. GOVINDASAMY : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) வளவனூரில் தனியார் ஒருவருக்கு சர்க்கரை ஆலை கட்டுவதற்கு லைசென்ஸ் கொடுக்கலாமென்று மத்திய அரசாங்கத்திற்கு சிபாரிசு செய்யப்பட்டதா?

(ஆ) அப்படியானால், அதன் முடிவு என்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The application was rejected by the Government of India as there is no spare capacity available for production of Sugar.

SRI A. GOVINDASAMY : வளவனூரில் கூட்டுறவு முறையிலாவது ஒரு சர்க்கரை ஆலையை ஏற்படுத்த அரசாங்கம் முன் வருமா? இப்பொழுது 5 மைல் விஸ்தீரணத்திற்குள்தான் கரும்புகளை வாங்கலாம் என்ற இடையூறு நெல்லிக்குப்பம் ஆலையில் காரணமாக இருப்பதால் வளவனூரில் ஆலை அமைக்க முன் வருமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது பற்றி அரசாங்கம் கவனித்துக் கொண்டுதான் வருகிறது. ஆனால் இதற்கு வேண்டிய இயந்திரங்கள் கிடைப்பதில் மத்திய அரசாங்கத்துடன் Foreign Exchange பிரச்னை இருப்பதால் அதை உடனடியாக நிறைவேற்ற முடியவில்லை.

SRI T. R. RAMAMIRTHA THONDAMAN : சர்க்கரை ஆலைகளை அதிகப்படியாக ஏற்படுத்தி வருவதன் காரணமாக உணவு உற்பத்தி குறைகிறது என்று சர்க்காருக்குத் தெரியுமா? ஆகையால் போதிய உணவு கிடைக்கும்வரை இந்தச் சர்க்கரை ஆலைகளுக்குப் பர்மிட் கொடுப்பதை அரசாங்கம் நிறுத்தி வைக்குமா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப் பற்றி எத்தனையோ முறை விளக்கம் அளித்திருக்கிறேன். இந்த மாதிரி சில ஆலைகள் ஏற்படுத்துவதன் காரணமாக உணவு உற்பத்தி பாதிக்கப்படுவதில்லை.

SRI A. GOVINDASAMY: வளவனூருக்கும் புதுவைக்கும் இடையில் New Hanson Sugar Factory ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. அது 5 மைல் விஸ்தீரணம் வரைதான் கரும்பு வாங்கலாம் என்று ஏற்படுத்தி இருக்கிறார்கள். விழுப்புரம் தாலுகா வரையில் எடுத்துக்கொள்ளத் தயாராக இருக்கிற காரணத்தால், விழுப்புரம் தாலுகாவில் கரும்பு நன்றாகப் பயிராகக்கூடிய வகையில், அதற்காவது உத்தரவு போடுவார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இதைப் பற்றித் தனியாக எழுதி அனுப்பினால் நான் இயன்றதைச் செய்கிறேன்.

SRI K. R. VISWANATHAN : தலைவர் அவர்களே, தென்னாற்காடு மாவட்டத்தில் பெண்ணாடத்தில் கூட்டுறவு முறையில் ஒரு சர்க்கரை ஆலை அமைக்க உதவி கேட்டுள்ளார்களே? அது எந்த நிலையில் இருக்கிறது.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : தனிக் கேள்வி போடவும்.

SRI R. KRISHNASAMI NAIDU : பரவலாக சர்க்கரை ஆலைகளை விஸ்தரிக்க வேண்டுமென்றால் அந்த வட்டாரத்தில் எத்தனை ஏக்கர் கரும்பு சாகுபடியிருக்கவேண்டுமென்றும், ஒரு சர்க்கரை ஆலைக்கு குறைந்த பட்சம் எவ்வளவு தொகை முதலீடு செய்யவேண்டுமென்பதையும் அமைச்சர் அவர்கள் தெரிவிப்பார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : சுமாராக ஐயாயிரம் முதல் பத்தாயிரம் ஏக்கர் நிலம் வேண்டும். மூலதனம் 80 லட்சம் முதல் ஒரு கோடி ரூபாய் வரை வேண்டியிருக்கும்.

9th February 1959]

*Devanathaswami Devasthanam lands*

* 147 *Q.*—Sri A. GOVINDASAMY: கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) கடலூர் தாலூகா, திருவேந்திபுரம் தேவநாதஸ்வாமி தேவஸ்தானத்துக்கு எத்தனை ஏக்கர் நிலங்கள் இருக்கின்றன?

(ஆ) ஸ்வாமிக்குச் சொந்தமான நகைகள் மதிப்பீடு என்ன?

(இ) இந்த நகைகள் யார் பொறுப்பிலிருக்கின்றன?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) 31·10 acres wet lands.

38·69 acres dry lands.

Lands endowed specifically for the performance of certain kattalais :—

32·97 acres wet.

151·86 acres dry.

(*b*) Rs. 2,04,375.

(*c*) They are in the custody of Sri Krishnamurthi Bhattacharya, Archaka of the temple.

Sri A. GOVINDASAMY : இந்தக் கோவில் நிலங்களும், கோயிலுக்குச் சொந்தமான நகைகளும் அந்தக் கோவிலைச் சேர்ந்த தர்மகர்த்தாக்களிடமே ஒப்படைக்கப்படவில்லை? தர்மகர்த்தாக்களிடம் இல்லாமல் பட்டாச்சாரியரிடம்-அர்ச்சகரிடம் ஏன் ஒப்படைக்க வேண்டும்? 9-40 a.m.

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இந்த ஆலயம் சம்பந்தப்பட்ட வரையில் கீழ்க் கோர்ட்டின் தீர்ப்புப்படிதான் அறநிலைய பாதுகாப்பு இலாகாவில் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறது. ஜில்லாக் கோர்ட்டின் தீர்ப்பை எதிர்த்து இப்பொழுது ஹைகோர்ட்டிலும் அப்பீல் செய்யப்பட்டிருக்கிறது.

Sri A. GOVINDASAMY : இது விஷயமாக அரசாங்கத்தார்........

Mr. SPEAKER : கோர்ட்டில் வழக்கு இருக்கிறது என்கிறபோது கேள்வி கேட்பது உசிதம் இல்லை.

Sri A. GOVINDASAMY : தீர்ப்பு ஆகிவிட்டது என்று அமைச்சர் அவர்கள் சொல்கிருர்.

The Hon. Sri M. BHAKTAVATSALAM : ஜில்லா கோர்ட்டில் தீர்ப்பு வழங்கப்பட்டிருக்கிறது. இந்தத் தீர்ப்பை எதிர்த்து ஹைகோர்ட்டில் அப்பீல் செய்யப்பட்டிருக்கிறது என்று சொன்னேன்.

*Andipatti Central Jail*

* 148 *Q.*—Sri M. JAGANNATHAN : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Central Jail, at Andipatti has since been closed; and

(*b*) if so, the reasons therefor?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) Yes, Sir.

(*b*) The Jail was closed down because convict labour was not required on the Vaigai Reservoir Project Works beyond 31st May 1958.

[9th February 1959

### *Irrigation wells*

* 149 *Q.*—SRI V. ARUNACHALA THEVAR: Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether it was represented to the Government by the public of Pudukkottai Division to sink irrigation wells in the irrigation tanks, where there are good springs; and

(*b*) the action taken by the Government in the matter so far?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: (*a*) Yes, Sir.

(*b*) The proposal was dropped after examination for the following reasons:—

(1) The technical opinion was that wells should not be sunk in tank beds as it will result in undue increase in loss of water in tanks by percolation and will affect the ayacut under the tanks adversely.

(2) The cost was not economical and commensurate with the results expected to be achieved.

### *Virudhunagar Railway Line*

* 150 *Q.*—SRI P. URKAVALAN: கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

விருதுநகரிலிருந்து சென்னை வரையில் பாதைக்கு இரண்டு லைன்கள் அமைப்பதற்கு நம் சர்க்கார் மத்திய சர்க்காருக்கு சிபாரிசு ஏதேனும் செய்துள்ளார்களா?

THE HON. SRI M. BHAKTAVATSALAM: No, Sir.

SRI M. S. SELVARAJAN: இரண்டாவது திட்ட கால முடிவுக்குள் இந்த ராஜ்யத்தில் எடுத்துக்கொள்ளக்கூடிய ரயில்வே இணைப்புத் திட்டங்களைப் பற்றிச் சொல்ல முடியுமா?

MR. SPEAKER: If the Hon. Minister is prepared to answer the question, I have no objection.

THE HON. SRI M. BHAKTAVATSALAM: தனிக் கேள்விதான் போடவேண்டும் என்றாலும் இந்த கேள்விக்குப் பதில் 'இல்லை' யென்று சொல்லி விடலாம்.

### *Rural Development Board*

* 151 *Q.*—SRI K. SATTANATHA KARAYALAR: Will the Hon. the Chief Minister be pleased to state—

(*a*) the purpose for which the Rural Development Board was constituted;

(*b*) the date on which it was constituted;

(*c*) the names of the Chairman and members of the Board;

(*d*) the dates on which it has met so far; and

(*e*) whether the Government propose to publish its activities from time to time in the "Madras Information" and "Grama Nalam" for the information of the general public?

9th February 1959]

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) & (b) The Rural Development Board was constituted in G.O. Ms. No. 1630, Public (Rural Development Project) Department, dated 11th September 1954. Its function is to review the progress made and discuss the difficulties arising in the execution of the Community Development Programmes and other items of Rural Development at the official level.

(c) & (d) A statement [a] is placed on the table of the House.

(e) Even now, a brief report of the activities of the Rural Development Board which are of general interest to the public, are being published in the "Madras Information" and "Grama Nalam".

SRI K. SATTANATHA KARAYALAR: இந்த போர்டின் ஆயுள் காலம் எவ்வளவு? இதில் உத்தியோகப் பற்றற்றவர்களை நியமிக்கும் உத்தேசம் உண்டா?

THE HON. SRI C. SUBRAMANIAM: இல்லை. இந்த போர்டு உத்தியோகஸ்தர்களைக் கொண்டது. உத்தியோகஸ்தர் இல்லாத கமிட்டி ஒன்று இருக்கிறது.

*Educational concessions*

* 152 Q.—SRI M. S. SELVARAJAN: Will the Hon. the Minister for Finance be pleased to state—

(a) whether there are any schools in the State where educational concessions are not granted to the pupils of the Most Backward Classes; and

(b) if so, the steps taken to enforce the grant of such concessions in these schools?

THE HON. SRI C. SUBRAMANIAM: (a) None.

(b) Does not arise.

SRI M. S. SELVARAJAN: சமீப காலத்தில் இந்த ராஜ்ய அரசாங்கத்தில் அமுல் நடத்தக்கூடிய கொள்கையின்படி மிகவும் பிற்பட்டவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற கல்விச் சலுகை காரணமாக அட்வான்சு கிராண்டு வழங்காத காரணத்தினால் பாடசாலைகள் நடத்த முடியாமல் கஷ்டப் பட்டுக்கொண்டிருப்பது சுட்டிக்காட்டப்பட்டு அட்வான்ஸ் கிராண்டு கோரியிருப்பது வாஸ்தவமா? அதன் பேரில் என்ன நடவடிக்கை எடுக்கப் பட்டிருக்கிறது?

THE HON. SRI C. SUBRAMANIAM: அந்தத் தகவல் என்னிடத்தில் இல்லை.

*Drinking water wells*

* 153 Q.—SRI V. K. KOTHANDARAMAN: Will the Hon. the Minister for Revenue be pleased to state the number of villages in Gudiyatham taluk, North Arcot district, not provided with drinking water wells?

THE HON. SRI M. A. MANICKAVELU: Nil, Sir.

---

[a] Printed as Appendix I at pages 418–419 infra.

[9th February 1959

SRI V. K. KOTHANDARAMAN : குடியாத்தம் தாலூக்காவில் பல கிராமங்களில் குடிதண்ணீர் கிணறு இல்லையென்று தாசில்தாரிடத்தில் நானே நேரில் பார்த்து எழுதிக்கொடுத்திருக்கிறேன். அப்படி இருக்கும் போது 'நில்' என்று சொன்னால் அது கொஞ்சங்கூட பொருத்தம் இல்லை. தயவுசெய்து உடனடியாக......

THE HON. SRI M. A. MANICKAVELU : அந்தத் தாலூக்காவில் எட்டு கிராமங்களில்தான் கவர்ன்மெண்டால் நிர்மாணிக்கப்பட்ட கிணறு இல்லை. மற்றப்படி தண்ணிக்கு வேறு வகையில் வசதி இருக்கிறது. குடி தண்ணீர் இல்லாத கிராமங்களே இல்லையென்றுதான் சொன்னேன்.

*Import of fish*

MR. SPEAKER : கேள்வி எண் 154—அங்கத்தினர் ஸ்ரீ M. C. முத்துகுமாரசாமி அவர்கள் தன் இடத்தில் இல்லாததால் கேள்வியும் பதிலும் நடவடிக்கையில் அச்சடிக்கப்படும்.

* 154 *Q*.—SRI M. C. MUTHUKUMARASWAMY : கனம் ஸ்தல ஸ்தாபன அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) அந்நிய நாடுகளிலிருந்தும், நமது நாட்டின் வெளி ராஜ்யங்களிலிருந்தும் நமது ராஜ்ய எல்லைக்கு 1956–57, 1957–58 எத்தனை டன் மீன் இறக்குமதி செய்யப்பட்டுள்ளன ;

(ஆ) அவைகளின் மதிப்பீடு என்ன ?

THE HON. SRIMATHI LOUDHAMMAL SIMON : (*a*) & (*b*) A quantity of 53 tons of fish valued at Rs. 78,926 and 15·4 tons valued at Rs. 39,925 during the years 1956–57 and 1957–58 respectively were imported into this State from foreign countries. A quantity of 2,620 tons of fish valued at Rs. 14·6 lakhs and 2,510 tons valued at Rs. 14·0 lakhs were imported into this State from other States in India during the years 1956–57 and 1957–58 respectively. Fish imported from foreign countries is usually canned and smoked fish, fish pastes, crustacea and Molluscs.

*Ilandaiyadi road-cum-bridge*

* 155 *Q*.—SRI A. VEDARATHNAM : கனம் முதலமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா :—

(அ) தஞ்சை ஜில்லா, திருத்துறைப்பூண்டி தாலூகா புஷ்பவனம் கிராமம், இலந்தையடி ரஸ்தா பாலம் தடைப்பட்டிருப்பதன் காரணம் என்ன ?

(ஆ) எப்போது வேலை துவக்கி, எப்போது முடியும் ?

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) The soil met with in the foundation under piers was of poor quality and as such further investigation has become necessary so as to have a strong foundation. Hence the work was stopped.

(*b*) The soil samples have since been got tested. Arrangements are also being made to conduct a load test in order to decide whether a revised design for the bridge will be necessary. The results of the test will be studied so as to decide the changes in the design of the bridge. The changes in the design, if found necessary will be finalised and the work resumed thereafter.

9th February 1959]

**Sri A. VEDARATHNAM** : இந்தப் பாலத்திற்கு முதலில் எஸ்டிமேட் தயார்செய்தபோது அந்த மண் சோதனை செய்யப்படவில்லையா? மண் சோதனை என்று சொல்லி இப்போது இடையில் வேலையை நிறுத்தி வைப்பதற்கு என்ன காரணம் ? எப்போது இந்தப் பாலத்தின் வேலை மறுபடியும் துவங்கி பூர்த்தியாகும் ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : முதலில் மேலே இருக்கக்கூடிய மண்ணை சோதனை செய்து அதன்பேரில் பால வேலை துவக்கப்பட்டது. ஆனால் கீழே அந்த மண்ணின் ரகம் மாறிவிட்டதன் காரணமாக அதை மீண்டும் பரிசோதனை செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டுவிட்டது. அந்த பரிட்சை முடிந்தவுடன் வேலை துவக்கப்படும்.

*Strike notice by Teachers*

***156 Q.—Sri V. K. KOTHANDARAMAN** : கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா :—

(அ) வடாற்காடு ஜில்லா, திருப்பத்தூர் இராமகிருஷ்ண உயர் நிலைப் பள்ளியின் ஆசிரியர்களிடமிருந்து 1958-ம் ௵ அக்டோபர் மாதம் 27௳ தேதி வேலை நிறுத்த நோட்டீஸ் வந்ததா ?

(ஆ) அது விஷயமாக என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : (*a*) & (*b*) A notice of strike, dated 27th October 1958 was given by the teachers of the Ramakrishna High School, Tiruppattur that if their salaries due were not paid before 30th November 1958 they would go on strike from 1st December 1958. Instructions were issued by the Director of Public Instruction while releasing the grant for 1957–58 to the management of the institution, that the amount should be first utilized to discharge the liability to teachers. There has been no further complaint from the teachers.

**Sri V. K. KOTHANDARAMAN** : இது போன்று ராமகிருஷ்ண உயர்நிலைப் பள்ளி ஆசிரியர்களிடமிருந்து எத்தனை முறை வேலை நிறுத்த நோட்டீஸ் வந்திருக்கிறது ? இப்பிரச்சனை இது போல் எத்தனை முறை தீர்க்கப்பட்டிருக்கிறது ? ஒவ்வொரு முறையும் ஐந்து மாதம், 6 மாதம் என்று ஆசிரியர்களுக்கு வழக்கம்போல சம்பளம் கொடுக்கப்படாமல் இருந்தால் அவர்கள் எப்படி வாழ்க்கை நடத்த முடியும் ? இதனால் கல்வித் தரம் வெகுவாக பாதிக்கப்படாதா ? ஆகையால் இதை மீண்டும் பரிசீலனை செய்து இந்தப் பாடசாலையை சர்க்காரே எடுத்து நடத்த முயற்சி செய்வார்களா ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : இதற்கு முன்னால் ஒரு தடவை இதைப்பற்றி புகார் வந்தது என்று ஞாபகம். இப்போது நிர்வாகத்திலேயே மாறுதல் ஏற்பட்டிருக்கிறது என்கிற விஷயம் கனம் அங்கத்தினருக்கும் தெரியும் என்று நினைக்கிறேன்.

*Cancer Institute, Adyar*

*** 157 Q.—Sri K. SATTANATHA KARAYALAR** : Will the Hon. the Minister for Revenue be pleased to state whether there is nay proposal to develope the Cancer Institute, Adyar, into a modern Radium Therapy Centre?

[9th February 1959

THE HON. SRI M. A. MANICKAVELU : The Cancer Institute, Adyar, Madras, is not a mere radium therapy centre but is an integrated Cancer Centre with provision for super-voltage cobalt beam therapy, and radio active isotope therapy, etc. The Institution has schemes for expansion.

SRI K. SATTANATHA KARAYALAR : தற்சமயம் இந்த செண்டரிலே எவ்வளவு பேர் சிகிச்சை பெறுகிறுர்கள் ? மேலும் சிகிச்சை பெறுவதற்கு எத்தனை பேர் வெயிட்டிங் லிஸ்டில் உள்ளார்கள் ?

THE HON. SRI M. A. MANICKAVELU : இப்போது இருக்கிற பெட் ஸ்ட்ரெங்த் எனக்குத் தெரிந்த வரையில் சொல்கிறேன். 120. வெயிட்டிங் லிஸ்டில்லைப் பற்றித் தெரியாது.

SRI A. A. RASHEED : Do the Government pay any subsidy or grant to his Institute and if so how much ?

THE HON. SRI M. A. MANICKAVELU : நான்-ரெக்கரிங் இரண்டு லட்சத்து அறுபத்தெட்டாயிரம் ரூபாய் கொடுக்கப்பட்டிருக்கிறது. மெய்ண்ட்டினென்ஸ் கிராண்டு 1957–58-ல், 46 ஆயிரம், 1958–59-ல் அட்வான்ஸ்ஸாகக் கொடுத்தது 31 ஆயிரம். இனி 57 ஆயிரம் கொடுக்கலாம் என்று உத்தேசம்.

9-50 a.m. SRI K. B. S. MANI : புற்று நோய்க்கு சிகிச்சை செய்வது மட்டும் இந்த ஆஸ்பத்திரியில் நடக்கிறதா அல்லது இந்த நோய் எவ்வாறெல்லாம் உண்டாகிறது என்ற ஆராய்ச்சியும் அங்கே நடக்கிறதா ?

THE HON. SRI M. A. MANICKAVELU : ஆராய்ச்சிகள் நடத்துவதற்காகவும் மத்திய சர்க்காரிடம் உதவி கோரியிருக்கிறோம். இப்போதும் அங்கே ஒரு சிறிய அளவில் ஆராய்ச்சி நடக்கிறது.

MR. SPEAKER : 158-வது கேள்வியை இன்னொரு நாள் எடுத்துக் கொள்ளலாம். ஏனென்றால் சம்பந்தப்பட்ட மந்திரி அவர்கள் இன்று சபைக்கு வரவில்லை.

*National Extension Block in Tiruchirappalli district*

* 159 *Q.*—SRI K. R. VISWANATHAN : Will the Hon. the Chief Minister be pleased to state :

(*a*) the names of the National Extension Block areas in Tiruchirappalli district;

(*b*) the names of the Blocks where the National Extension Service has been extended; and

(*c*) the number of Block areas situated in under-developed and backward pockets in the district?

THE HON. SRI C. SUBRAMANIAM : A statement[a] is placed on the table of the House.

SRI K. R. VISWANATHAN : திருச்சி மாவட்டத்தில் 39 ப்ளாக் எல்லேகளில் 16 ப்ளாக் எல்லைகளுக்குத் தான் தேசீய விஸ்தரிப்புத் திட்டம் விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. அவைகளில் பொருளாதாரத்தில் பிற்பட்ட, முன்னேருத பிரதேசங்களில், 3 எல்லைகளுக்குத் தான் இத் திட்டம்

[a] Printed as Appendix II on page 420 infra.

9th February 1959]

விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. பிற்பட்ட பிரதேசங்களை முன்னுக்குக் கொண்டு வர வேண்டும் என்பது சர்க்காரின் கொள்கையாக இருந்தாலும் இம்மாதிரி யான பிற்பட்ட பிரதேசங்களை தேசிய விஸ்தரிப்புத் திட்டங்களில் சேர்க்கக் காலதாமதம் ஏற்படுவதற்குக் காரணம் என்ன ? பிற்பட்ட இடங்களுக்கு இனிமேலாவது முதலிடம் கொடுக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : முதலில், எங்கெங்கு இத்திட்டங்களின் மூலம் உற்பத்தியைப் பெருக்க முடியுமோ அந்த இடங் களில் இந்தத் திட்டங்களைக் கொண்டுவர வேண்டும் என்ற அடிப்படையில் இவைகள் கொண்டுவரப்பட்டன. இப்போது, பிற்பட்ட இடங்களுக்கு முத லிடம் கொடுக்கப்பட்டு வருகிறது. உண்மையில், எல்லாப் பகுதிகளுமே பிற்பட்ட பகுதிகளாகத் தான் இருக்குமே தவிர, எந்த ஒரு பகுதியும் முற்றிலும் முன்னேறிய பகுதியாக இருக்காது. எந்த ஒரு பகுதியும் முழுதும் முன்னேறிய பகுதி என்று சொல்ல முடியாது. இப்போது, எல்லாப் பகுதிகளுக்குமே இத்திட்டத்தை விஸ்தரிக்கத் தீர்மானிக்கப் பட்டிருக்கிறது. இது கவர்னர் அவர்களுடைய உரையிலும் கண்டிருப்பதை கனம் அங்கத்தினர்கள் கவனித்திருப்பார்கள்.

SRI S. LAZAR : மிகவும் பிற்பட்ட பகுதிகளில் ஸ்தல அபிவிருத்தி திட்டமோ தேசிய அபிவிருத்தித் திட்டமோ சரிவரச் செயல்படவில்லை. காரணம், அவைகள் தங்கள் செலவுப் பொறுப்பான 50 சதவிகிதச் செலவுத் தொகையைக் கொடுக்கமுடியாதது தான். எனவே இத்தகைய பகுதிகள் விஷயத்தில் ஏதாவது தனிப்பட்ட ஏற்பாட்டை அரசாங்கம் கொண்டுவருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இத்திட்டத்தின் செலவில் மக்களின் பங்கும் இருக்கவேண்டும். அந்த அடிப்படையில் தான் இந்தத் திட்டமே அமைக்கப்பட்டிருக்கிறது. சில பகுதிகள் பிற்பட்ட பகுதி களாக இருந்தால், அவைகள் தங்கள் உழைப்பின் மூலம் அவைகளுடைய பங்குகளைச் செலுத்தலாம். பிற்பட்ட பகுதியில் இருக்கும் மக்களுக்கு வருடம் முழுவதும் வேலை இல்லாமலும் இருக்கும். அப்பேர்ப்பட்ட பகுதி களிலுள்ளவர்கள் உழைப்பின் மூலம் தங்கள் செலவுப் பங்கைக் கொடுப் பது எளிது என்று நினைக்கிறேன்.

SRI S. RAMALINGA PADAYACHI : கனம் முதல் அமைச்சர் அவர்கள் உடையார்பாளையம் தாலூகாவிலும் பெரம்பலூர் தாலூகா விலும் சுற்றுப் பிரயாணம் செய்தபோது, உடையார்பாளையம் தாலூகா தான் இந்த மாநிலத்திலேயே மிகவும் பிற்பட்ட பகுதி என்றும், மண் வளம் அற்ற பகுதி என்றும் கூறியிருக்கிறார். இந்த ஆண்டு, சங்கத் துறை ஜயங்கொண்டம் ஆகிய இடங்களை இத் திட்டத்தில் சேர்க்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லாப் பகுதிகளையும் எடுத்துக் கொள்ள வேண்டும் என்பது தான் சர்க்காரின் திட்டம். அந்த அந்தப் பகுதிகளை எவ்வெப்போது எடுத்துக்கொள்ள வேண்டும் என்று அந்த அந்த ப்ளானிங் போர்டுகளைக் கேட்டறிந்து, ப்ளானிங் போர்டுகளின் சிபாரிசுகளைக் கணக்கில் எடுத்துக்கொண்டு அவைகளைத் திட்டத்தில் சேர்க் கிறோம்.

SRI A. GOVINDASAMY : முன்பு இத்திட்டத்தில் மூன்று கட்டங்கள் இருந்தன. இப்போது அவை இரண்டு கட்டங்களாக மாற்றியமைக்கப் பட்டிருக்கின்றன. இந்த நிலையில், ப்ளாக்குகள் கொடுக்க வேண்டிய தொகைகள் அதிகரிக்கப்பட்டிருக்கின்றனவா, இல்லையா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போதுதான் தொகை அதிகரிக்கப்பட்டிருக்கிறது.

[9th February 1959

SRI S. NAGARAJA MONIGAR : ஜனத் தொகை அடிப் படையில் ப்ளாக்குகள் பிரிக்கப்படுகின்றன. என்று சொல்லப்படுகிறது. ஆனால் ஜனத்தொகை அதிகமாக உள்ள சில ப்ளாக்குகளின் விஸ்தீர்ணம் குறைவாகவும், ஜனத்தொகை குறைவாக உள்ள சில ப்ளாக்குகளின் விஸ்தீர்ணம் அதிகமாகவும் இருக்கின்றன. குறைவான ஜனத்தொகை யைக் கொண்ட ஹோசூர், ஹரூர் தாலூகாக்களின் விஸ்தீரணம் அதிகமாக இருக்கிறது. விஸ்தீர்ணம் அதிகமாக உள்ள இடங்களுக்கு அதிகமான பணம் தேவைப்படுகிறதானதால் விஸ்தீரணமும் கணக்கில் வைக்கப்படுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ப்ளாக்குகள் ஏதோ ஒரு அடிப் படையில் பிரிக்கப்படுகின்றன. இதனால் அதிகத் தாரதம்யம் ஏற்பட்டு விட்டதாகச் சொல்லமுடியாது.

SRI S. LAZAR : அபிவிருத்தி வேலைகள் பல பிளாக்கு களில் மிக மிகக் குறைவாகவே நடக்கின்றன. பள்ளிக்கூடம், ஆஸ்பத்திரி முதலியவைகளை அமைக்க வேண்டுமானால் பணம் அதிகமாகத் தேவைப் படுகிறது. ரோடுகள் போடுவது போன்ற வேலைகளைத் தான் உடல் உழைப் பால் செய்ய முடியும். எனவே, மிக பிற்பட்ட பகுதிகளுக்கு இத்தகைய வேலைகள் விஷயத்தில் ஏதாவது தனிச் சலுகை அளிக்க அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தத் திட்டத்தை மாற்றியமைக்க வேண்டுமென்று சர்க்கார் இப்போது ஆலோசிக்கவில்லை. ஆனாலும், அர சாங்கம் ஆங்காங்குள்ள இப்படிப்பட்ட கஷ்டங்களை கவனித்து, அதற்கு வேண்டிய நிவாரணத்தை அளித்து வருகிறது. உதாரணமாக, ராமநாத புரத்திலுள்ள பகுதிகளில் மக்களிடமிருந்து 50 சத விகிதம் பணம் வாங்க வேண்டியதில்லை. அங்கே குறைவாக வாங்கலாம் என்று அரசாங்கம் தீர்மானித்திருக்கிறது.

SRI S. M. ANNAMALAI : ப்ளானிங் போர்டின் சிபாரிசுகளின்படி ப்ளாக் குகள் எடுக்கப்படுகின்றன என்று கனம் அமைச்சர் சொன்னார். உண்மையில் ப்ளானிங் போர்ட் சிபாரிசின்படி அவைகள் எடுக்கப்படவில்லை என்பது கனம் அமைச்சருக்குத் தெரியுமா ? உதாரணமாக, வட ஆற்காடு மாவட் டத்தில் சென்ற ஆண்டில் ப்ளானிங் போர்டின் சிபாரிசுப்படி அவைகள் எடுக்கப்படவில்லை என்பது கனம் அமைச்சருக்குத் தெரியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : ப்ளாக்குகள், ப்ளானிங் போர்டின் சிபாரிசுகளை அனுசரித்து எடுக்கப்படுவதாகச் சொன்னேன். ப்ளானிங் போர்டுகள் சிபாரிசு செய்த இடங்களையே, அப்படியே, ப்ளாக்குகளாக எடுப்பதாகச் சொல்லவில்லை.

SRI T. M. NALLASWAMI : இன்னின்ன இடங்களை இத்திட்டத்திற்கு முதலில் எடுத்துக்கொள்ள வேண்டும், இன்னின்ன இடங்களை பிற்பாடு எடுத்துக் கொள்ளலாம் என்று முடிவு செய்யும் விஷயத்தில், ஜில்லா பிளானிங் போர்டு கூட்டத்தில் ஏகோபித்து முடிவு செய்யப்படுவதில்லை என்பதும், ஏகோபித்து முடிவுசெய்யப்பட முடியாத சூழ்நிலை அங்கே நிலவுகிறது என்பதும் கனம் அமைச்சருக்குத் தெரியுமா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : சில சமயங்களில் சில பேர்கள் சத்தம் போட்டுப் பேசினால் அதற்கு மற்றவர்கள் ஒத்துக் கொள்ளக்கூடிய நிலைமை அங்கே ஏற்படுகிறது. ஆகையால்தான், ப்ளானிங் போர்டின் சிபாரிசுகளை அனுசரித்து ப்ளாக்குகள் எடுக்கப்படுகின்றன என்று நான் சொன்னேன். அதன் சிபாரிசுகளை மட்டுமன்றி மற்ற விஷயங்களையும் உத்தேசித்து சர்க்கார் முடிவு செய்கிறது.

SRI V.K. KRISHNAMURTHY : வட ஆற்காடு ஜில்லா ப்ளானிங் போர்டு கூட்டத்தில் இந்த விஷயத்தில் பெரிய போட்டி ஏற்பட்டதால் லாட்டரிச் சீட்டு, போட்டு முடிவு எடுக்கப்பட்டது என்பது சர்க்காருக்குத் தெரியுமா ? (சிரிப்பு.)

9th February 1959]

MR. SPEAKER : I request hon. Members to ask reasonable questions.

THE HON. SRI C. SUBRAMANIAM : ப்ளானிங் போர்டு அங்கே எவ்வாறு நடக்கிறது என்று எனக்குத் தகவல் கொடுத்ததற்காக கனம் அங்கத்தினருக்கு எனது நன்றி.

MR. SPEAKER : Questions are over.

[*Note.*—An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.]

III. DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont.*

MR. SPEAKER : இன்றையதினம், கவர்னர் உரைமீது நடக்கும் விவாதத்தின் கடைசி நாள் ஆகும். இன்று கட்சிகளின் தலைவர்கள் பேசப் போகிறார்கள். கனம் நிதி அமைச்சர் அவர்கள், தாம் பேசுவதற்கு 1½ மணி நேரம் வேண்டும் என்று கூறினார்கள். கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள், தாம் பேச ½ மணி நேரம் கேட்டார்கள். கனம் மந்திரிகளுக்கு மொத்தம் 2 மணி நேரம் கொடுத்துவிட்டால் பாக்கி 1½ மணி நேரம் தான் இருக்கிறது. எனவே இந்த 1½ மணி நேரத்திற்குள் பேசி முடிக்க வேண்டும் என்று கட்சிகளின் தலைவர்களைக் கேட்டுக்கொள் கிறேன். இப்போது கனம் உள்விவகார அமைச்சர் பேசலாம்.

* THE HON. SRI M. BHAKTAVATSALAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த விவாதத்தில் கலந்துகொண்ட கனம் அங்கத்தினர்களில் ஒருசிலர் குறிப்பிட்ட ஒன்றிரண்டு விஷயங்களைப்பற்றி மாத்திரம் சில வார்த்தைகள் சொல்வதற்காகத்தான், நான் பேசுவதற்கு உங்கள் அனுமதியைக் கோரினேன். எனக்கு அளிக்கப்பட்டுள்ள அரை மணி நேரம் ஆவதற்குள்ளேயே முடித்துவிடுகிறேன். அதிக நேரம் எடுத்துக்கொள்ள நான் விரும்பவில்லை.

உணவு தானியங்களின் விலைவாசிகள் உயர்ந்திருப்பதுபற்றி கனம் அங்கத்தினர்கள் கவலை தெரிவித்தார்கள். அது எல்லோருக்கும் கவலை அளிக்கக்கூடியதுதான். அது அரசாங்கத்திற்கும் கவலை கொடுத்துக் கொண்டுதான் இருக்கிறது. விலைவாசிகள் குறைய வேண்டும் என்பதை எல்லோரும் ஒப்புக் கொள்கிறார்கள். விலைவாசிகளைக் குறையச் செய் வதற்குரிய நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்துக்கொண்டுதான் இருக் கிறது. விலைவாசிகள் உயர்வுப் பிரச்னைபற்றி முன்பு குறிப்பிடப்பட்டபோது நான் சொன்னேன் : "விலைவாசிகள் உயர்வைத் தடுக்க உடனடியாக நடவடிக்கை எடுப்பதற்கில்லை. அறுவடை காலத்தில் விலைவாசிகள் குறைய லாம். அப்படிக் குறையாவிட்டால், நாம் வெளியிலிருந்து தானியங்களை எதிர்பார்ப்பதற்கில்லை, போதிய உணவு தானியங்கள் இந்த ராஜ்யத்திலேயே உற்பத்தியாகின்றன—அவசியமானால், தானியங்களை வாங்கி நியாய விலைக் கடைகள் மூலம் ஜனங்களுக்கு விற்க ஏற்பாடு செய்யலாம்". அப்போது நான் அவ்வாறு சொன்னேன்.

மேலும், உணவு தானியங்களுக்கு அதிகபட்ச விலை நிர்ணயம் செய்வது அவசியம் என்றும் அரசாங்கம் முடிவு செய்திருப்பதை கனம் அங்கத் தினர்கள் அறிவார்கள். பற்றாக்குறையினால் தானியங்களின் விலை அதிகப்படலாம். பற்றாக்குறை இல்லாதபோதும் வேறு காரணங்களால் அதிகப்பட்டு வருகிறது என்றால், இந்த விஷயத்தில் தாங்கள் தலையிட வேண்டியது அவசியம், தவிர்க்கக்கூடாதது, என்பதை உணர்ந்து அரசாங் கத்தார் அதிகபட்ச விலையை நிர்ணயம் செய்தார்கள். பெப்ரவரி 2-ம் தேதியிலிருந்துதான் அதிகபட்ச விலை நிர்ணயம் அமுலுக்கு வந்திருக் கிறது. அதிகபட்ச விலை நிர்ணயம் இந்த ராஜ்யத்தில் இருந்தால் மட்டும் போதாது என்று மத்திய சர்க்காரிடம் இந்த ராஜ்ய சர்க்கார் வற்புறுத் தியது. எனவே, தென் மண்டலத்திலுள்ள ஆந்திராவிலும் மைசூரி

[Sri M. Bhaktavatsalam] [9th February 1959

னும் கூட நமது ராஜ்ய அதிக பட்ச விலைக்கேற்றவாறு உணவு தானியங்களுக்கு அதிகபட்ச விலை நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. அதிகபட்ச விலையை கேரள ராஜ்யத்திலும் நிர்ணயிக்காவிட்டால், இங்கிருந்து அதிகமான தானியங்கள் அங்கே போகும் என்று இந்த அரசாங்கம் மத்திய அரசாங்கத்திடம் வற்புறுத்தியது. இது மத்திய அரசாங்கத்தால் பரிசீலிக்கப்பட்டு ஒப்புக் கொள்ளப்பட்டிருக்கிறது. கேரள சர்க்காரும் இதை ஒப்புக்கொண்டிருக்கிறது. இன்னும் சில நாட்களில் கேரள ராஜ்யத்திலும் அதிக பட்ச விலை நிர்ணயம் அமலுக்கு வரும் என்று நாம் எதிர்பார்க்கலாம்.

10-00 a.m. அதிகபட்ச விலையை நிர்ணயித்துவிட்டால் போதாது. அதை பிரயோகம் செய்வதில் ஒரு முக்கிய சாதனம், அரசாங்கமே தான்யங்களை விலைக்கு வாங்க வேண்டுமென்பது. அப்படி வாங்குவது, பின்னால் அவசியமானால் பயன்படும். நியாயவிலைக் கடைகளின் அவசியம் இருந்தாலோ அல்லது விலை குறையாமல் இருந்தால் அதற்கும் பயன்படும் என்ற வகையில் இரண்டு லட்சம் டன் உணவு தான்யம், அரிசியோ அல்லது அதற்கேற்றபடி நெல்லோ பாதி அரிசியும் பாதி நெல்லும் வாங்குவது என்று அரசாங்கம் முடிவு செய்து அதுபற்றி வேண்டிய நடவடிக்கைகளும் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகிறது. இப்படி வாங்குவதில், அரசாங்கத்தின் சார்பாக கூட்டுறவு ஸ்தாபனங்கள் அதை கையாள வேண்டும் என்பதும் இப்பொழுது முடிவு செய்யப்பட்டிருக்கிறது. அரசாங்கம் வாங்குவதற்குமட்டும் இந்த விலை நிர்ணயம் செய்யப்படவில்லை. மற்ற வியாபாரிகளும், மற்ற விற்பனைகளிலும், எல்லாவற்றிற்கும், எல்லா வியாபாரங்களுக்கும், எல்லா விற்பனைகளுக்கும் இந்த விலை நிர்ணயம் உண்டு. இதை மீறுவது தவறு என்றும் இப்பொழுது வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. இந்த விலை நியாயமான விலையாகும். விவசாயிகளுக்கும், அதை வாங்கிச் சாப்பிடுகிறவர்களுக்கும், நியாயமான முறையில் நன்கு ஆராய்ந்து தென் மண்டலத்திலுள்ள எல்லா யிடங்களுக்கும் ஏறக்குறைய ஒரேவிதமான விலை நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இவ்வாறு வாங்குவது சிலருக்கு பிடிக்கவில்லை. கேரள அரசாங்கம் கூட அஞ்சுகிறது, நீங்களே இரண்டு லட்சம் வாங்கிவிட்டால் எங்களுக்கு குறைந்து போய்விடுமே என்று. அப்படி அச்சப்படுவதற்கு இடமில்லை. அப்படி இந்த அரசாங்கம் வாங்குவதை தவிர்க்க முடியாது என்று தெரிவித்திருக்கிறோம். விவசாயிகளுக்கு ஒரு கவலை இருக்கிறது. வியாபாரிகள் அப்படி நாம் வாங்குவதை எதிர்க்கிறார்கள். ஏன் இப்படி வாங்க வேண்டுமென்று நமக்கு உபதேசமும் செய்ய முற்படுகிறார்கள். ஆனால் அரசாங்கம் மக்களின் நன்மையையும், நாட்டு நன்மையையும் கருதித்தான் விலைக் கூடுதலை தவிர்ப்பதற்கு நன்கு யோசித்து நடவடிக்கைகள் எடுத்து வருகிறது. ஆனால் முதலில் அது அமுலுக்கு வரும்போது கொஞ்சம் சங்கடங்கள் ஏற்படலாம். சில வியாபாரிகள் தங்களிடமுள்ள ஸ்டாக்கை வெளிப்படுத்தாது ஒருக்கால் விலை அதிகரிக்கலாம், வேறு ஏதாவது வசதி கிடைக்கலாம் என்று நிறுத்தி வைத்திருக்கலாம். முதலில் சில சங்கடங்கள் ஏற்படலாம். ஆனால் அப்போதைக்கப்போது சிவில் சப்ளைஸ் இலாகாவினர் பல ஜில்லாக்களுக்கும் சென்று விவசாயிகள், வியாபாரிகள் எல்லோரையும் கண்டு பேசி வேண்டிய நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டு வருகிறார்கள். விவசாயிகளைப் பற்றி ஒரு புகாரும் சொல்லப்படுகிறது. விவசாயிகள் நேரடியாக அதிக விலைக்கு விற்கிறார்கள் என்று அப்படி அவர்கள் செய்வார்களேயானால் அவர்கள் மீது வேண்டிய நடவடிவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படும் என்று எச்சரிக்கப்பட்டிருக்கிறார்கள். ஆனால் ஒருக்கால் நிர்ணயிக்கப்பட்ட விலைக்கு வியாபாரிகள் தான்யம் வாங்கமாட்டேன் என்கிறார்கள் என்ற சங்கடம் விவசாயிகளுக்கு ஏற்படுமேயானால் விவசாயிகளிடம் இருந்து நிர்ணயிக்கப்பட்டிருக்கிற விலைக்கு வாங்கிக் கொள்ளப்படுமென்றும் தெரிவிக்கப்பட்டிருக்கிறது. இது தான் இப்பொழுது அரசாங்கம் எடுத்திருக்கும் நடவடிக்கைகள். ஆனால் சில இடங்களில் விலை திடீரென்று ஒரேயடியாக குறையவில்லை என்று சொன்னால், அப்படி ஓரிரு இடங்களில் அதிகப்படி இருக்கலாம், எல்லா யிடங்களிலும் அப்படியில்லை, பொதுவாக நான் விசாரித்த வரையில் விலை குறைந்து கொண்டுதான் வருகிறது. பிப்ரவரி 1-ம் தேதியில் இருந்து விலை அதிகமானதாக தெரியவில்லை. ஆனால் எப்படியும் விலை குறைந்துதான் ஆகவேண்டும். குறையலாம் ஆனால் கிடைக்காமல் . போய்விடுமோ

என்று அனாவசியமான அச்சங்களை வெளிப்படுத்கிறார்கள். அப்படி அச்சப்படுவதற்கு இடமில்லை. என்னென்ன கஷ்டங்கள் ஏற்பட்டாலும் அவைகளை சமாளித்துக் கொள்வதற்கு வேண்டிய நடவடிக்கைகளை அரசாங்கம் தக்க சமயத்தில் எடுத்துகொள்ளும். இப்பொழுது விலை குறைந்து கொண்டுதான் இருக்கிறது. ஆனால் சிலயிடங்களில் வேண்டுமென்றே இந் நடவடிக்கைகளைப் பிடிக்காதவர்கள், இதில் அக்கரை கொண்டவர்கள் தாங்களே தங்கள் இஷ்டம்போல் வியாபாரம் செய்ய வேண்டுமென்று அக்கரை கொண்டவர்கள் இருக்கிற குறைகளை மிகைப்படுத்தி சொல்கிறார்கள் என்பதுதான் என் எண்ணம். ஆனால் அரசாங்கம் ஒன்றிலும் அனாவசியமாக தலையிடவில்லை. வியாபாரிகளுக்கோ அல்லது மற்றவர்களுக்கோ பாதகம் விளைவிக்கவேண்டுமென்று சர்க்கார் ஒன்றும் செய்யவில்லை. பொதுமக்களின் நன்மையை உத்தேசித்தே அரசாங்கம் மேற்கூறிய நடவடிக்கைகள் எடுத்திருக்கிறது. இரண்டு மூன்று நாட்கள் நான் டெல்லியில் இருந்தேன். இப்பொழுது அரிசி சாப்பிடுகிறவர்களைவிட கோதுமை சாப்பிடுகிறவர்களுக்குத்தான் இப்பொழுது கஷ்டம் அதிகம். அரிசியைவிட கோதுமைக்குத்தான் இப்பொழுது பற்றாக்குறை அதிகமாகயிருக்கிறது. கோதுமை சாப்பிடுகிறவர்கள்கூட அரிசி கிடைக்குமா என்று எண்ணும் நிலை ஏற்பட்டிருக்கிறது. ஆனால் இந்த ராஜ்யத்தைப் பொறுத்தமட்டில் நமக்கு அரிசி பற்றாக்குறை என்ற கவலையில்லை. இப்பொழுது நிர்ணயிக்கப்பட்டிருக்கும் விலைக்கு கிடைக்கவில்லையென்றோ அல்லது கூடுதல் விலைக்குத்தான் கிடைக்கிறது என்றால் நாம் வாங்குகிற அரிசியை ஆங்காங்கு நியாயவிலைக் கடைகள் வைத்து விநியோகிப்பது என்பதுதான் அரசாங்கம் எடுத்துக்கொள்ள உத்தேசிக்கும் நடவடிக்கைகள். அதிகபட்ச விலை நிர்ணய உத்தரவு ராஜ்யம் பூராவும் இருக்கிறது. யாரும் இதிலிருந்து தப்பித்துக் கொள்ள முடியாது, என்று நான் இந்த சமயத்தில் எடுத்துக் கூற விரும்புகிறேன். மற்ற ஒரு விஷயம், கனம் அங்கத்தினர்கள் சொல்லியது பற்றியதாகும். நான் வெளிப்படுத்திய ஒரு அபிப்பிராயம் பற்றியதாகும். வானொலி என்ற பெயரைப் பற்றி உண்ணாவிரதம் இருப்பது பற்றி நான் குறிப்பிட்ட அபிப்பிராயம். அதைப் பற்றி சில அங்கத்தினர்கள் குறிப்பிட்டதாக நான் தெரிந்து கொண்டேன். நான் ஒன்றும் தவறுதலாக சொல்லவில்லை. நான் யாரையும் குறைவாகப் பேசவும் இல்லை. அன்று நான் கூறியதை மீண்டும் இந்த மன்றத்தில் வற்புறுத்த விரும்புகிறேன். வானொலி என்ற பெயர் வேண்டுமென்று விரும்புவர்கள் அல்லது அபிப்பிராயப் படுகிறவர்கள் எவ்வளவு பலமாக அபிப்பிராயப் பட்டாலும் சரி அதற்காக உண்ணாவிரதம் இருப்பது தவறு என்பது எனது அபிப்பிராயம். அங்கத்தினர்கள் பலர் அதை ஒப்புக் கொள்வார்கள். ஆனால் உணர்ச்சி மிகுதியால் ஒருவர் வேறு வகை தெரியாமல் உண்ணாவிரதம் மேற் கொள்வார் என்றால் அவரைப் பார்த்து வெளியே இருப்பவர்கள் " சபாஷ் " கூறுவது மிகத் தவறு என்பது என் அபிப்பிராயம். அதைத்தான் நான் அன்று கூறினேன் : அகில இந்திய ரேடியோ அல்லது " ஆல் இந்தியா ரேடியோ " என்ற பெயர். ஒரு டிரேட் மார்க் போலாகும். ரேடியோக்கள் அகில உலக ஸ்தாபனமாக இருக்கிறது. ஒன்றுக்கொன்று தொடர்புள்ளது. எந்த நாட்டின் ரேடியோ எது என்று தெரிய வேண்டும். பி.பி.ஸி. என்று இருப்பது எல்லோருக்கும் தெரியும். ப்ரைவட் செக்டரிலும் ரேடியோக்கள் இருக்கின்றன. ஆல் இந்தியா ரேடியோ என்பது ஒரு டிரேட் மார்க்காகும். அகில இந்திய ரேடியோ என்று சொல்லிக் கொண்டு வந்தார்கள். இந்தியாவிற்கு ஒரு டிரேட் மார்க் இருக்கவேண்டுமென்று ' ஆகாஷ்வாணி என்ற பெயரை அமைத்திருக்கிறார்கள். அந்தப் பெயர் கூடாது என்று ஒரு சிலர் கூறுகிறார்கள். ஒரு சில கனம் அங்கத்தினர்கள் தவிர தமிழ் நாடு, சென்னை ராஜ்யம் பாரத நாட்டின் ஒரு பகுதியாகும் என்பதை ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் தனி தமிழ் நாடு, அல்லது திராவிட நாடு வேண்டுமென்று சொல்கிறவர்கள் ஆகாஷ்வாணி என்ற பெயர் கூடாதென்று சொன்னால் அவர்கள் அப்படிச் சொல்லிக் கொள்ளலாம். ஆனால் நாம் யாரும் அதை ஒப்புக் கொள்ள முடியாது. தமிழில் பிராட்காஸ்ட் செய்யும்போது ஆகாஷ்வாணி என்று சொல்லக் கூடாது என்பதுதான் இப்போதைய கிளர்ச்சி, அது அர்த்தமற்றது. அதை நான் ஆதரிக்க முடியாது.

[Sri M. Bhaktavatsalam] [9th February 1959

10-10 a.m. ஆனால் வானொலி என்கின்ற பெயர் கூட புதிதாக இப்போது கிளர்ச்சி செய்கிறவர்கள் கொண்டு வந்த பெயர் அல்ல. அகில இந்தியா ரேடியோக்காரர்கள் அமைத்த பெயர்தான். தமிழில் அகில இந்திய ரேடியோ என்று சொல்லும்போது அவர்களாகவே வானொலி என்ற பெயரை வைத்துக் கொண்டார்கள். இப்போது ஆகாசவாணி என்று சொல்லுவதோடு கூட வானொலி என்ற பெயரையும் சொல்ல வேண்டும் என்று இந்த அரசாங்கத்தின் சார்பாக மத்திய அரசாங்கத்தனிடத்தில் சொல்லப்பட்டது. அதை அவர்களும் ஒத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆகவே இதற்காக ஒரு பெரிய கிளர்ச்சி செய்யவேண்டிய அவசியமில்லை என்பதை தெரிவித்துக் கொண்டு என்னுடைய வார்த்தைகளை முடித்துக் கொள்கிறேன்.

**Mr. SPEAKER :** இப்போது கட்சித்தலைவர்கள் பேசவேண்டியிருக்கிறது. அதில் கனம் சின்னத்துரை அவர்கள் முன்னால் பேசியாய்விட்டது. கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் அவர்களுடைய இருப்பிடத்தில் காணப்படவில்லை. ஆகவே கனம் பக்கிரிசாமி பிள்ளைக்கு 20 நிமிடங்களும், கனம் அண்ணாத்துரைக்கும் எதிர் கட்சித் தலைவர் கனம் ராமசாமி முதலியாருக்கும் ஒவ்வொருவருக்கும் 30 நிமிடங்கள் நேரமும் பேசுவதற்கு ஒதுக்கியிருக்கிறேன். அதன் பின்னால் நிதி அமைச்சர் அவர்கள் பேசுவார்கள். இப்போது கனம் பக்கிரிசாமி பிள்ளை அவர்கள் பேசலாம்.

***Sri S. PAKKIRISAMI PILLAI :** கனம் தலைவர் அவர்களே, கவர்னர் பெருமான் அவர்கள் நிகழ்த்திய பிரசங்கம் புதிய நல்ல அம்சங்கள் கொண்டதாக அமைந்திருக்கிறது என்று நாம் ஒத்துக் கொள்ள முடியாது. இந்த பிரசங்கம் சர்வ சாதாரணமாக மற்றவர்கள் பேசிக்கொண்டு வரும்படியான முறையில் தான் இந்தப் பிரசங்கம் அமைந்திருக்கிறது என்பதை நாம் பார்க்கிறோம். இந்த பிரசங்கத்தில் மந்திரிமார்கள் என்னென்ன வெளியில் சொல்லிக் கொண்டிருந்தார்களோ அவைகளைத்தான் கவர்னர் அவர்களும் தன்னுடைய பிரசங்கத்தில் தெரிவித்திருக்கிறார்கள். ஒன்று மாத்திரம் விசேஷமானது, என்னவென்று சொன்னால் அரசாங்க என்.ஜி.ஓ.-க்களுக்கு கொடுக்கும்படியான ஐந்து ரூபாய் சம்பள உயர்வு என்பது தான். கேவலம் ஐந்து ரூபாய் சம்பள உயர்வானது சாதாரணமாக எல்லா ஆபீஸ்களிலும் வருஷா வருஷம் கொடுக்கப்படுகிற சம்பள உயர்வு தான். அதைப்பற்றி கவர்னர் பெருமான் அவர்கள் தனது உரையில் ஐந்து ரூபாய் சம்பள உயர்வு கொடுக்கப்படும் என்கின்ற விபரத்தை அவர்களது உரையில் சொல்ல வேண்டும் என்று எதிர்ப்பார்த்து இருப்பார்களானால் அது மற்ற அரசாங்க சிப்பந்திகள் இதில் ஏமாற்றம் அடைந்திருப்பது போல் மற்ற மக்களும் ஏமாற்றமடைந்திருக்கிறார்கள் என்று சொன்னால் அது மிகையாகாது. இதைப் பற்றி சாதாரணமாக நிதி அமைச்சர் அவர்கள் தன்னுடைய பட்ஜெட் உரையில் சொல்லியிருந்தால் போதுமானதாக இருந்திருக்கும். இம்மாதிரிப் பட்ட ஒரு அதிருப்திகரமான சிறிய விஷயத்தை கவர்னர் அவர்களது உரையில் சொல்லியிருப்பது அவர்களது பதவிக்கு சரியானது அல்ல என்பது என் அபிப்பிராயம். ஏனென்றால் சாதாரணமாக ஒரு வேலையை செய்யும் போது அதற்குரிய சம்பள விகிதம், கூலி விகிதம் எவ்வளவு கொடுக்கப்படவேண்டும், நியாயமாக மற்ற நீதிபதிகள் எல்லாம் நிர்ணம் செய்திருக்கிறார்களோ அந்த முறையில் பட்டினி போடாத வகையில் சம்பளத்தை இவர்களுக்கும் கொடுத்தாக வேண்டும். இந்த நிலைமையில் ஆங்கிலேய நாடுகளில் தமது அரசாங்கத்தில் வேலை செய்யும் சிப்பந்திகளுக்கு உயர்ந்த சம்பள விகிதத்தை கொடுத்து வருகிறார்கள். பட்டினி வாராமல் தடுப்பதற்காக மற்ற கம்பெனிகளில் எவ்வளவு கொடுக்கிறார்களோ, அந்த சம்பளத்தைவிட அதிகமான சம்பளத்தை தங்களுடைய சிப்பந்திகளுக்கு கொடுத்துக்கொண்டு வருவதை இன்னும் இங்கிலீஷ் நாடுகளில் நாம் பார்க்கிறோம். அவ்விதம் கொடுத்துக் கொண்டு வருவதினால்தான் அந்த சிப்பந்திகளிடத்தில் லஞ்ச ஊழல்களை காண முடிவதில்லை. அது மாத்திரமல்ல. அவர்கள் மற்றவர்களுக்கு எடுத்துக்காட்டாக இருக்கக்கூடிய முறையில் வேலைகளையும் செய்து வருகிறார்கள். ஆகவே அந்த நிலைமையை நம் நாட்டிலும் ஏற்படுத்த வேண்டும். பொதுவாக எவ்வளவு கொடுத்தாலும் குறை கூறிக்கொண்டே யிருப்பார்கள் என்று இங்கு சொல்லப்

பட்டது. அவ்விதம் சொல்லுவது நமக்கு நல்லதல்ல. அவர்களுக்கு வேலைக்கு தகுந்தபடி சம்பள உயர்வு கொடுக்கும்படியான ஒரு திட்டத்தை சீக்கிரமாக நாம் அமுலுக்குக் கொண்டு வரவேண்டும். அதைக் கொண்டு வருவதற்கு இந்த அரசாங்கத்திலேயே வேலை செய்து ரிட்டயராகியிருக்கிற கஞ்ச மனப்பான்மை கொண்ட ஒருவரை நியமித்திருப்பது சரியல்ல. அவருடைய கஞ்ச மனப்பான்மையில்தான் அவருடைய தீர்ப்பும் இருக்கும். சென்னையிலேயே சேவகம் செய்த ஒரு ஆபீஸரை இதற்கு நிர்ணயித்திருப்பதால் அவரிடமிருந்து நிர்ப்பட்சமான ஒரு முடிவை அவருடைய தீர்ப்பிலிருந்து எதிர்ப்பார்க்க முடியாது என்று அரசாங்க சிப்பந்திகள் எண்ணிக்கொண்டிருக்கின்றனர். ஆகவே வெளியிலுள்ள நீதிபதிகளில் யாரையாவது நியமித்து இதைப்பற்றி ஆலோசிக்க வேண்டும் என்பதுதான் சிப்பந்திகளுடைய விருப்பம். ஆகவே இதை மாற்றி அமைத்து வேறொருவரை போடுவதற்கு முடியுமா என்பதை மந்திரி அவர்கள் சொல்ல வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன்.

இது தவிர, கவர்னர் பெருமான் அவர்களது உரையில், அரசாங்கம் இப்போது போய்க்கொண்டிருப்பது போன்றே போய்க்கொண்டிருக்கட்டும் " Let the caravan move on " என்கின்ற நிலையில் இதை சொல்லியிருக்கிறார்கள். இந்த நிலையிலே மெதுவாக நகர்ந்து கொண்டு போகும் என்று சொல்லப்பட்டிருப்பது போன்றுதான் மெதுவாகத்தான் போய்க்கொண்டிருக்கிறது. அரசாங்க டிப்பார்ட்மெண்ட்களில் வேலைகள் ஏழைகளுக்காக செய்யப்படும் அபிவிருத்தி வேலைகள் மெதுவாகத்தான் நடந்து கொண்டிருக்கின்றன. உதாரணமாக சென்னை நகரத்தில் ஸ்லம் இம்ப்ருவ்மெண்ட் ஆக்ட் ஒன்றை ஏற்படுத்தியிருக்கிறார்கள். அதன்கீழ் சில குடிசைப் பிரதேசங்களை எடுத்துக் கொண்டு சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்கின்ற எண்ணத்தின் பேரில் சில குடிசைப் பிரதேசங்களை எடுத்துக்கொண்டார்கள். முதலாவது ஐந்தாண்டு திட்டம் வருவதற்கு முன்னாலேயே இந்தத் திட்டம் போடப்பட்டும் வேலை நடைபெற வில்லை. அதன் பின்னால் இரண்டாவது ஐந்தாண்டு திட்டத்தில் பணமிருந்தும் இன்னும் சரியான விதத்தில் வேலை நடைபெற்று வருவதாகத் தெரியவில்லை. இனிமேல் மூன்றாவது ஐந்தாண்டு திட்டத்திலாவது இந்த வேலைகளை செய்து தருவார்கள் என்றுதான் நினைக்கவேண்டிய நிலையிருக்கிறது. இவ்விதம் அரசாங்க டிப்பார்ட்மெண்ட் வேலைகள் எல்லாம் மெதுவாக நடைபெற்றுக்கொண்டிருப்பதை பார்த்துக்கொண்டிருக்கின்றோம். இதை ஏன் சொல்லுகிறேன் என்றால் டிப்பார்ட்மெண்ட் அதிகாரிகள் அசிரத்தையோடு இருந்து வருகிறார்கள். டிப்பார்ட்மெண்ட் அதிகாரிகள் எல்லாம் ஆர்வத்தோடு வேலை செய்து வருவதாக தெரியவில்லை. சில அதிகாரிகள் மாத்திரம் மிகுந்த அக்கறையோடு வேலை செய்து வருகிறார்கள். உதாரணத்திற்கு சொல்ல வேண்டுமென்றால் இப்போது இருக்கின்ற எலக்ட்ரிஸிட்டி இன்ஜினியர் அவர்கள் மிகுந்த ஆர்வத்தோடு முன்னேற்றத்திற்காக பாடுபட்டு வருவதை நாம் கண்கூடாகப் பார்க்கிறோம். அந்த மாதிரியான ஆர்வம் எல்லா இலாகா அதிகாரிகளுக்கும் ஏற்பட்டாகவேண்டும். அதற்காக மந்திரிமார்கள் தக்க நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். அதிலும் முக்கியமாக இந்த மாதிரியான ஏழைகளுக்கு போடப்பட்டிருக்கும் திட்டங்களை உடனடியாக நிறைவேற்றுவதற்கு அதிகாரிகளை தகுந்த விதத்தில் எச்சரிக்கை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். மேலும் தேர்ந்தெடுக்கப்பட்ட சேரிகளில் உடனடியாக வேலைகளை ஆரம்பிக்க வேண்டும். என்னுடைய வட்டாரத்தில் வாழைப்பூச்சேரி என்ற ஒரு குடிசைப் பிரதேசத்தை அபிவிருத்தி செய்வதற்காக தேர்ந்தெடுத்து பத்து அல்லது பன்னிரண்டு வருடங்கள் ஆகிவிட்டது. இன்னமும் அந்த இடத்தில் சீர்திருத்தம் ஏற்பட வில்லை. அதன் பக்கத்தில் ஓட்டேரி வாய்க்கால் ஒன்று போய்க்கொண்டிருக்கிறது. லட்சக்கணக்கான கொசுக்கள் அந்த வாய்க்காலைத்தான் உறைவிடமாக கொண்டிருக்கின்றன. அந்த வாய்க்கால் துர்கந்தத்திற்கு தாயகமாக இருந்துகொண்டிருக்கின்றது. அந்த இடத்தை சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்று பப்ளிக் வொர்க்ஸ் மந்திரி அவர்களிடத்தில் சொல்லி அதற்காக பணமும் ஒதுக்கப்பட்டது. ஆனால் பப்ளிக் வொர்க்ஸ் இன்ஜினியர் இன்னும் அந்த இடத்தை

[Sri S. Pakkirisami Pillai] [9th February 1959

ம

ஏறெடுத்தும் பார்க்கவில்லை. இனிமேலாவது அந்த இடத்தை உடனடியாக சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இது மாதிரி இருந்தால் மற்றவர்கள் எப்படி அரசாங்கம் நல்ல முறையில் நடக்கிறது என்று சொல்ல முடியும். அதோடு கூட, இப்போது அரிசிப் பற்றுக் குறையை நிவர்த்திக்க நியாய விலைக் கடைகள் என்று ஆங்காங்கு இருக்கவேண்டுமென்று சொல்லி அதற்காக நியாய விலைக் கடைகளை ஏற்பாடு செய்கிறார்கள். ஆனால் நியாய விலைக் கடைகள் எவ்வளவு இருக்
10-20 a.m. கின்றன, எத்தனை பேர்களுக்கு உபயோகப்படுகின்றன, எத்தனை தூரம் உபயோகமாக இருக்கிறது என்று கணக்குப் போட்டுப் பார்த்தால், அதன் உபயோகம் யாருக்கும் தெரியவில்லை. அது எங்கேயோ சிலரின் நன்மைக் காகத்தான் இருக்கிறது. மற்றவர்கள் யாருக்கும் நன்மை விளைவிப்ப தாகத் தெரியவில்லை. நியாய விலைக் கடைகளின் நுணுக்கத்தைத் தெரிந்து சமீபத்திலே எண்ணெ கம்பெனிக்காரர்கள் நியாய விலைக் கடைகள் திறந்து வைக்கப் போகிறோம், அதிலே மண்ணெண்ணெ விற்கப் போகிறோம் என்று சொல்லி நெருக்கடியை உண்டாக்கி வந்தார்கள் சென்னை நகரத்திலும் கிராமப் புரங்களிலும். இப்படி ஒரு நெருக் கடியை உண்டாக்கியதன் விளைவாக சில்லரைக் கடைக்காரர்களுக்கு எண்ணெ கிடைக்கவில்லை, அதனால் மக்களுக்கு எண்ணெ கிடைக்கவில்லை. தனி நபர்கள் ஆங்காங்கு எண்ணெயை எடுத்துக் கொண்டு போய், 3½ அணு, 3 3/4 அணு என்று இருந்ததை, நியாய விலைக் கடையில் 4 அணு விற்கலாம் என்று இருந்தும் கூட, புட்டி 6 அணு, 8 அணு என்று விற்க ஆரம்பித்தார்கள். போன வாரம் முழுவதும் இந்த நெருக்கடி அதிகமாக இருந்து கொண்டிருந்தது சென்னையிலே. அநேக குடும்ப மக்கள் மண் ணெண்ணெ கிடைக்காமல் இரவிலே இருட்டில் இருக்கும் நிலையில் இருந் தார்கள். கொழுத்த லாபத்தைச் சம்பாதிக்கும் எண்ணெ கம்பெனிகள், இந்த மாதிரியான ஒரு நெருக்கடியை உண்டாக்கி லாபம் சம்பாதிப்பதற்கு இந்த மாதிரியான கேவலமான நிலைக்குப் போக இடம் கொடுக்கிறதே, இதைப் பயன்படுத்தி 13 ஏஜெண்டுகள் பணம் சம்பாதிக்க—மக்கள் மத்தி யிலிருந்து சுரண்டிச் சம்பாதிக்க—இடம் இருக்கிறதே என்பதை நாம் பரிசீலனை செய்ய வேண்டியிருக்கிறது. இந்த மாதிரி நெருக்கடியை உண்டாக்கி வெவ்வேறு பகுதிகளில் மக்கள் பணத்தை அநியாயமாகச் சுரண்டிக்கொள்வதற்கு உண்டான வழியை ஏற்படுத்தக் கூடாது. நாணயம் வியாபாரிகள் மத்தியில்—கம்பெனிக்காரர்கள் மத்தியில்—இருக்கவேண்டும் என்பதையும் அரசாங்கத்தார் இனிமேல் அவர்களுக்குச் சொல்லி நட வடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டும். அதோடு கூட இந்த மாதிரி கம் பெனிகளை—கொழுத்த லாபம் கொடுக்கும் கம்பெனிகளை—ஏன் நாஷனலைஸ் செய்யக் கூடாது? அதையெல்லாம் நாஷனலைஸ் செய்து, அவைகளை நாட்டு நிர்வாகத்தின் கீழ் கொண்டு வந்து, அதில் வரக்கூடிய லாபத்தை மக்களின் பொதுச் சொத்தாகச் செய்து விடுவதற்கு மத்திய சர்க்காருக்குச் சிபாரிசு செய்து நடவடிக்கை எடுப்பதற்கு உண்டான வழிகளை நம் அர சாங்கம் செய்ய முயற்சி செய்யவேண்டுமென்று இந்த சந்தர்ப்பத்திலே கேட்டுக் கொள்கிறேன். அதோடு இப்போது நம் நகரத்தில் ஒரு நெருக்கடி கூட—வீடு இல்லாத நெருக்கடி—இருந்து கொண்டிருப்பதைப் பார்க்கிறோம். அதற்காகச் சில டிபார்ட்மெண்டுகள் வேலை செய்து கொண்டு வருகின்றன. ஒன்று சென்னை நகர கார்ப்பொரேஷன், மற்றொன்று ஸிடி இம்ப்ருவ் மெண்ட் டிரஸ்ட். இந்த ஸிடி இம்ப்ரூவ்மெண்ட் டிரஸ்ட் சென்னை நகரத் தில் இருக்கும்படியான வெளிப்புறங்களை அல்லது கிடைக்கும்படியான காலி மைதானங்களை அதிக விலைக்குவாங்கி அந்த இடங்களில் வீடுகளைக் கட்டிக் கொடுக்கிறார்கள். அவர்கள் இப்படிக் கட்டிக் கொடுக்கும்படியான வீடுகள் அதிகத் தொகையைக் கொண்டதாக இருக்கிறது. வேறு வழி யிலலாத மக்கள், 20 வருஷத்தில் தானே இந்தப் பணத்தைத் தீர்த்தாக வேண்டும் என்ற எண்ணத்தோடுகூட எவ்வளவு அதிகமாக இருந்தாலும் வாங்கிக் கொள்ளத் தயாராக இருக்கிறார்கள். அந்தத் தொகையைக் கொடுத்த பிறகு, வாங்கியது அநியாயம், 3 மடங்கு அல்லது 2 மடங்காக இருக்கிறது என்று அவர்கள் எண்ணும்படியான நிலையில் இருக்கிறார்கள். அதுவும் இந்த மாதிரி சென்னை நகரத்திலேயே ஆர்ஜிதம் செய்து இந்த மாதிரியான வீடுகளைக் கட்டுவதற்குப் பதிலாக நகரத்திற்கு வெளியில், நகரச் சுற்றுப்புறங்களில் சிறு சிறு நகரங்களை ஆங்காங்கு ஏற்பாடு செய்தால்

9th February 1959] [Sri S. Pakkirisami Pillai]

சென்னை நகரில் அதிக நெருக்கடி இல்லாமல் இருக்கும். அந்த யோசனையை ஸிட்டி இம்ப்ருவ்மெண்ட் டிரஸ்ட் ஏற்றுக் கொண்டு சிறு சிறு நகரங்களை நம் சென்னை நகரத்திற்கு வெளியிலும், மற்ற பெரிய நகரங்களுக்கு வெளியிலும் உண்டாக்கும் திட்டங்களை ஆங்காங்கு ஏற்படுத்தினால், இங்கு இருக்கும் மைதானங்கள் பெரிய தொழிற்சாலைகளாகவோ, அல்லது பெரிய வியாபார ஸ்தலங்களாகவோ மாறி, மக்கள் வெளியிலிருந்து இங்கே வந்து வேலை செய்து கொள்ள வசதியேற்பட்டு, மக்கள் சௌகரியமாக இருப்பதற்கு குடியிருப்புகளை நகரங்களுக்கு வெளியே ஏற்பாடு செய்யவேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். அப்படிச் செய்யும்போது, நாம் பார்க்கிறோம் சென்னையைப் பொருத்த வரையில் தென் பகுதிதான் அழகாக விஸ்தரிக்கப்படுகிறது. வட பகுதி மிகவும் கேவலமான நிலையில் இருக்கிறது. அந்தப் பக்கம் சாக்கடையைத் திருப்பி துர் நாற்றத்தை உண்டாக்க ஏற்பாடு செய்கிறார்கள். சென்னை வட பகுதி, தென் பகுதி என்று சொல்வதிலே தவறு கிடையாது. அதுவும் நம் நாட்டின் பாகம் தான், இதுவும் நம் நாட்டின் பாகம்தான். வித்தியாசம்—ஒன்றுக்கொன்று ஏற்றத் தாழ்வு—இருக்கக் கூடாது—இல்லாத நிலையை ஏற்படுத்தவேண்டுமென்றுதான் நான் எடுத்துச் சொல்கிறேன். வட பகுதியில் சாக்கடையைத் திருப்பத் திட்டம் போட்டுத் திருப்பிவிட்டிருக்கிறார்களே தவிர, அந்தப் பகுதியை அழகுபடுத்தும் திட்டம் எதுவும் கிடையாது. சமீபத்திலே நமது உள் நாட்டு இலாகா அமைச்சர் அவர்கள் சொன்னார்கள், எலெக்ட்ரிக் டிரெயின்—இந்தப் பக்கம் திருவள்ளூர் வரையிலும், அந்தப் பக்கம் கும்மிடிப்பூண்டி, பொன்னேரி வரையில்—போடப் போகிறோம் என்று சொன்னார்கள். ஆனால் அதைப் பற்றி இது வரையில் ஒன்றும் கிடையாது. அப்படி எலெக்ட்ரிக் டிரெயின் போட்டால் அந்தப் பக்கம் மக்கள் நிறையக் குடியேற—இந்தச் சென்னை நகரத்தில் இருக்கும் தொழிற்சாலைகளுக்கு வருவதற்கான நல்ல வசதிகளைச் செய்து வைத்தவர்களாக ஆவார்கள். அதைச் செய்ய இன்னும் ஒன்றும் செய்யவில்லை. அதற்காகத்தான் இப்போது சென்னை நகரத்தில் முக்கியமாக இந்தக் குடியிருப்பு வசதியிலே நெருக்கடியைத் தீர்க்க வழி செய்வதற்கு அரசாங்கம் ஏற்றுக்கொள்ளவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். அதற்குண்டான வழிகளில் கோவாப்ரேடிவ் டிபார்ட்மெண்ட் ஒன்று. கோவாபரேடிவ் டிபார்ட்மெண்ட் இப்போது எப்படி வேலை செய்கிறார்கள் என்று சொல்வதற்கில்லை. ஆபீஸில் உட்கார்ந்து கொண்டு அதிகாரிகள் இருந்து கொண்டிருக்கிறார்களே தவிர, திட்டங்களைப் போட்டு, மக்களைத் தட்டி எழுப்பி அந்த மாதிரி வசதிகளைச் செய்து கொள்வதற்கு அவர்களுடைய ஆர்வத்தைத் தூண்ட முன் வருவது கிடையாது. யாராவது கேட்டால், இருக்கும் சட்டத்தைக் காண்பித்துச் செய்து கொள்ளுங்கள் என்று சொல்லும் நிலையில்தான் இருந்து கொண்டிருக்கிறார்கள். நாம் பார்க்கிறோம், இந்த கோவாபரேடிவ் டிபார்ட்மெண்ட் இப்போது கைத்தறித் தொழிலாளர்களுக்கென்று ஒரு ஹாண்ட்லூம் போர்டை ஏற்பாடு செய்திருக்கிறார்கள். அவர்களுக்கு, இந்திய சர்க்கார் கைத்தறித் தொழிலாளர்களுக்காக ஒரு மான்யத்தை வருஷவாரியாகக் கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். அந்தப் பணம் எப்படி வினியோகிக்கப்பட்டு வருகிறது என்று கூர்ந்து பார்த்தால் சில விஷயங்கள் தெரிகிறது. இந்த மதராஸ் ஸ்டேட் ஹாண்ட்லூம் வீவர்ஸ் கோவாபரேடிவ் சொஸைடி என்ற நிர்வாகம் ஹாண்ட்லூம் போர்டின் கீழ் நடந்து வருகிறது. இந்த சொஸைடி சில இடங்களில் பாக்டரிகளைத் திறந்து வைத்து தொழிலாளர்களை நியமித்து வேலை செய்ய ஏற்பாடு செய்திருக்கிறார்கள்.

இந்தக் கைத்தறி பாக்டரிகளுக்கு மான்யப் பணம் மத்திய அரசாங்கம் கொடுத்துக் கொண்டு வருகிறார்கள். சில பாக்டரிகளுக்கு சமீபத்தில் அந்த மான்யப் பணம் கொடுக்கவில்லை என்ற காரணத்தினாலே, அந்த பாக்டரிகளை மூடி விட்டார்கள். அந்த பாக்டரிகளில் இருந்த தொழிலாளர்கள் அனேகம் பேர்கள் இப்பொழுது வெளியே போய் வேலையில்லாத் திண்டாட்டப் பட்டாளத்தில் சேர்ந்துகொண்டு வெளியிலே நிர்க்கதியாக நிற்கும் படியான நிலைமையை ஏற்படுத்தி விட்டார்கள். அவர்களுக்கு உண்டான காம்பென்ஸேஷனோ மற்றவைகளோ கொடுக்கப்பட்டதாகத் தெரியவில்லை. 10-30 a.m.

கைத்தறி போர்டு ஒரு தடவை கூட்டம் போட்டுக் கூடிப் பேசுவார்களானால், அவர்களுக்கு மாத்திரம் நாலாயிரம், ஐயாயிரம் ரூபாய் செலவாகிறது. மத்திய சர்க்கார் கொடுக்கும்படியான மான்யம் இப்படிப் போகுமானால்,

[Sri S. Pakkirisami Pillai] [9th February 1959

தொழிலாளர்களுக்கு எந்த வழியிலே இவர்கள் வேலை செய்கிறார்கள்? கைத்தறி நெசவாளிகளுக்கு எந்த வழியிலே இது உபயோகமாக இருக்கிறது என்பதை நாம் கூர்ந்து பார்க்க வேண்டும். ஆபீஸ் நடத்துவதற்கும், கைத்தறி போர்டு கூட்டத்தை நடத்துவதற்கும் அந்த மான்யத் தொகை போகிறது என்று நான் சொன்னால் மிகையாகாது என்று நான் நினைக்கிறேன். ஆகவே, இம்மாதிரியான நிலைமையைத் தவிர்ப்பதற்கு அரசாங்கம் முன் வந்து, அதற்கு உண்டான வழிகளைக் கையாண்டு மக்களுக்கு உண்மையான பணியைச் செய்யவேண்டுமென்று இந்தச் சந்தர்ப்பத்திலே நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

அதோடு கூட, விலைவாசி நாராசம் போல் ஏறிவிட்டது. கனம் அமைச்சர் அவர்கள் இதைப்பற்றி விரிவாகப் பேசினார்கள். அரிசி விலையும், மற்ற சாமான்களின் விலையும் அதிகமாக ஏறிக்கொண்டு வருகிறது. ஆனால், புள்ளி விவரத்தையெல்லாம் கணிக்கும்படியான டிபார்ட்மென்ட் உண்மையான விலையைக் கணிப்பது கிடையாது என்பது என்னுடைய குற்றச்சாட்டு. அதனால், எல்லாத் தொழிற் சாலைகளிலேயும் ஆபீசுகளிலேயும் வேலை செய்பவர்கள் தங்களுக்கு நியாயமாகக் கிடைக்க வேண்டிய பஞ்சப்படியை வாங்குவதற்கு இயலாத நிலைமை ஏற்பட்டிருக்கிறது. விலைவாசியைக் கணிக்கும்படியான டிபார்ட்மென்டார், யாருக்காகவோ சாதகமான முறையில் தங்களுடைய வேலையைச் செய்கிறார்களோ என்று சந்தேகிக்கும்படியான வழியிலே அவர்களுடைய செய்கை இருக்கிறது என்று நான் சொல்வதற்கு முற்படுகிறேன். சமீபத்தில் ஒரு கமிட்டியிலே நான் பேசும்போது கூட, அதைப்பற்றி அங்கே கேள்வி எழுப்பப்பட்டது. "அரிசி விலை என்ன என்று கணித்திருக்கிறீர்கள்?" என்று கேட்டதற்கு, "அரிசியின் விலை ஒரு படி எண்பது நயே பைசே" என்று சொன்னார்கள். ஒரு படி அரிசி 80 நயா பைசேவுக்குக் கிடைக்கிறதா என்று நாம் பார்க்கும்போது, உண்மையிலேயே கிடைப்பதில்லை. ஆகவே, தவறாக, எங்கோ ஒரு இடத்தில் இருக்கும்படியான விலை வாசியைக் கணக்கில் எடுத்துக்கொண்டு, பொதுவாக, சராசரி விலை என்ன என்பதைக் கணிக்கும்படியான நிலையிலே தான் இந்த டிபார்ட்மென்ட் இருந்திருக்கிறது என்று சொல்ல வேண்டும். உண்மை நிலவரத்தைக் கணிக்காமல், தவறான வழியில், குறைத்துக் கணக்கிடுவது அநியாயமானது, அக்கிரமமானது. அதை மாற்றியமைக்கும்படியான நிலையை இந்த டிபார்ட்மென்ட் அதிகாரிகள் செய்தாகவேண்டும் என்று நான் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இன்னும் ஒரு நிமிஷத்திலே என்னுடைய வார்த்தையை முடித்துக்கொள்ளுகிறேன். நம் நகரத்தில் கொசு உபத்திரவம் எங்கு பார்த்தாலும் இருக்கிறது. இதைப் போக்குவதற்காக நகரசபை அதிகாரிகள் அதற்கென தனி ஆட்களை நியமித்திருக்கிறார்கள். கும்பகோணம் தான் கொசுவுக்குப் பெயர் போனது என்று சொல்வார்கள். அதையும் மிஞ்சிவிடும்படியாக சென்னை நகரம் மாறியிருக்கிறது. ஆட்களை அமர்த்தியிருக்கிறதே தவிர, அவர்கள் செய்யும்படியான வேலையின் பயனாக அங்கே என்ன ஏற்பட்டிருக்கிறதென்பதை பார்க்க முடியவில்லை. கொசு உபத்திரவம் எங்கு பார்த்தாலும் இருக்கிறதென்பது எல்லோருக்கும் தெரியும். இதை நிவர்த்திப்பதற்கு அரசாங்கம் தகுந்த கட்டளையிடவேண்டுமென்று கேட்டுக்கொண்டு, என்னுடைய வார்த்தையை இத்துடன் முடித்துக்கொள்கின்றேன்.

SRI C. N. ANNADURAI : சட்ட மன்றத் தலைவர் அவர்களே, கவர்னருடைய உரையின் பேரில், பல்வேறு கட்சிகளும் உறுப்பினர்களும் தங்களுடைய கருத்துரைகளைத் தெரிவிக்கின்ற முறையில், நான் என்னுடைய கருத்தை, திராவிட முன்னேற்றக் கழகத்தின் சார்பில், இந்த மன்றத்திலே எடுத்துச் சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன்.

நான் இதை என் இன்றையதினம் வலியுறுத்த வேண்டியிருக்கிறதென்றால், கவர்னர் உரையாற்றிய விழாவின்போது வராமலிருந்தவர்கள், அவருடைய உரையைப்பற்றி தங்களுடைய கருத்துரைகளை வழங்கலாமா என்ற கேள்வி பல்வேறு உறுப்பினர்களாலே இந்த மன்றத்தில் எழுப்பப்பட்ட காரணத்தினாலே, விழாவிலே கலந்துகொள்ளாமலிருப்பது என்பது ஒன்று; கவர்னருடைய உரையைப்பற்றி அந்தந்தக் கட்சிகள்

9th February 1959] [Sri C. N. Annadurai]

தங்களுடைய கருத்துக்களைத் தெரிவிப்பது என்பது முற்றிலும் வேறானது என்பதை நான் நினைவுபடுத்தவேண்டிய அவசியம் ஏற்பட்டதே என்று நான் மிக வருந்துகிறேன்.

விழாவிலே கலந்து கொள்ளாதவர்கள் விழாக் காலங்களிலே சொல்லப் படுகிற கருத்துக்களுக்கு மறுப்புரைகளோ விளக்கவுரைகளோ அளிப்பது, காங்கிரஸ்காரர்கள் ஆட்சிப் பொறுப்பை ஏற்பதற்கு முன்னாலேயே, வெள்ளை யர்கள் ஆட்சிக் காலத்திலே, கையாண்ட முறை தான் என்பதைப் பலர் எடுத்துக்காட்டினார்கள்.

ராஜா சர் முத்தையா செட்டியார் அவர்கள் சொன்ன சில கருத்தை மறுத்துப் பேச, அல்லது விளக்கம் அளிக்க வந்த, சர்தார் வேதரத்னம் அவர்கள், "அதெல்லாம் ஒரு சமயம் ராஜா சர் அவர்களுடைய பழைய கால அரசியல் நினைவாக இருக்கலாம்" என்று சொன்னார்கள். நான் அதிலே ஆச்சரியப்படவில்லை. ஆனால், எனக்கு இருக்கும் ஆச்சரியம் எல்லாம்—திரு. வேதரத்னம் அவர்களும் தங்களுடைய பழைய கால நினைவுகளை மறந்துவிட்டார்களே என்பது தான் எனக்கு மிகுந்த ஆச் சரியத்தைக் கொடுக்கிறது.

கவர்னர் ஆற்றிய உரையில் உப்பு சப்பு இல்லை என்று பலரால் எடுத்துச் சொல்லப்பட்டது. அதற்கு மிக முக்கியமான காரணம் எதுவாக இருக்குமென்று நான் கருதியதில், கவர்னர் தம்முடைய உரையின் கடைசி யில், "அமைச்சர் அவையின் பொருளாதாரக் கொள்கையைப்பற்றி வரவு செலவுத் திட்டத்தின் போது நிதி அமைச்சர் அவர்கள் தருவார்கள்" என்று குறிப்பிட்டிருப்பதால், இதிலே எந்தக் கொள்கையைப்பற்றியும் பேச வேண் டிய அவசியம் இல்லாத காரணத்தால், நடைபெற்ற செய்திகளையும், நடை பெறலாம் என்று எதிர்பார்க்கப்படுகிற செய்திகளையும் இதிலே குறிப்பிட் டிருக்கிற காரணத்தால், இதிலே வெகுவாக, அதிகமாக சுவை ஏற்படாமல் இருந்திருக்கிறது. சுவை ஏற்படாமல் இருந்திருக்கிறது என்பது மட்டுமல்ல,— இந்த மன்றத்திலே உள்ளவர்கள் கவனிக்கவேண்டுமென்று இதைத் தொடர்பாக நான் சொல்லிக் கொள்வேன்—இப்படி ஒரு விழா தேவை தானா என்று யோசிக்கவேண்டிய அளவுக்கு, இந்த விழாக் காலத்திலே தரப்படுகிற கருத்துக்கள் கொள்கை விளக்கக் கருத்துக்கள் அல்ல என்று எடுத்துச் சொல்லப்பட்டுவிட்டால், கொள்கை விளக்கக் கருத்துக்கள் வரவு செலவுத் திட்டத்திலே இருக்கப் போகின்றன என்று எடுத்துச் சொல்லப் பட்டுவிட்டால், ராஜ பார்ட் வேஷத்திற்கு முன்னால் முதலிலே சாதாரண வேஷம் வந்து போவதைப் போல், ஒரு கவர்னர் உரை என்பது விழாக் காலங்களில் தேவை தானா என்பதை நாம் எண்ணிப் பார்க்க இந்த உரை நம்மைத் தூண்டுகிறது.

நான் விரும்புவது—கவர்னர் உரையின் போது கொள்கையைப் பற்றிய பிரச்னைகளும், நிதி அமைச்சருடைய வரவு செலவுத் திட்டத்தின்போது அந்தக் கொள்கைகளுக்கேற்ப அவர்கள் தங்களுடைய வரவு செலவுத் திட்டத்தை வகுத்திருக்கிறார்களா என்ற பரிசீலனையும் அமைந்திருக்கு மானால், கவர்னர் உரை ஆற்றுவதிலேயும், அதிலே இந்த மன்றத்தில் உள்ளவர்கள் கலந்துகொள்வதிலேயும் மிகுந்த பொருத்தம் இருக்க முடி யும். ஆனால், கவர்னர் தங்களுடைய உரையின் இறுதிக் கட்டத்தில், "கொள்கை விளக்கத்தை நிதி அமைச்சர் அவர்கள் தருவார்கள், நான் என்னுடைய உரையை அளித்திருக்கிறேன்" என்ற முறையில் சொல்லி யிருக்கிறார்கள்.

அவர்கள் தங்களுடைய உரையில் என்ன தெரிவித்திருக்கிறார்கள் என்று பார்த்தால், முதலிலே வழக்கப்படி, பருவ நிலைமையைப்பற்றி ஆரம்பித்து, உணவுப் பிரச்னைக்குச் சென்று, உணவுப் பிரச்னையிலேயிருந்து நிலப் பிரச்னைக்குச் சென்று, நிலப்பிரச்னையிலே சம்பந்தப்பட்டிருக்கிற வளர்ச்சித் திட்டத்தைப்பற்றிக் குறிப்பிட்டுவிட்டு, அதற்குப் பிறகு பாசனத் திட்டங்களுக்கு வந்து, அதற்கும் பிறகு நெய்வேலியிலே தாங்கள் தொழில் வளர்க்கிறோம் என்று கூறி, இப்படி நடைபெற்றுக்கொண்டு வருகிற காரியங்களைப்பற்றி இதிலே குறிப்பிட்டிருக்கிறதே தவிர, நடைபெற்றுக்கொண்டிருக்கிற காரியம் நடைபெற வேண்டிய காரியத்திலே எவ்வளவு சிறு பகுதி என்பது பற்றி கொள்கையை விளக்கினால் நிச்சயமாகத் தெரியும்.

[Sri C. N. Annadurai] [9th February 1959

ஆனல், கவர்னர் பெருமானுடைய உரையிலே அதிகமான அளவுக்கு விவாதத்திற்கு இடமில்லாமல் இருப்பதை கனம் அங்கத்தினர்கள் சுவையும் சூடும் ஏற்றி பல்வேறு பிரச்னைகளை இங்கே கிளப்பியிருப்பதால் கொஞ்சம் பேசுவதற்கு நல்ல மகிழ்ச்சிகூட இருக்கிறது.

உதகமண்டலத்திற்கு இவர்கள் ஏன் வரவில்லை என்று இவ்வளவு கனிவோடு அழைக்கிருர்களே என்று எண்ணிப் பார்க்குபோது, அவர் களுக்கெல்லாம் எங்கள் கழகத்தாரிடத்திலே இருக்கும் பற்றுதல் மிகவும் தெரிகிறது. உதகமண்டலத்திற்கு நாங்கள் ஏன் வரவில்லை என்று கேட் கின்றவர்கள்—சர்தார் வேதரத்னம் அவர்கள் பேசியதாக நான் கேள்விப் பட்டேன்.—"சென்னைக்கு தமிழ் நாடு என்ற பெயர் வைத்துவிட்டால் வருவதாக அண்ணுதுரை சொன்னுரே; உண்மையிலேயே உதகமண்டலத் திற்குப் போவது கொள்கை அளவில் தவறு என்று சொல்லவில்லை; தமிழ் நாடு என்று பெயர் வையுங்கள்; வந்து விடுகிறேன் என்று சொல் கிருரே வந்துவிடுவாரா ?" என்று கேட்டிருப்பது—நான் அனுபவக் குறைவினலே தவறுகள் செய்யலாம், ஆனல், மிகுந்த அனுபவம் படைத்த சர்தார் வேதரத்னம் அவர்கள் எப்படி இந்தத் தவருன கொள்கைக் குழப்பத்திற்கு வந்தார் என்று என்னல் புரிந்துகொள்ள முடியவில்லை. நான் இந்த மன்றத்தில் சொன்னல் சரியா, இல்லையா என்று நிரூபித்துப் பார்த்துக்கொள்வதற்கு அமைச்சரவைக்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது. நான் இந்த மன்றத்திலே சொன்னது, கனம் மாதா கௌடர் அவர் களுக்குப் பதில் அளிக்கும் முறையில் சொன்னேன்: "வேண்டுமானல் சென்னைக்கு 'தமிழ்நாடு' என்று பெயர் வையுங்கள்; இதை பேரம் பேசுவதாக நீங்கள் கருதவேண்டாம். . . . . . . . . ."

10-40 a.m. THE HON. SRI C. SUBRAMANIAM: அண்ணுத்துரை பேசியதாகச் சொல்லவில்லை. அவருடைய தோழர்கள் பலர் இந்தக் கருத்தை எடுத்துப் பேசினர்கள். அவர்களுடைய பத்திரிகையில் "சென்னைக் குத் தமிழ் நாடு என்று பெயர் வைத்தால் நாங்கள் உதகைக்கு வருகிறோம்" என்று எழுதி இருப்பதை நான் படித்திருக்கிறேன். அண்ணுத்துரை அவர்கள் பேசினர் என்பதற்காகச் சொல்லவில்லை. அவர்கள் இப்பொழுதுதான் பேசிக்கொண்டிருக்கிருர்கள். மற்றவர்கள் பேசிய கருத்தை வைத்துத்தான் திரு வேதரத்தினம் அவர்கள் பேசி ஞர்கள்.

SRI C. N. ANNADURAI: நாங்கள் சொன்னல் நீங்கள் செய்ய மாட்டீர்கள்; அல்லது நாங்கள் சொல்லி விட்டோம் என்பதற்காக நீங்கள், அது நியாயமானதாக இருந்தாலும்கூட எடுத்துக்கொள்ள மாட்டீர்கள். இது வரை எடுத்துக்கொண்டதில்லை என்ற காரணத்தினல் எங்கள் கட்சித் தோழர்கள் அதைப்பற்றி ஒரு அறைகூவல் (challenge) விடுவதுபோல் "தமிழ் நாடு" என்று பெயர் வைத்தால் நாங்கள் உதகமண்டலத்திற்கு வருகிறோம்" என்று பேசி இருக்கிருர்கள். நீங்கள் இதைச் செய்ய மாட்டீர்கள் என்ற காரணத்தினல் "இதைச் செய்யுங்கள் பார்க்கலாம்" என்று சொன்னதே தவிர, சென்னைக்குத் தமிழ் நாடு என்று பெயர் வைப்பதற்கும், உதகமண்டலத்தில் கூட்டம் நடத்துவதற்கும் தொடர்பு படுத்தவில்லை. இவ்வளவு முறைபற்றிப் பேசுகின்ற நிதியமைச்சர் அவர்களை நான்—கனம் சபாநாயகர் அவர்களே, தங்கள் மூலம் கேட்க விரும்பு கிறேன்.—"எல்லாக் கட்சிகளும் இணங்கினல்தான் உதகமண்டலத்தில் சட்டசபைக் கூட்டத்தை நடத்துவதுபற்றி யோசிக்கப்படும். எந்த ஒரு கட்சி எதிர்த்தாலும் அந்தப் பிரச்சனை கவனிக்கப்படமாட்டாது" என்று இதே மன்றத்தில் நீங்கள் கூறிய வார்த்தை என்ன ஆயிற்று என்று. முதலிலே கைவிடப்பட்ட இந்தப் பிரச்சனை மறுபடியும் கனம் மாதாகௌடர் அவர் களால் வலியுறுத்தப்பட்ட போது கனம் நிதியமைச்சர் அவர்கள் சொன்னுர்கள்—நான் அருகில் இருந்து பார்த்திருந்தால்கூட அவர் கையை வீசி வீசிப் பேசியது அவ்வளவு நன்ருகத் தெரிந்திருக்காது. அன்றைய தினம் தொலைவில் இருந்து பார்த்தேன். ரொம்ப அழகாக இருந்தது. "இந்தப் பிரச்சனையில் எல்லாக் கட்சிகளும் ஒருமுகமான அபிப்பிராயம் தெரிவித்தால்தான் சர்க்கார் இதுபற்றி நடவடிக்கை எடுக்கும் என்று அவர்

9th February 1959] [Sri C. N. Annadurai]

கையை ஆட்டி ஆட்டிப் பேசிய இந்தப் பேச்சு எங்களைப் போல் நாடகத்தில் அதிகப் பழக்கம் இல்லாத நிதியமைச்சர்கூட இவ்வளவு நன்றாக நாடகம் ஆடுகிறாரே " என்று நினைக்கும்படி இருந்தது.

THE HON. SRI C. SUBRAMANIAM : சகவாச தோஷம் என்று நினைக்கிறேன்.

SRI C. N. ANNADURAI : கனம் நிதி அமைச்சர் அவர்கள் சொல்லுகின்றார் சகவாச தோஷம் என்று. அது சகவாச பலனாக மாறி நன்மை தர வேண்டும்.

உதகமண்டலம் போகக் கூடாது என்று நாங்கள் சொல்லுவதற்கு " பணச் செலவு ஆகும் " என்பது மட்டும் காரணம் அல்ல. " அப்படி என்ன செலவு ஆகிவிடப் போகிறது 50 ஆயிரம் ரூபாய்க்கு மேல் ஆகாது. 50 ஆயிரம் ரூபாய் பெரிதா ? " என்று கேட்டார்கள். பல அங்கத்தினர்கள் நாங்கள் எப்படி எப்படி பணம் சம்பாதிக்கிறோம் என்றெல்லாம் ஆராய்ந்தார்கள். ஒரு அங்கத்தினர் " நீங்கள் பிருந்தா வனத்தில் போய் உட்கார்ந்துகொண்டு சம்பாதிக்கிறீர்கள் " என்று கூறினார்கள். " பிருந்தாவனத்தில் போய்ச் சம்பாதிக்கிற இவர்கள் உதகைக்கு வரக்கூடாதா ? " என்று கேட்டார்கள். கனம் அங்கத்தினர் அவர்கள் மகிழ்ச்சி அடைவார்கள் என்று கருதுகிறேன் ; நாங்கள் பிருந்தாவனத்தில் போய் வேறு பல காரியங்களில் ஈடுபடுகின்றவர்களைப் போல் அல்லாது, எழுதி விட்டு வருகிறோம் என்பதை மகிழ்ச்சியோடு தெரிவித்துக்கொள்கிறேன். உதகைக்கு செல்ல 50 ஆயிரம் ரூபாய் செல வாகும் என்று சொல்லப்பட்டது. 50 ஆயிரம் ரூபாய் என்பது முடிந்த முடிவு அல்ல. உதகையில் சட்டசபைக் கூட்டத்தை நடத்துவது என்ற எண்ணம் தோன்றிய நேரத்திலேயே சில லட்ச ரூபாய் போட்டு ஆரன்மூர் அரண்மனையை வாங்கினார்கள். வாங்கப்பட்ட அரண்மனையில் கூட்டம், நடத்துவதற்கேற்ற நல்ல சூழ்நிலையை உண்டாக்குவதற்காகச் சில லட்சம் ரூபாய்களைச் செலவழிக்க இருக்கிறீர்கள். அங்கத்தினர்கள் போக்கு வரத்து ஆகியவைகளுக்கு மட்டும் 50 ஆயிரம் ரூபாய் ஆகுமென்று சொல்லுகிறார்கள். தவிர, படிப்படியாக அந்தச் செலவு எப்படி எப்படி வளரும் என்பது நமக்குத் தெரியும். நாம் போடுகின்ற திட்டங்களை முதலில் போடும் போது இவ்வளவு செலவாகும் என்று நிர்ணயிக்கிறோம், கடைசியில் அந்தத் திட்டம் நிறைவேற்றப்படுகிற நேரத்தில் எவ்வளவு செலவாகியது என்பதைப் பார்த்தால் நாம் போட்டதைப் போல் பல மடங்கு செலவு ஆகி இருப்பதைக் காண முடியும். உதகமண்டலம் போகின்ற செலவு 50 ஆயிரம் என்று சொல்லப்பட்டாலும், அது பல லட்சம் ரூபாய் வரை செல்லும் என்பதில் சந்தேகம் இல்லை. இதில் பணம் மட்டும் செலவாகிறது என்ற பிரச்சனை மட்டும் அல்ல என்று சொன்னேன். மக்கள் உள்ளத்திலே உதகமண்டலம் செல்வதை ப்பற்றி ஏற்படுத்தப்பட்டிருக்கும் அருவருப்பு உணர்ச்சியை சுட்டிக்காட்ட விரும்புகிறேன். அந்த அருவருப்பு உணர்ச்சியை மக்கள் மனதில் யார் எப்பொழுது ஏற்படுத்தினார்கள் என்பதை எல்லாம் நான் கிளற விரும்ப வில்லை. அந்தப் பழைய அரசியல் விஷயங்களை எல்லாம் நம்முடைய நிதி அமைச்சர் அவர்களுடைய பிரத்தியேக இலாகாவுக்கே விட்டு விடுகிறேன் அந்தக் காரணத்தைக் கொண்டுதான் உதகைக்கு போகவேண்டாமென்று கூறினேன். ஆட்சியாளர்களாகிய நீங்கள் கோடையிலே உதகைக்கு செல்லுகிறீர்கள் என்றால், சாதாரண மக்கள் " இவர்கள்வெள்ளைக்காரர்களைப் பின்பற்றி, வெள்ளை ஏகாதிபத்தியத்தைப் பின்பற்றி மலைக்குச் செல்லுகிறார்களே " என்று வாட்டம் அடைந்திருக்கிறார்கள் ; வருத்தம் அடைந்திருக்கிறார்கள். பொதுமக்களை நான் நித்தம் நித்தம் சந்திக்கிற காரணத்தினால் நான் இதை நன்கு உணர்ந்திருக்கிறேன். இதுபற்றிப் பணப் பிரச்சனை வந்தபோதுகூட, நான் இதிலே மக்களுடைய உள்ளத் திலே ஏற்பட்டிருக்கிற மன நெகிழ்ச்சிக்கு (sentiments) நீங்கள் மதிப்புக் கொடுங்கள் என்றுதான் கூறினேன். எண்ணிக்கை பலம் இருக்கிறது என்ற ஒரே காரணத்தினால் நீங்கள் உதகைக்குச் சென்று கூட்டம் நடத்துவதைப்பற்றி எங்களுக்கு ஒன்றும் கவலை இல்லை. நீங்கள் " டென்சிம் " போல் எந்த மலைமீது வேண்டுமானாலும் ஏறுங்கள்

திங்கள்

[Sri C. N. Annadurai] [9th February 1959

எங்களை மட்டும் அழைக்காதீர்கள். நாம் சட்டசபைக் கூட்டத்தை அங்கு நடத்துவதன் காரணமாக அங்கு மக்கள் அதிகமாகக் கூடுவர். அதன் காரணமாக பல லட்சக் கணக்கான வருவாய் வரும் என்று சொன்னார்கள். இந்த அளவுக்கு அவர் தன்னுடைய மனத்தை வளர்த்திருப்பதைக் காண வருத்தப்படுகிறேன். சட்ட சபையை உதகமண்டலத்தில் 10 நாட்கள் நடத்துவதனால் நாட்டிலுள்ள பல்வேறு மக்களும் சட்டசபை நடவடிக்கைகளைக் காண அங்கு ஏராளமாகக் கூடுவார்கள்; அதிலும் பல லட்சம் ரூபாய் வருவாய் கிடைக்கும் என்று கனம் அங்கத்தினர் அவர்கள் சொல்லுவார்களானால்—நான் சொல்வேன்—10 நாட்களுக்கு சட்ட சபையை அங்கு நடத்துவதால், அல்லல் படுகின்ற ஆசிரியர்கள், தொல்லைக்கு ஆளான என்.ஜி.ஓக்கள், ஒராசிரியர் பள்ளிகளிலே இடம் கிடைக்கப் பெறாதவர் ஆகியோர்தான் அங்கு வருவாரே தவிர, பல லட்சம் ரூபாய் வருவாய் வரக்கூடிய அளவுக்கு வளமுள்ள மக்கள் யார் வருவார்கள் என்பது தெரியவில்லை. ஆண்டு தோறும் நடைபெறக்கூடிய காங்கிரஸ் பொருட்காட்சியை உதகமண்டலத்தில் நடத்தினால் பல லட்சம் மக்கள் கூடுவார்கள்; சில பல கோடி ரூபாய்கூட வசூல் ஆகக் கூடும். ஆகவே நீங்கள் உதகமண்டலம் செல்வதானது "நாங்கள் வெள்ளைக்காரர்களின் பிரதிநிதிகளாக இருக்கிறோம்; அவர்களுடைய வாரிசாகிவிட்டோம்" என்று உலகத்திற்கு அறிவிப்பதாகத்தான் இருக்குமே தவிர வேறு ஒரு பலனும் கிட்டாது. ஆகவேதான் நாங்கள் உதகமண்டலத்திற்குப்போக வேண்டாம் என்று சொல்லுகிறோமே தவிர வேறொன்றுமில்லை. எங்களைப் பார்த்து "நீங்கள் என் உதகமண்டலத்திற்கு வர மறுக்கிறீர்கள்" என்று கேட்பதிலே பொருள் இல்லை. நாங்கள் உல்லாசத்திற்காகப் பிருந்தாவனத்திற்குப் போகும்போது, உதக மண்டலத்திற்கு வருவதற்கு எங்களுக்குக் கசப்பாகவா இருக்கும்? மக்களுடைய உள்ளத்திலே தோன்றக்கூடிய அருவருப்பு உணர்ச்சிக்கு நீங்கள் ஆளாகக் கூடாது என்ற காரணத்தினால்தான் அங்கு செல்ல வேண்டாம் என்று சொல்லுகிறோம். நீங்கள் உதகமண்டலத்திற்குப் போனால் பொதுமக்களிடம் "பார் பார், மலைக்குப் போய்விட்டார்கள்" என்று தாங்கள் பேசக்கூடும். அப்படி எல்லாம் பேச வேண்டிய அளவுக்கு இடம் ஏற்படாமல் இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் நான் இதைப்பற்றி அலுவல் கமிட்டியிலேயே விளக்கமாக எடுத்துச் சொன்னேன். நீங்கள் சொல்லுவதைப்போல் உதகமண்டலம் மட்டுந்தானா பின் தங்கி இருக்கிறது? தமிழ் நாட்டின் பல பகுதிகள் அந்த நிலையில் இருக்கின்றன. அங்கெல்லாம் சட்டசபைக் கூட்டத்தை நடத்தவேண்டுமென்று கூறுகிறீர்கள்? தமிழ் நாட்டுச் சட்டசபை நடவடிக்கைகளை தமிழ் நாட்டின் பல பகுதிகளிலும் வசிக்கும் மக்கள் அறிந்துகொள்ள வேண்டுமென்பதற்காக சட்டசபைக் கூட்டம் வேறு பகுதியில் கூட வேண்டுமென்று யாருக்காவது தோன்றுமானால், உதகமண்டலம் மட்டும் என்ன? மதுரையிலே திருமலை நாயக்கன் கட்டியுள்ள "திருமலை நாயக்கன் மகாலிலே" ஒரு திங்கள் கூடுவோம்; தஞ்சை அரண்மனையிலே ஒரு திங்கள் கூடலாம். குற்றால நீர்வீழ்ச்சி இருக்கிறது; அதற்குப் பக்கத்தில் ஒரு திங்கள் கூடலாம். இப்படி ஒவ்வொரு மாவட்டத்திலும் சட்ட மன்றத்தைக் கூட்டினால் ஆங்காங்கு உள்ள மக்கள் நாம் எவ்வளவு திறமையாக, தெளிவாக செயலாற்றி வருகிறோம்
10-50 a.m. என்பதைத் தெரிந்து கொள்ள வாய்ப்பு ஏற்படும். அதுமட்டுமல்ல. குளிர் காலத்தில் உதகைக்கு செல்வதனால் ஏற்படக்கூடிய விளைவுகளைப் பற்றி உங்களுக்குத் தெரிந்திருக்காது. கோவை மாவட்டத்தைச் சேர்ந்த அமைச்சர் அவர்களுக்குத் தெரிந்திருக்கும். இருந்தாலும் அதைச் சொல்லாமல் உங்களை எல்லாம் வாருங்கள் வாருங்கள் என்று அழைக்கிறார். கோடைகாலம் என்கிற காலத்திலேயே மத்தியானம் 2 மணிக்கு மேல் யார் வருகிறார்கள், யார் போகிறார்கள் என்பதே தெரியாது. ஆணுக்கும், பெண்ணுக்கும் வித்தியாசம் தெரியாது பனிமூடி இருக்கும். அப்படிப்பட்ட இடத்திற்கு என் பத்து நாளைக்காகச் செல்ல வேண்டுமென்றுதான் தெரியவில்லை. இதற்காகப் பொதுமக்களுடைய பணத்தைச் செலவழிப்பானேன் என்று கேட்கிறேன். உதக மண்டலத்தில் கூட்டம் நடத்தினால் நன்றாக இருக்கும் என்கிற ஆசையை கோவை மாவட்டத்தைச் சேர்ந்த நிதி அமைச்சர் அவர்கள் உங்களுக்கு உண்டாக்கினால் அவர்

குற்றம் தான் செய்கிறார் என்று சொல்வேன். உதகைக்குச் சென்று உதடு வெடித்து இங்கே வந்து ப்ளாஸ்திரி போட்டுக்கொண்டவர்களைக் கேட்டால் உண்மை தெரியும். போய் வந்த பிறகு நன்றாக இருக்கும் என்று சொன்னவர்களைச் சபிப்பீர்கள். போகவேண்டாம் என்று தடுத்துச் சொன்ன எங்களை வாழ்த்துவீர்கள். நிதி அமைச்சரைப் பின்னால் சபிக்க வேண்டாம் என்பதற்காகவேதான் நான் உண்மை நிலையை எடுத்துச் சொல்லி உதகைக்கு போகும் யோசனையைக் கைவிடுங்கள் என்று கேட்டுக்கொள்கிறேன்.

SRIMATHI T. N. ANANDANAYAKI : On a point of order, Sir. The hon. Member when he wants to refer to another Member can say, ' Such and such a Member representing such and such a constituency ' and should not refer to the name or the profession of another Member.

MR. SPEAKER : அதில் தவறு இல்லை. எந்த இடத்திலிருந்து வருகிறார் என்று சொன்னால் நன்றாக இருக்கும். பெயர் சொல்வதில் தவறு இல்லை.

SRI K. VINAYAKAM : On a point of order, Sir. When one Member wants to refer to another Member, he should refer to the other Member by his or her name or by the constituency by which he or she was returned, and not refer to the profession which the Member is practising. The Member referred to is an Advocate, and so Sri Annadurai is not perfectly right in referring to that Member as a practising lawyer. I want a ruling from the Chair.

SRI M. P. SUBRAMANIAM : We all know that. The hon. Member need not reveal that.

MR. SPEAKER : I think the gentleman to give the answer is the Chair but Sri Vinayakam himself has given the answer. I do not agree with him however.

SRI S. NAGARAJA MONIGAR : On a point of information, Sir.

MR. SPEAKER : The hon. Member can rise only on a point of order and not on a point of information. He can rise on a point of information at the end.

SRI C. N. ANNADURAI : கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, பேச்சை நிறுத்தி வறண்ட தொண்டைக்கு நீர் ஊற்றிக்கொள்ள இடமில்லாதவாறு அவர்களே இடையில் எனக்குச் சிறிது நேரம் அளித்ததற்காக நான் நன்றி தெரிவித்துக் கொள்கிறேன். உறுப்பினர்களுடைய தொகுதியின் பெயரைக் குறிப்பிட்டு அழைக்க முடியாமல் இருக்கக் காரணம்—அந்த அந்தத் தொகுதியைச் சேர்ந்தவர்களே தங்கள் தங்கள் தொகுதியைக் குறிப்பிட்டு பேசுவது இல்லை. ஆதலால் அவர்கள் தொகுதி எது என்கிறதே தெரிவதில்லை.

அரசியல் சட்டத்தின் கீழ் கவர்னருடைய அழைப்புக்கிணங்க சபைக்கு வராத நாங்கள் விவாதம் நடக்கிறபோது மட்டும் எதற்காக வந்தார்கள் என்கிற முறையில் திருச்சிராப்பள்ளி லால்குடி தொகுதியைச் சார்ந்த உறுப்பினர் சொன்னார். இதற்குக் காரணம் .நாங்களும் சட்டசபை விதி முறைக்கு உட்பட்டே காரியங்களைச் செய்கிறோம் என்பதுதான். விதி முறைக்குட்பட்டு உள்ளே காரியங்கள் செய்வதற்காக சட்டமன்றத்திற்கு வருகிறோமே தவிர சட்ட உறுப்பினர்கள் நாங்கள் சட்ட உடைப்புச் செய்ய வேண்டுமென்று விரும்பினால் அது வெளியில் இருந்து நாங்கள் செய்ய வேண்டிய காரியம். அதை நாங்கள் செய்ய, அவர்கள் கண்குளிரப்

பார்க்க வேண்டுமானுல் அவர்களைச் சில ஆண்டுகள் பொருத்திருக்கும்படி கேட்டுக் கொள்கிறேன். காங்கிரஸ்காரர்கள் அன்றைக்கு என்ன காரியங்களைச் செய்தார்களோ அதை நாங்கள் வெளியில் இருந்து செய்த போது "இவர்கள் வெளியில் இருந்துதான் பேசுவார்கள். உள்ளே வந்து செய்யட்டுமே" என்றீர்கள். இன்றைக்கு உள்ளே வந்து விதி முறைக்கு உட்பட்டு நாங்கள் ஆற்றுகிற செயல் உங்களுக்குப் பிடிக்கவில்லையானுல்—அல்லது சங்கடத்தை உண்டாக்கினுல் சொல்லிவிடுங்கள். வாருங்கள் வாருங்கள் என்று ஐந்தாண்டு காலமாக அழைத்தீர்கள். உள்ளே வந்து என்ன பிரமாதமாகச் செய்துவிட்டார்கள் என்றீர்கள். இரண்டு ஆண்டுக்குள்ளே நாங்கள் வெளியே போனுல் போதும் என்ருகி விட்டதா?

**Sri S. NAGARAJA MONIGAR :** கனம் அங்கத்தினர் பேசுகின்ற அத்தகைய கருத்துக்கள் கவர்னர் அவர்களுடைய உரைக்கு அவ்வளவு பொருத்தம் உடையதாக நான் கருதவில்லை.

**Sri C. N. ANNADURAI :** கவர்னர் அவர்களுடைய உரை பலவகையில் முற்றும் ஏமாற்றம் அளிக்கக் கூடியது என்பதைச் சுட்டிக் காட்டவே வருகிறேன். கவர்னர் தம்முடைய உரையில்—"இவ்வாண்டில் நல்ல அறுவடைக்கான அறிகுறிகள் இருந்தபோதிலும் உணவுப் பொருள்களின் விலை இன்னும் ஏற்றமாகவே இருந்து வருகிறது" என்பதைக் குறிப்பிட்டிருக்கின்ருர்கள். சென்ற ஆண்டு அவர் ஆற்றிய உரையில் அறுவடை நன்ருக இருக்கும் என்ற காரணத்திஞல் விலைகள் இறங்கும் முகமாக இருக்கிறதென்று குறிப்பிட்டுள்ளார்கள். சென்ற ஆண்டில் விலை இறங்கும் முகமாக இருக்கும் என்று குறிப்பிட்டுவிட்டு, இவ்வாண்டு விலை ஏறுமுகமாக இருப்பதாகக் கூறியிருக்கின்ற கவர்னர் அவர்கள் விலை ஏற்றத்திற்குக் காரணம் என்ன என்பதைத் தம் உரையில் குறிப்பிடவில்லை. ஆனுல் அதற்குப் பரிகாரம் சொல்லியிருக்கிருர்கள். ஒன்று நியாயவிலைக் கடைகளைத் திறக்கப்போவதாகச் சொல்லியிருக்கிருர்கள். நல்ல யோசனை—திறவுங்கள். ஆனுல் நான் கனம் அமைச்சர் அவர்களுக்கு ஒரு வேண்டுகோள் விடுக்க விரும்புகிறேன், "அதற்கு நியாயவிலைக் கடைகள் என்று மட்டும் பெயர் போடாதீர்கள்" என்று. இதற்கு Fair Price Shop (நியாய விலைக் கடைகள்) என்று பெயர் போடுவதன் மூலமாக—சட்டம் ஒழுங்கான முறையில் அமுல் செய்யப்படுகிறது என்று சொல்லிக் கொள்கிற உங்கள் நாட்டில் அநியாய விலைக் கடைகள் இருக்கின்றன என்கிற பொருள்படக் கூடாது. ஆகவே மக்களுக்கு நிரந்தரமான குறைந்த விலையில் உணவு தானியத்தை விநியோகம் செய்யக்கூடிய கடைகளைத் திறவுங்கள். இது கவர்னர் அவர்கள் குறிப்பிட்டிருக்கிற ஒரு யோசனை. (Deputy Speaker in the chair) உற்பத்தியைப் பெருக்குவது மற்ருெரு பரிகாரம் என்று சொல்லியிருக்கிருர். இந்த உற்பத்தியைப் பெருக்குவதற்காக எடுத்துக் கொள்கிற நடவடிக்கைகள் எல்லாம் வேறு ஒருபுறம் இருக்கட்டும். நான் தெரிந்து கொள்ள விரும்புவது—உற்பத்தி பெருகி கொண்டிருக்கிற நேரத்தில் விலைவாசிகள் கீழே விழாமல் ஒரே ஏற்றத்தில் இருக்கக் காரணம் என்ன? எந்த இடத்தில் சர்க்காருடைய பொருளாதாரத் தந்திரம் கீழே சரிந்தது, நிர்வாக இயந்திரம் பழுதுபட்டது என்பதை நாட்டு மக்களுக்கு அறிவிக்க வேண்டும். என் சிற்றறிவுக்கு எட்டிய வரையில் இந்த மாநிலம் அடைய முடியாத அளவுக்கு, பெருமைபடத்தக்க அளவுக்கு எல்லாவகையிலும் முன்னேற்றம் அடைந்து உணவு பெருகி இருக்கிற நேரத்தில் விலை கீழே விழாமல் இருப்பதற்குக் காரணம்—இந்த மாநில துறைத்தனத்தாரே ஒப்புக்கொண்டுள்ளார்கள்—நாட்டில் பதுக்கல் வியாபாரம் நடை பெறுகிறது. கள்ள மார்க்கெட் பெருகிவிட்டது. அதைக் கண்டிக்கும் துணிவை இந்தச் சர்க்கார் இன்னமும் பெருமல் இருப்பது தான் விலையேற்றத்திற்குக் காரணம் என்பேன். அவர்கள் எந்தப் பக்கத்தில் இருந்தால் என்ன? அந்தப் பக்கத்திலேயே உட்கார்ந்திருந்தாலும் தயவு தாட்சண்யம் காட்டாதீர்கள். அவர்கள் சமூகத்திற்கு விரோதிகள் என்ற முறையில் ஒரு 10 பதுக்கல் வியாபாரிகளை 4 கள்ள மார்க்கெட்காரர்களை, 10 கொள்ளை லாபக்காரர்களை இந்தச் சர்க்கார் நெஞ்சத் துணிவோடு கூண்டில் ஏற்றி நிறுத்திஞல் மார்பு நிமிர்ந்து நான் முன்னுக்கு நடப்பேன். நல்ல துரைத்தனம் நாட்டில் இருக்கிறது என்று களிப்படைவேன்.

9th February 1959] [Sri C. N. Annadurai]

இனி பதுக்கல் வியாபாரம் இந்த நாட்டில் செல்லாது என்கிற உண்மை எல்லோருக்கும் புலப்படும். நடந்தால் நாட்டில் விட்டு வைக்க மாட்டார்கள் உள்ளே பிடித்து அடைத்து விடுவார்கள் என்கிற உணர்ச்சி உள்ளத்தில் உண்டாகும். அதை இந்தச் சர்க்கார் செய்தார்களா ? என் செய்யவில்லை ? இங்கே சென்ற ஆண்டும் சொன்னார்கள். முன் ஆண்டும் சொன்னார்கள். கள்ளமார்க்கெட் நடக்கிறது. உணவு தானியம் பதுக்கப்படும், என்பதை அவர்களே ஒப்புக்கொள்கிறார்கள். அவ்வளவு தெரிந்திருந்தும் பதுக்கல்கா ர்களின் மீது. கொள்ளை லாபம் அடிக்கிறவர்களின் மீது நடவடிக்கை எடுத்துக் கொள்ளாமல் இருப்பதற்குக் கா ணம் என்ன ? முயன்றும் முடியாமல் போய்விட்டதா ? முயற்சி எடுத்துக் கொள்ளப்படவில்லையா என்பதை நீங்கள் சட்ட மன்றத்தில் எடுத்து விளக்கவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

மற்றும் ஒன்று. இந்த நிலைமைக்கு விளக்கம் கொடுக்காமல் பரிகாரத்தைப் பற்றி மட்டும் பேசுகின்ற கவர்னர் அவர்கள் நிலச் சீர்திருத்தத்திற்கு—நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டும் வகையிலே—ஒரு சட்டம் கொண்டு வர இருக்கிறார்கள். அதைக் கூட்டு பண்ணை முறையில் அமைக்க இருக்கிறார்கள் என்பதைக் குறிப்பிட்டுச் சொன்னார்கள். இந்த நேரத்தில்—ஆட்சியாளர்களுக்குப் பிடிக்காததாக இருந்தபோதிலும்—ஒன்று சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஏராளமான பணத்தைத் தாராளமாகச் செலவு செய்கின்றீர்கள். அதில் குற்றம் குறை எடுத்துச் சொல்வார் யாரும் இல்லை அதிகப் பணம் செலவழிக்கிறோம் என்று மக்களிடத்தில் சொல்லவேண்டுமென்ற எண்ணத்தில் செலவழிக்கிறீர்கள். ஆனால் ஒன்று சொல்வேன். நான் சொல்வதை மறுக்கவேண்டும் என்பதற்காக மறுத்தால் நான் கவலைப்படப் போவதில்லை. நீங்கள் எந்தப் பலன் மக்களுக்குக் கிடைக்க வேண்டும் என்று செய்கிறீர்களோ அந்தப் பலன் மக்கள் உள்ளத்தில் கிடைக்கவில்லை. மக்கள் மனதில் அத்தகைய எழுச்சி ஏற்படவில்லை. சமுதாய நலத் திட்டத்தைப் போடுகிறீர்கள். பிர்க்கா அபிவிருத்தி என்று எத்தனையோ கட்டிடங்களைக் கட்டுகிறீர்கள். ஆனால் அதிலிருந்து கண்டிராக்டர் எத்தனை லாபம் அடைந்திருப்பான் என்று மக்கள் பார்க்கிறார்கள். பொறுக்கு விதைப் பண்ணைகளை ஏற்படுத்துகிறீர்கள். அங்கிருந்து விதை வாங்கினால் எத்தனை ஆயிரம் ஏக்கர்களுக்குப் பயிர் செய்யலாம் என்று அவர்கள் பார்க்கவில்லை. இந்த நிலம் யாரிடத்திலிருந்து குத்தகைக்கு வாங்கப்பட்டது—இதனால் யார் எத்தனை லாபம் அடைந்தார்கள் என்று தான் பார்க்கிறார்கள். ரசாயன உரம் டன்டன்னாகத் தருகிறீர்கள். உற்பத்திக்கு இது எவ்வாறு பயன்படுகிறது என்று அவன் கவனிப்பதில்லை. இது எந்த கள்ளமார்க்கெட்டிலே யாரால் விற்கப்பட்டு, எவ்வளவு கொள்ளை லாபம் அடிக்கப்படுகிறது என்று பார்க்கிறான். மக்கள் உள்ளத்தில் அத்தகைய சலிப்பு உணர்ச்சி அதிகப்பட்டிருப்பதற்குக் காரணம் நாங்கள் என்று கருதாதீர்கள். இதுவரையில் சமுதாய நலத்திட்டத்தில் சேர்ந்து ஒத்துழைக்காதீர்கள் என்று நாங்கள் மக்களிடத்தில் சொன்னது இல்லை. நாட்டு மக்களுக்கேற்ற திட்டம் இல்லை என்று சொன்னதில்லை. நாட்டு மக்களுடைய உள்ளத்தில் என்ன உணர்ச்சி ஏற்படுகிறது, அவர்கள் எந்த முறையில் நடக்கிறார்கள்—என்பதை நாங்கள் மட்டும் அல்ல—நீங்களேகூட நெருங்கிப் பழகிப் பார்த்தால் தான் நான் சொல்வதன் உண்மை தெரியும். இந்தக் குறையைப் போக்குவதற்கு நீங்கள் தக்க நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமே தவிர இந்தப் பழியை யார் பேரில் போடலாம்—போட்டு சமாதானம் கூறலாம் என்று சிந்திப்பதில் பயன் இல்லை. கோயமுத்தூர் மாவட்டத்தில் இருக்கிற பட்டியில் கட்டப்பட்ட வீடுகள் எப்படிச் சரிந்து விழுந்திருக்கின்றன என்பதைச் சொன்னேன். இப்போதும் நான் அங்கே செல்வதற்கு வாய்ப்புக் கிடைத்தது. இப்போதும் அதே நிலையில் தான் கீழே தள்ளப்பட்டு கிடக்கிறது என்று சொல்லுகிறார்கள். இப்படி சமுதாய நலத் திட்டத்தினால் போடப்படுகிற திட்டங்கள் விரயமாவதைக் கண்டே மக்களுக்கு அத்தகைய உணர்ச்சி பெருகி வருகிறது. சமுதாய நலத்திட்டங்களை எல்லாம் பரிசீலனை செய்வதற்கு ஓர் ஆய்வுக் குழு இன்றைக்கு இல்லை. ஒவ்வொரு ஊரிலும் கம்யூனிடி ஹால் கட்டுகிறோம். பொதுக் காரியங்களைப் பற்றிக் கூடிப் பேசி விவாதிப்பதற்கு மணி மண்டபம் கட்டுகிறீர்கள். ஆனால் அந்த மணி மண்டபம் இன்றையதினம் எந்த வகையில் பயன்பட்டுக் கொண்டிருக்கிறது என்பதைப் பற்றி ஆய்வ

[Sri C. N. Annadurai] [9th February 1959

தற்குக் குழு இல்லை. அதைப்பற்றி இந்த மன்றத்தில் தெளிவுபடப் பேசுவதற்குக் கொஞ்சம் அனுமதி அளிக்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். நிதி அமைச்சர் அவர்களும் நான் சொல்வதைச் சகித்துக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன்.

11-00 a.m. எங்கள் செங்கல்பட்டு மாவட்டத்திலே, மாமல்லபுரத்திலே வெளியாரெல்லாம் வந்து பார்க்கும் அரிய கட்டிட வேலைப்பாடுகள் இருப்பது எல்லோருக்கும் தெரியும். அதற்கும் பக்கத்திலே, இருக்கிற குடிசைகளை, சென்னையிலிருந்து மாணவர்கள் வந்து, சமுதாய நலத் திட்டத்தின் கீழ், குடிசைகளை துப்புரவு படுத்தி, சுவர்களை வெள்ளையடித்து, வீட்டிலே முகப்பிலே ஒரு தாமரைப்பூ, இன்னொரு புறத்திலே மல்லிகைப்பூ, மற்றொரு புறம் ரோஜாப்பூ போன்ற வேலைப்பாடுகளுடன் அமைத்திருக்கிறார்கள். அங்கே "New look given by Madras Medicos" என்று எழுதியிருக்கிறார்கள். நான் அந்த இடத்திற்கு ஏதோ வேலையாகப் போக நேர்ந்தது அங்குள்ள காட்சிகளை நான் கண்டேன். மந்திரிகள் பார்வை யிடுகிறார்கள் என்பதற்கும, நான் கண்டேன் என்பதற்கும், பொருளிலே வித்தியாசம் இருக்கிறது. பார்வையிடுபவர்கள் அவர்களுக்குக் காட்டுவதைப் பார்க்கிறார்கள். அதற்கும், நான் கண்ணைக்குத்தும் காட்சிகளைப் பார்ப்பதற்கும் அரசியலில் வித்தியாசம் இருக்கிறது. பார்வையிடும் நேரத்தில், எத்துணை சரிப்படுத்தப்பட்டிருக்கின்றன என்று பாராட்டவும் செய்கிறார்கள், அப்படித் தன்னைத் தானே பாராட்டிக் கொள்பவர்கள், அப்பொழுது, நம்மைப் பாராட்ட அண்ணாதுரைக்கு மனம் வரவில்லையே என்று கோபமும் எழக் கூடும்.

நான் அங்கு குடிசையிலே இருந்தவனை அழைத்து "இப்படிச் செய்திருக்கிறார்களே, சர்க்கார் செய்தார்களா" என்று கேட்டேன். கிராமத்திலே இருந்த குடியானவன், "சர்க்கார் பள்ளிக்கூடத்து மாணவர்களை அனுப்பினார்கள், இதைச் செய்வதற்கு" என்று சொன்னான். நான் சொன்னேன். "இதற்குச் செலவழிக்கப்பட்ட பணத்தை எட்டு அணா, ஒரு ரூபாய் என்று கொடுத்திருந்தால் நீயே சுண்ணாம்பு அடிக்க மாட்டாடாயா". அதற்கு அந்த குடியானவன் தந்த பதில் எனக்கு வெட்கமாக இருந்தது. அதைக் கேட்பதற்கு அமைச்சர்களுக்குக் கோபமாக இருக்கலாம். இருந்தாலும், பொறுமையாகக் கேட்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளுகிறேன். அவன் சொன்னான். "இங்கே யார் யார் வெள்ளையடித்தார்களோ அவர்கள் வீடுகளுக்கு வெள்ளை யடிப்பது என் வேலையல்லவா" "அது என் தொழில். எட்டணா, ஒரு ரூபாய்க்கு நிம்மதியாக நான் செய்திருப்பேன். வெள்ளையடித்த மாணவர்கள் கூரையிலிருந்து கீழே விழாமல், பார்த்துக் கொள்ளவும், சுண்ணாம்பில் கையை விட்டு கை வெந்து போகாமல் பார்த்துக் கொள்ளவும், அதிகமாக ஒரு இடத்தில் சுண்ணாம்பு அடித்ததை சரிசெய்யவும் எனக்குத் தெரியும்" என்று சொன்னான். நம் அமைச்சர் ஸ்ரீ ராமையா மாறுவேடம் பூண்டு செல்வதில் வல்லவர் என்று பத்திரிகையில் வருவதைப் பார்த்திருக்கிறேன். அவரை வேண்டுமானாலும் அனுப்பிப் பாருங்கள், (சிரிப்பு), மக்கள் எப்படியெல்லாம், என்னவெல்லாம் பேசுகிறார்கள் என்று, தெரிந்துகொள்ள. (குறுக்கீடு) தினத்தந்தியில் பார்த்தேன். (கனம் ஸ்ரீ ஸி. சுப்பிரமணியம் தினத்தந்திக்கு அவ்வளவு மதிப்பு).

நம் ஆட்சியாளர்கள் கோடிக்கணக்கான பணத்தைச் செலவழிக்கிறார்கள். இவ்வளவு பணம் எந்த சர்க்காரும் சேமித்து செலவழிக்க முடியாது. ஆனால் மக்கள் உள்ளத்திலே ஆர்வம் எழாவிட்டால், அதற்குக் காரணம் என்ன ? எதிர்கட்சிக்காரர்கள் கெடுக்கிறார்கள் என்ற சுலபமான வாதத்தினால், என் வாயை அடைக்கப் பார்க்காதீர்கள். எதிர்க் கட்சியினர் சமுதாய நல திட்டத்தை, அதில் மக்களுக்கு ஆர்வம் எழுவதைக் கெடுக்கவில்லை. நாங்கள் முனைந்து வேலை செய்யாமல் இருக்கலாம். ஆனால் கெடுக்கும் முறையில் ஏதும் செய்யவில்லை. மக்களுக்கு சலிப்பு ஏற்பட்டிருக்கிறது. ஆர்வம் எழவில்லை. அப்படியென்றால், செலவழிக்கும் பணத்தின் அளவிற்கு, நல்ல பயன் கிராமங்களிலோ அல்லது நகரப் புறங்களிலோ நிச்சயம் கிடைக்காது. ஆகவே மக்கள் ஏன் ஆர்வம் கொள்ளவில்லை என்று கண்டு பிடிக்க வேண்டும்.

9th February 1959] [Sri C. N. Annadurai]

உரையில் கவர்னர் அவர்கள் சொல்கிருர்கள். "ஒருமித்த உடன்பாடு கண்டார்கள்" என்று. உடன்பாடு கண்டார்கள் என்று சொல்லி யிருப்பது, வரப் போவதை, நடைபெற வேண்டியதை நடைபெற்றதாகக் கூறுவதாகும். அதைப்பற்றி கூறும் போது, இப்பொழுது அரசாங்கத்தில் எடுக்கும் முடிவுகள் என்ன? நாட்டில் கோடிக்கணக்கான பணத்தைச் செலவழித்து, ஒரு நல்ல சமுதாயத்தை உண்டாக்குவதில் ஒருமித்த உடன்பாடு காணவேண்டும். ஆனுல் நாம் காண்பதென்ன? அண்மையில், வடாற்காடு மாவட்டம், திருவண்ணுமலையிலே என்ன நடந்தது? அதைச் சுற்றிப் பார்க்கப் போனேன். அப்பொழுது கனம் அமைச்சர் அவர்கள் அங்கே ஒரு கால் நடைக் கண் காட்சியை துவக்கி வைப்பார் என்ற விளம்பரம் இருந்தது. திருவண்ணுமலையைச் சேர்ந்த கனம் மெம்பர் ஷண்முகத்தைப் பார்த்து "நீங்கள் செல்கிறீர்களா" என்று நான் கேட்டதற்கு, அவர்கள் சொன்ன பதில் என்னே ஏமாறச் செய்தது. "எனக்கு அழைப்பு இல்லே" என்று அவர்கள் சொன்னுர்கள். திருவண்ணுமலையிலே நடக்கும் கால்நடைக் கண் காட்சிக்கு அந்தத் தொகுதி எம்.எல்.ஏ.வின் ஒத்துழைப்பு பெறவேண்டுமென்ற பண்பு கூட உங்கள் உள்ளத்தில் இல்லே. கோடிக்கணக்கான மக்கள் உள்ளத்திலே என்று எழுச்சி ஏற்படும்? சொல்லலாம், "நீங்கள் 15 பேர்கள் தான், நாங்கள் 150 பேர்கள்" என்று. என்றுலும், அளவு அறிந்து இடம் அளிக்கும், Proportional representation முறையைக் காங்கிரஸ் மேற்கொண்டால், காங்கிரசுக்கு 50 லட்சம் வாக்கு என்றுல், திராவிட முன்னேற்றக் கழகத்துக்கு மூன்றில் ஒரு பங்கு அல்லது 17 லட்சம் வாக்குகளேப் பெற்றிருக்கிறேம். அளவு அறிந்து இடம் அளிக்கும் முறை இருந்தால், நாங்கள் 50 பேர் இருக்கவேண்டும். ஆனுல் நீங்கள் அமைத்திருக்கும் தேர்தல் இலக்கணம் உங்களுக்கு சாதகமாக இருப்பதால், நீங்கள் 150 பேர்களும், நாங்கள் 15 பேர்களும் இருக்கிறேம். ஆனுல் 17 லட்சம் மக்கள் கிள்ளுக்கீரைகள் இல்லே. எனவே, எங்களுடைய ஒத்துழைப்பைப் பெற வேண்டும் என்றிருந்தால், மக்கள் உள்ளத்திலே ஆர்வம் எழவேண்டுமென்றுல், உங்கள் லட்சியத்தை அவர்கள் முன்னே வைக்க வேண்டும். இவர்கள் என்ன லட்சியம் வைத்திருக்கிருர்கள்?

எகிப்து நாட்டிலே, நாசர் வெள்ளேக்காரனுக்கு சூயஸ் வாய்க்காலில் ஆதிக்கத்தை ஒழிக்க எழுந்தான். அதுதான் அவன் லட்சியம். அவன் அழைக்க மக்கள் அவன் பின்னுல் செல்கிருர்கள். பிரான்சு நாட்டிலே கூட, ஜனநாயகத்தின் சந்து வழியே உள்ளே சென்று டிகால் இந்த நாட்டின் எலும்புருக்கி நோயை இந்த நாட்டிலிருந்து விரட்டுவேன் என்கிருன், பிரான்சு நாட்டு மக்கள் அவன் பின்னுல் வருகிருர்கள். கான நாட்டு பிரதமர் தன் லட்சியம் ஆப்பிரிக்க கருப்பர்களே விடுவிப்பது என்கிருன், மக்கள் அவன் பின் வருகிருர்கள். ஆனுல், நீங்கள் என்ன லட்சியம் வைத்திருக்கிறீர்கள்? பெருங்காயம் வைத்த பாண்டம் போல் இருக்கிறீர்கள். பெருங்காயம் போய் விட்டது, பாண்டம் இருக்கிறது. பெருங்காய வாசனே இருக்கிறது. தக்க சாக்கிரதை இல்லாவிட்டால், பாண்டத்தை ஊரார் அபகரிக்க வரலாம். பாண்டம் பறிபோகும். நாட்டு மக்கள் உங்கள் லட்சியம் என்னவென்று அறியவேண்டும். மக்கள் உள்ளத்தை அறிந்து செய்ய வேண்டும். அப்படிப் பார்க்கும்போது, எதிர்க்கட்சிக்காரர்கள் பாப்பி வரும் கருத்துக்கள் அவ்வளவும் மக்கள் உள்ளத்திலே, அலே மோதுகின்றன. அப்படி அவர்கள் உள்ளப் போக்கைக் கண்டுபிடிக்க வேண்டுமானுல், எதிர்க்கட்சியை மதிக்கும் தன்மை ஆளும் கட்சிக்கு 11-10 a.m. வரவேண்டும். எதிர்க்கட்சிகளே மதிக்கும் தன்மை ஆளும் கட்சிக்கு வருமானுல், அப்போது, எதிர்க்கட்சிகள் நாட்டு மக்கள் உள்ளத்தில் என்னென்ன கருத்துக்களேப் புகுத்தி யிருக்கிருர்கள். அதனுல் நாட்டு மக்களுக்கு என்னென்ன லட்சியங்களில் பற்று ஏற்பட்டிருக்கிறது, அந்த லட்சியங்களில் எந்த லட்சியங்கள் எல்லாம் நம் நடைமுறைக்கு ஏற்றவை என்று ஆளும் கட்சி பார்க்க வேண்டும். உதாரணமாக நான் ஒன்று சொல்வேன். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சென்னே மாநிலம் 152 கோடி ரூபாய் பெற்றிருக்கிறது. இந்த 152 கோடி ரூபாய் நம் மாநிலத்திற்கு மிகக் குறைவு குறைவு என்று நாங்கள் சொன்னுல், அப்போது காங்கிரஸ் கட்சியிலுள்ளவர்கள், அதை நாங்கள் சொல்கிறேம் என்பதால்

[Sri C. N. Annadurai] [9th February 1959

"இல்லை, இல்லை ஜனத்தொகை அடிப்படையில் பார்த்தால், உத்திரப் பிரதேசத்திற்குக் கிடைத்தது அதிகம். விஸ்தீரண அடிப்படையில் பார்த்தால், உத்திரப் பிரதேசத்திற்குக் கிடைத்தது குறைவு. அந்தக் கண்ணோட்டத்துடன் பார்க்கும் போது, நமக்கு அதிகத் தொகை தான் கிடைத்திருக்கிறது என்று சொல்ல வேண்டும்" என்று கூறி எங்கள் கூற்றை மறுத்துப் பேசுகிறார்கள். அவர்கள், அவ்வாறு பேசுவதால், மத்திய சர்க்காருக்குத் தான் வக்காலத்து வாங்குகிறார்கள். மத்திய சர்க்காரிடமிருந்து நாம் இன்னும் பணம் வாங்குவதற்கு உள்ள வழியை அடைக்கிறார்கள். ஆனால் 300 கோடி ரூபாய் வேண்டும் என்று கனம் நிதி அமைச்சர் வாதாடியதில் நமக்கு 152 கோடி ரூபாய் தான் கிடைத்திருக்கிறது. மத்திய சர்க்கார் கொடுத்த அந்தத் தொகையை, ஒரு பொறுப்புள்ள அமைச்சர் என்ற முறையில், அவர் ஏற்றுக் கொண்டது நியாயம். ஆனால் அந்தத்தொகை குறைவு என்பதை நாங்கள் அடிக்கடி சுட்டிக்காட்டினால் தான், அவர், டெல்லிக்குப் போகும்போது "152 கோடி ரூபாய் எங்கள் மாநிலத்தவர்களுக்குத் திருப்தியளிக்கவில்லை, இன்னும் அதிகப் பணம் தர வேண்டும்" என்று மத்திய சர்க்காரிடம் எதிர்த்துப் பேசுவதற்கு வழி இருக்கும். நாங்கள் கூறுவதால், கொடுத்துள்ள தொகையே போதும் என்று ஆளும் கட்சியினர் பேசினால் அதில் பயனில்லை என்று கூறுவேன். இந்த மன்றத்தில் இருக்கும் ஆளும் கட்சி அங்கத்தினர்கள் எங்களுக்குப் பதில் பேச்சு பேசுவதைத் தான் முக்கியமாகக் கருதுகிறார்கள். மத்திய அரசாங்கம் மாநில அரசாங்கத்தை எப்படி நடத்துகிறது என்பதுபற்றிப் பேச வேண்டியது தான் இன்று முக்கியம். ஏனென்றால், அந்தப் பிரச்னை அரசியல் கட்சிகளைவிட மீறி மீறி வளர்ந்து வருகிறது. ஒரு மாநிலத்திற்குத் துணை கவர்னராக இருந்த, காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த திரு. சந்தானம் அவர்கள் இதை அடிக்கடி சுட்டிக் காட்டி வருகிறார். மாநில அரசாங்கங்கள் வர வர நகராட்சி மன்றங்களுக்குச் சமானமாக ஒடுக்கப்பட்டு வருகின்றன. மத்திய அரசாங்கத்திடம் தான் அதிக அளவிற்கு அதிகாரங்கள் குவிந்து வருகின்றன என்பதை திரு. சந்தானம் சுட்டிக் காட்டி வருகிறார். இதே விஷயத்தை மைசூர் ராஜ்யத்தைச் சேர்ந்த திரு. அனுமந்தையாவும் சட்டசபையிலும் வெளியிலும் அடிக்கடி சுட்டிக்காட்டி வருகிறார். மாநில அரசாங்கங்கள் மத்திய அரசாங்கத்தைப் பார்த்து பிச்சை கேட்கும் நிலையில் இருக்கும் வரையில் மாநில அரசாங்கப் பிரதிநிதிகள், டெல்லிக்குச் சென்றால் அங்கே, கடன் கொடுத்தவனிடம் கை கட்டி வாய் புதைத்து நிற்கும் கடன் வாங்கியவனைப் போல் இருக்க வேண்டும் என்பதை திரு. அனுமந்தையா சுட்டிக்காட்டி வருகிறார். "ஏழைசொல் அம்பலம் ஏறாது" என்ற பழமொழியை நினைத்துக் கொண்டு என்னுடைய இந்தச் சொற்கள் அம்பலம் ஏறவில்லை என்று தப்புக் கணக்குப் போடாதீர்கள். என்னுடைய சொற்களால் ஏற்பட்டுள்ள விளைவு, நாடு பிரிவினை என்ற அளவிற்கு வராமல் இருந்திருக்கலாம். நமது மாநிலத்தின் இதே கவர்னர் அவர்கள் சென்றஆண்டு தமது பேருரையில், அவர்கள் அஸ்ஸாம் மாநிலத்தில் முதல் அமைச்சராக இருந்தபோது அந்த மாநில மக்களின் உரிமைக்காக அவர்கள் போராட வேண்டி யிருந்தது என்ற கருத்துப்படப் பேசியிருக்கிறார்கள். அவர் அவ்வாறு பேசியதுடன், எப்படி இருந்தாலும் இந்திய ஒருமைப்பாடு அவசியம் என்றும் குறிப்பிட்டிருக்கிறார். வேண்டுமானால், நீங்கள் இந்திய ஒருமைப்பாட்டைப் பற்றிப் பேசுங்கள். அதைப் பற்றிப் பன்னிப் பன்னிப் பேசுங்கள். இந்திய ஒருமைப்பாட்டைப் பற்றி பேசி என்னைத் திருத்தலாம் என்று நீங்கள் கருதினால் அதைப்பற்றித் திரும்பத் திரும்பப் பேசுங்கள். ஆனால் நமது மாநில அரசாங்கம் மத்திய அரசாங்கத்துடன் வாதாடுவதற்கு இருக்கும் வழியை அடைத்துவிடாதீர்கள் என்று இந்த மன்றத்தில் உங்களிடம் பணிவன்போடு சொல்லிக்கொள்கிறேன்.

கவர்னர் அவர்கள் தமது பேருரையில், இந்த மாநிலத்தில் எல்லா வகையான நீர்ப்பாசனத் திட்டங்களும் முடிந்துவிட்டன என்று கூறியிருக்கிறார்கள். வைகை ஆற்றுத் திட்டம் முடிந்துவிட்டது. கேரள சர்க்காருடன் பேசி, பாம்பிக்குளம் தண்ணீரைத் தமிழகத்திற்குக் கொண்டுவர வழிகாணப்பட்டு விட்டது. அத்திட்டத்தால் நமக்குக் கிடைக்கும் தண்ணீர் உடுமலைப்பேட்டைக்குப் பக்கத்திலேயே இருக்குமா, அல்லது தாராபுரம்

பக்கமாகவும் வருமா என்பது போன்ற சந்தேகங்கள் தான் தீர்க்கப்பட வேண்டியவையாக இருக்கும். நீர்ப்பாசனத்திற்குத் தேவையான அணைகள் கட்டப்பட்டு விட்டன.

**DEPUTY SPEAKER** : The hon. Member has got only two minutes more.

**Sri C. N. ANNADURAI** : இனிமேல், அணைகட்ட வேறு ஆறுகள் இல்லை என்று சும்மா இராமல் சிறு பாசனத் திட்டங்களுக்குள்ள வேறு வழிவகைகளைக் காணவேண்டும். அதற்கான பணத்திற்கு மத்திய அரசாங்கத்துடன் போராடவேண்டும்.

அடுத்தபடியாக, நில உடைமைக்கு உச்ச வரம்பு கட்டுவது பற்றி கவர்னர் அவர்களுடைய உரையில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. கூட்டுறவு முறையில் கூட்டுறவுப் பண்ணைகள் நடத்தலாம் என்ற கருத்து இங்கே வலயுறுத்தப் பட்டிருக்கிறது. அந்தக் கருத்து உறுதிப்படுவதற்கு முன்பு கூட்டுறவுத் துறையைப்பற்றி நாட்டு மக்கள் என்ன கருதுகிறார்கள் என்பதை ஒரு பாரபட்சமற்ற ஆய்வுக் குழுவின் மூலம் அறிந்துகொள்ளவேண்டும். அதற்கான ஆய்வுக் குழுவை நியமிக்கவேண்டும். அது கண்டுபிடித்துத் தெரிவிக்கும் குற்றம் குறைகளைக் களைவதற்கு ஏற்ற முறையில் கூட்டுறவுச் சட்டத்தைத் திருத்திவிட்டு அதற்குப் பிறகு கூட்டுறவுப் பண்ணைகளை அமைத்து நடத்தினல் நல்ல பலன் கிடைக்கும். அப்படி இன்றி இன்று இருக்கும் கூட்டுறவு ஸ்தாபனங்களைப்போன்ற கூட்டுறவுப் பண்ணைகளை நடத்தினல் பலன் ஏற்படாது. இன்று போன்று குடும்பத்தார் தேடிவைத்த சொத்தைப் போன்றோ, ஊர்ப் பெரியதனக்காரரின் சொத்தைப் போன்றோ, தண்டல்காரனின் தண்டத்தைப் போன்றோ கூட்டுறவு ஸ்தாபனங்கள் இருந்தால், கூட்டுறவுப் பண்ணைகள் இருந்தால், மக்களுக்கு நன்மை ஏற்படாது. கூட்டுறவு முறைக்கு நான் ஆதரவு காட்டாமல் இருக்கிறேன் என்று யாரும் தப்பாக எண்ண வேண்டாம். கூட்டுறவு முறை சிறந்த திட்டம். ஆனல் அந்தச் சிறந்த திட்டம் வெற்றியுற வேண்டுமானல் எல்லாக் கட்சிகளின் நிபுணர்களும் பொருளாதார நிபுணர்களும் ஒன்றாகக் கூடி கூட்டுறவு முறையைப் பற்றிப் பொது மக்கள் என்ன நினைக்கிறார்கள், அதில் என்னென்ன குற்றம் குறைகள் சுட்டிக்காட்டுகிறார்கள், கூட்டுறவு முறையில் என் லாபம் வருவதில்லை என்பதையெல்லாம் அறிந்துகொண்டு, அதற்குப் பிறகு அவசியமான தகுந்த சட்டத் திருத்தங்களைச் செய்துவிட்டு கூட்டுறவு பண்ணைகளை அமைத்து நடத்தினல் மக்களுக்கு நன்மை ஏற்படும். மாட்டை வண்டியில் பூட்டுவதற்கு முன்பு பல விஷயங்களை கவனிக்கவேண்டும். வண்டிச் சக்கரத்திற்குப் பட்டா போடப்பட்டிருக்கிறதா, இரும்பு வளையங்கள் சரியாக இருக்கின்றனவா, கடையாணிகள் பொருத்தமானவையாக இருக்கின்றனவா என்றெல்லாம் பார்த்த பிறகு வண்டியில் மாட்டை பூட்ட வேண்டியிருக்கிறது. இவைகளையெல்லாம் கவனிக்காமல் அச்சு முறிந்த வண்டியில் மாட்டைப் பூட்டினல் காளையும் கெட்டுப் போகும், வண்டியும் நாசம் அடையும். அதே மாதிரி கூட்டுறவு முறைகள் சம்பந்தமாக நான் கூறிய காரியங்களை யெல்லாம் செய்த பிறகு நாகபுரியில் தயாரிக்கப்பட்டிருக்கும் அழகான காளையை கூட்டுறவு என்ற வண்டியில் கட்டினல் அச்சு முறியாமல் இருக்கும். கூட்டுறவு முறையைப் பற்றி கவர்னர் அவர்கள் குறிப்பிட்டிருப்பதால், நாட்டு மக்கள் உள்ளத்தில் அந்த முறை சம்பந்தமாக இருக்கும் அதிருப்தியைத் தெரிவித்தேன்.

நான் குற்றம் குறைகள் கூறியதற்காக என் மீது அருள்கூர்ந்து அருவருப்பு அடையாதீர்கள் என்றும், கோபப்படாதீர்கள் என்றும் காங்கிரஸ் அமைச்சர்களையும் காங்கிரஸ் உறுப்பினர்களையம் கேட்டுக்கொள்கிறேன். உங்களைக் கண்டிக்க எனக்கு இருக்கும் நேரம், இந்தப் பகல் வேளைதான். மாலை வேளைகளில் நான் வெளியே உங்களைக் கண்டித்துப் பேசலாம். என்னுடைய அந்தக் கண்டனப் பேச்சுக்களின் தொடர்ச்சி இது என்று தவருகக் கொள்ளாதீர்கள். இங்கே நான் பேசும்போது, கனம் நிதி அமைச்சர் அவர்களுடைய கரங்களை, மத்திய அரசாங்கத்துடன் இன்னும் பலமாகப் போராடுவதற்குரிய முறையில் வலுப்படுத்தும் வகையில் பேச வேண்டும் என்பது தான் என் நோக்கம். நீங்களும் நானும் ஒன்ருகச் சேர்ந்து அவருடைய கரங்களை வலுப்படுத்த வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

[Sri C. N. Annadurai] [9th February 1959

நான் டெல்லிக்குச் சென்றிருந்த போது " உங்கள் நிதி அமைச்சர் மிகவும் சாமர்த்தியசாலி. அவர் மிகுந்த பலமுள்ளவராக இருக்கிறார். அவர் இங்கிருந்து அதிகமான பணத்தை வாங்கிக்கொண்டு போகிறார் " என்று பாராளுமன்ற உறுப்பினர்கள் என்னிடம் சொன்னார்கள். அதைக் கேட்டு நான் பூரித்துப் போனேன். " அவர் அவ்வளவு பணம் வாங்கிக் கொண்டு வராவிட்டால் அவரை நாங்கள் சும்மா விடுவதாக இல்லை. அவருக்குப் பக்கத்தில் நாங்கள் இருக்கிறோம் " என்று நான் அவர்களிடம் சொன்னேன். எனவே நாம் இரண்டு சக்திகளாகப் பிரிந்து இந்த மாநிலத்தை வலுப்படுத்த வேண்டும். கவர்னர் உரையின் பேரில் பேசும்போது நான் குற்றம் குறைகள் கூறியதற்காக என் மீது கோபம் கொள்ளவேண்டாம் என்று உங்களைக் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri S. NAGARAJA MONIGAR :** on a point of information, Sir கனம் அங்கத்தினர் திரு. அண்ணாதுரை அவர்கள் நமது நிதி அமைச்சர் அவர்கள் டெல்லிக்குச் சென்று மத்திய அரசாங்கத்திடமிருந்து சமார்த்தியமாக அதிகமான பணத்தைப் பெற்றுவருகிறார்கள் என்று குறிப்பிட்டு, தம் பாராட்டுதலையும் பூரிப்பையும் தெரிவித்தார்கள். (கனம் ஸ்ரீ சி. சுப்பிரமணியம் : பாராட்டுதலை நம்பவேண்டாம்) அவ்வாறு அவருக்கு திருப்தி ஏற்படுமானால், அவர் நாடு பிரிய வேண்டும் என்ற எண்ணத்தை விடுவாரா?

***Sri A. VEDARATHNAM :** on a point of personal explanation, Sir. அறிஞர் அண்ணா அவர்கள் பேசும்போது என் சம்பந்தமாக தவறாக ஒரு விஷயம் சொல்லிவிட்டார். " தமிழ் நாடு " என்று இந்த ராஜ்யத்திற்குப் பெயர் வைத்துவிட்டால் உதகைக்கு தாம் வருவதாக அறிஞர் அண்ணா அவர்கள் சொன்னதாக நான் இங்கே சொன்னேன் என்று அவர்கள் கூறினார்கள். அது தவறு. நான் அவ்வாறு சொல்லவில்லை. பத்திரிகைச் செய்தியை வைத்துக்கொண்டு நான் இங்கே பேசவில்லை. நான் இந்த சபையில் பேசியபோது அறிஞர் அவர்கள் இங்கே இல்லை. எனவே யாரோ தவறாகச் சொன்ன செய்தியைக் கேட்டு அவர் அவ்வாறு இங்கே பேசியிருக்கிறார் என்று நினைக்கிறேன். ஸ்ரீ ஆசைத்தம்பி அவர்கள், தம்மிடம் யாரோ ஒரு நண்பர் வந்து, உதகைக் கூட்டத்திற்கு அவர்கள் செல்வார்களா என்று கேட்டதாகவும், அதற்கு அவர், சென்னை, ராஜ்யத்திற்கு " தமிழ் நாடு " என்று பெயர் வைத்தால் தாங்கள் உதகை கூட்டத்திற்குச் செல்லப் போவதாக தான் பதிலளித்ததாகவும் பேசினார்கள். அவர்களுடைய அந்தப் பேச்சுக்குத் தான் நான் பதிலளித்தேன்.

**Sri C. N. ANNADURAI :** நான் கனம் அங்கத்தினர் ஸ்ரீ வேதரத்னம் அவர்களைப்பற்றிக் கொண்டிருந்த எண்ணம் உறுதிப்பட்டதற்காக மகிழ்ச்சியடைகிறேன். நான் முன்பு இங்கே குறிப்பிட்டது போல் அவர் சொல்லியிருக்கமாட்டார் என்றே நினைத்தேன். அது சரியாகி விட்டது. அவருடைய பெருந்தன்மையான விளக்கத்தைக் கேட்டு மகிழ்ச்சியடைகிறேன்.

11-20 a.m. **Sri J. MATHA GOWDER : On a point of information, Sir.** கனம் அண்ணாதுரை அவர்கள் பேசும்போது நீலகிரிக்குப் போனால் அங்கே ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசம் தெரியாதென்று குறிப்பிட்டார்கள். ஒருக்கால் அண்ணாதுரை அவர்கள் நீலகிரிக்குப் போயிருந்தபோது அவரது கண்ணில் ஏதாவது கோளாறு இருந்ததோ ? அப்படியில்லையென்றால் அவர் இருக்கும் காஞ்சீபுரத்தில் ஆணுக்கும் பெண்ணுக்கும் வித்தியாசம் தெரிகிறதா என்று அறிய விரும்புகிறேன்.

DEPUTY SPEAKER : It is not a point of information.

Sri G. G. Gurumurthy rose. . .

DEPUTY SPEAKER : I cannot allow any such discussion. The hon. Leader of the Opposition may now speak.

9th February 1959]

* SRI V. K. RAMASWAMY MUDALIYAR: Mr. Deputy Speaker, the Governor's address has caused considerable disappointment in the State. I am very sorry to state that no mention has been made in the Governors address about bringing down the cost of living, especially about bringing down the prices of articles of consumption.

Another important factor is that the address has not mentioned anything about the unemployment problem which has become a menace so to say in our State. Sir, with regard to the articles of consumption, the Government have not raised their little finger to bring down the prices effectively except perhaps in the case of paddy. But, what about the other articles? The prices of other articles are going up steadily every day. Take for instance, the price of kerosene oil. Now, it has been mentioned that the cut imposed by the Government of India has been restored. My own impression is that the Oil Companies have created an artificial sacrcity and have put up the prices unnecessarily, with the result that the poor men in the villages are not able to get even an ounce of kerosene. The same is the case with the other articles which are in daily use and so the people are put to lot of inconvenience and nuisance. I would therefore request the Government to introduce effective control over all these articles of consumption and other daily necessities of life which are required by the poor people in the villages.

Even the cost of medicines is going up everyday and there is no likelihood of its being brought down. The Company people, that is those engaged in the trade, say that because of the foreign exchange difficulty, they are not able to get the medicines in sufficient quantities at competitive prices. After all, medicines are indispensable even to the poorest of the poor. So, the Government must see that sufficient foreign exchange is made available for this purpose. I want the Government of Madras to address the Government of India in the matter and see that the much-needed relief is afforded to the poor.

With regard to the control of the prices of paddy, much is talked about giving relief to the agriculturists, without taking into consideration whether the production costs have gone up or not. We find that the poor ryots in the villages are not able to get iron ploughshales, iron tyres, ammonium sulphate and other things. These things are not easily available. Granting that they are available in certain areas, the ryots have to get them at black-market rates. The position is very difficult. Even though they are supplied by the Co-operative Department through what are called Wholesale Stores, still scarcity conditions do prevail and the ryots are put to lot of difficulties with the result that the cost of production of paddy is going up like anything. I do not stand in the way of Government controlling the prices of paddy effectively. I find that the Government are contemplating the introduction of 'State-trading' in foodgrains. We have seen that in previous years, I mean, during the days when rationing was in force and when State-trading was resorted to and when there was wholesale buying through the Government, the Government have lost very

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [9th February 1959

considerably, to the tune of nearly Rs. 14 crores or so and this amount is going to be written off shortly as the departmental people have now put up a strong note about it. So, there has been much of bungling with regard to State-trading in the past with the result that it was not at all possible for the then Government to do the work effectively at any time. Now, I would like to have a categorical statement from the Hon. Minister as to how he proposes to deal with the State-trading in foodgrains now and whether he will do it effectively instead of allowing the middlemen and merchants to put up the prices as they pleased.

With regard to the fixation of prices, I would like to say one thing. The Government are now having Seed Farms in every district and they know exactly what the cost of production will be. So, I would request the Government to fix a fair price acceptable both to the consumer and the producer. The Hon. Home Minister was just now telling that according to a decision taken at a recent Ministers' Conference, fair price shops will be opened in all places and there will be effective control in all the rural areas and so on. Well, it all remains to be seen how effectively the Government are going to control these prices.

Even in the matter of transport facilities for foodgrains there are lot of difficulties experienced by the people. A merchant from Tindivanam cannot be expected to dispose of his paddy at Saidapet for the same price. There will be some variation in prices even at the District level and there will be variation from district to district, and even from taluk to taluk. Further, there are not adequate godown facilities in the rural areas. Every place or at least every taluk headquarters must be provided with adequate storage facilities and adequate quantities of foodgrains should be stored. In all important centres fair price shops should be opened immediately to bring down the prices. Unless minimum prices are guaranteed to the producer, there will be a tendency on the part of the ryots to switch over to some commercial crops and the position will become precarious. So, I earnestly request the Government to seriously consider all these points.

In view of the pest attacks on a large-scale so to say, in some of the districts, the position has become very difficult. Even the Hon. Minister has replied while answering a question on the floor of the House that there has been a loss to the extent of 15 to 20 per cent because of these pest attacks in so many parts of the State. This should be put an end to, and that too as quickly as possible.

There is the question of Agriculture Income-tax. Sir, a couple of days back, I had an opportunity of perusing the Forms introduced by the Commissioner for Agriculture Income-tax and I found that there were about 5 to 6 pages and in some cases 10 to 12 pages of columns which has to be filled up by the assessees. God only knows how many of the ryots who are put up in the remote villages will be able to fill up these Forms. These Forms are perhaps based on the model of the Central Income-tax Forms. It was recently published in the Papers that the ryots should submit their Income Returns before the end of February. How

9th February 1959] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

many ryots know these publications? How many of them can go through the Papers and how many of them really know how to submit these Returns within such and such time. Why cannot the Government send these Forms to each and every village and arrange to distribute them through the respective village officers and see that the Returns are submitted in time so that the poor ryots may not be harassed afterwards for non-submission of these returns?

There should be a simple method for calculating the income and expenditure of the ryots instead of suggesting so many heads which the ryots cannot understand. That is also my submisison and the Government, I am sure, will look into this also. 11-36 a.m.

Then there is the question of ceiling on land. There is no point in fixing a ceiling arbitrarily. Ceiling must be fixed. But on what basis? I find from the newspapers that there is a proposal to introduce a limit of 300 rupees as the monthly income of agriculturists for the purpose of ceiling. I want to know what the Ministers are getting per month. What is their travelling allowance? All these should be taken into consideration for fixing the ceiling. I should like the ceiling to be fixed on the basis of the pay and T.A. drawn by the Ministers. My another submission is, there is no point in distributing lands to A and from A to B and B to C and so on. You must explore the possibilities of bringing all waste lands under cultivation. According to the information we have gathered, there are twenty to thirty lakh acres of arable land in Tamil Nad which can be brought under cultivation and distributed to the landless poor people. So many Members have been reiterating this demand on the floor of this House and nothing has been done so far. I am sure, the Government will soon call for figures from the Board of Revenue about the extent of such lands and take early steps to distribute these lands to the landless people. They must also give them some aid, and only in that way production of food could be stepped up.

Even with regard to minor irrigation works, I find that the work has been very slow. In many places, there has been no desilting and many tanks are still in a state of disrepair. Nothing has been done so far. The Government must see that they take up this work and complete it at least before the end of next year so that food production may be stepped up.

Sir, there is then the electricity minimum charge. Even with regard to that there has been so much of harassment. Something must be done to reduce the minimum charges, so that the ryots may get some relief in the same way as those in the industrial sector. This is a very serious problem and the Government should influence the Electricity Board to see that the minimum charges are brought down considerably.

I find that there has been a lot of harassment with regard to small savings in the villages. Recently, I had been to some of the rural parts and I found in many places an army of officers

[Sri V. K. Ramaswamy Mudaliyar] [9th February 1959

sitting and harassing the people. I do not mean to say that the Plan should not be proceeded with. It should go ahead but there should not be any kind of harassment. Issue an appeal to the people and get whatever money they are able to give. The officer is not the person who should say how much each should save and how much should be spent. We also find the departmental officers going in different directions and asking for money. If the money asked for is not given, the people are subjected to all sorts of trouble. This must go. And I must also ask earnestly how much the Ministers, the Secretaries to Government and the heads of departments including Collectors save for the Small Savings Scheme. I would like the Hon. Minister to give the House a statement showing their savings after the Small Savings Drive is completed. I received a representation a couple of days back that the village officers' pay for one month has been taken by the Collector at the point of the bayonet. That is a great hardship to which the village officers have been put. At this time to take away a month's pay is really reprehensible and this kind of practice should be put an end to. Immediately after this Drive, you are going to start collection of kist and recovery of loans. It is really deplorable and my only request is that you should issue instructions to the officers that only if anybody comes forward to give, the money must be received and that no coercion should be there.

With regard to the non-gazetted officers, I have referred to their plight on many occasions in this House. I am glad to find that this small relief has been announced. But it comes on the eve of the municipal elections. You were able to give some relief during the last general elections. And now on the eve of the municipal elections you announce some relief. The next instalment of relief, I am sure, will come on the eve of the general elections in 1962. As I have pointed out already, the cost of living is going up and the poor non-gazetted officers are not in a position to make both ends meet. Some substantial relief should be given to them. I find from the Governor's speech that a retired official is to be appointed as Chairman of the proposed Pay Commission. It is wholly unnecessary to have a retired official as Chairman A non-official or a Minister as in the case of Andhra would be much better. Even now, it is not too late for the Government to revise their decision and I would suggest that a Minister might preside over the Commission. Representatives of the N.G.O's Association also should be taken into the Commission and it should be in a position to complete its deliberations and submit its report within a few months with a view to giving to the N.G.O.'s adequate relief in time.

With regard to Block areas, my submission is these Blocks are not selected properly. There are very bad areas, very backward in every respect, and these should be given top priority. Selection should be based on the genuine reports of Collectors and not made with a partisan spirit. There are many backward areas and I find all these would be covered by the end of the Plan. The District Planning Board could select these Blocks and the Government could accept its recommendations. Regarding the Third

9th February 1959] [Sri V. K. Ramaswamy Mudaliyar]

Plan, the Government must chalk out a district-war plan in consultation with the District Planning Committee. There should be a non-official committee to go into the whole question of selection of Blocks and assigning of prioritiesEven now, even the second Plan is in progress, I would request the Government to appoint a non-official committee to tour the whole State and submit a report on the progress of the work achieved so far and the needs of particular areas. I shall be glad if the Hon. Minister makes an announcement now regarding the appointment of such a non-official committee.

Sir, my revered and respected friend, Mr. Annadurai, referred to the exodus to the hill station—Ootacamund. I am sure the Hon. Minister for Finance will in his reply, meet his point.

THE HON. SRI C. SUBRAMANIAM : You want me?

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : Well, so far as I am concerned, I am not enamoured of the visit. My colleagues also are not enamoured. My anxiety is this. Neither Andhra nor Kerala has hill stations. Many States in India do not have hill stations. Ootacamund is called the Queen of hill stations. I honestly feel that Members would be put to great inconvenience on account of their visit. Still, we felt there hade been so much representation before the House by Members representing the Nilgiris and that we could meet there for a week or ten days That will not matter much. We also thought of the desirability of having such meetings in Cape Comorin or Courtallam or Madurai or in some other places. After all, going to a hill station is not going to result in any material loss to the Government when we take into consideration so much wasteful expenditure we see in different directions. After all there may be some waste. But it should be possible for all Members to see the different places and judge how Tamil Nad is developing.

You know, Sir, from Ootacamund we are getting a lot of foreign exchange. Moreover, the idea is that the Members of the Legislative Assembly should tour the whole of Tamil Nad and see all the projects and developmental works that have been executed in recent years so that they may be well informed about the work we have done and the progress we have made in those years. After all, the Heads of Departments are going to Ooty. Ministers are going there in connection with the meeting of some committees. So many committees are meeting there. The Collectors' Conference is being held there. Some All-India conferences are being held there because the Government of India do not find a more suitable place than Ooty for holding such conferences. When so many things are being done there, I do not see any reason why there should be such a strong opposition to the holding of the meeting of the Assembly in Ooty. That is my submission. 11-40 a.m.

With regard to the Exhibition, I have already pointed out that we are wasting so much money. I would request the Government to put up a permanent Show Room of the Public Works Department instead of the department taking part in the exhibition and

spending thousands of rupees. Then only those people from other States who tour this State periodically will know what we are doing in the different departments, in different directions. So my advice is that they should put up the Show Room in a very conspicuous place in the City.

Lastly, we find so many irregularities not only in the matter of accounting but also in the matter of delaying the disposal of cases. Ryots and the poorest of the poor do not get orders early, with the result they are put to a lot of inconvenience. So, the Government must see that they tone up the administration and give a proper drive to the district officials to dispose of their papers in time, so that the poorest of the poor may get some relief. I am sure, the Government will do so and thus give sufficient relief to the poor. This is all my submission.

*THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் உதவி சபாநாயகர் அவர்களே, கவர்னர் அவர்களது உரைக்கு விளக்கம் தரக் கூடிய முறையிலே எதிர்க்கட்சியினர் மட்டுமல்லாது காங்கிரஸ் கட்சியினரும் குறைகூற வாய்ப்பளித்து இந்த நான்கு நாட்களாக விவாதித்திருக்கிறோம். குறை கூறியவர்களில் பலர் கவர்னர் உரையில் பல முக்கியமான விஷயங்கள் காணப்படவில்லையென்று கூறினார்கள். அவர் கூறிய இன்னொரு குறை, இது காரசாரமாக இல்லாத, உப்புசப்பு இல்லாத உரை என்பதாகும். இதில் முக்கியமாக நாம் கவனிக்கவேண்டியது, புதுப் புதுத் திட்டங்கள்ஒவ்வொரு மாதத்திலும், ஒவ்வொரு காலத்திலும், என் ஒவ்வொரு வருடத்திலும் கூட உதயமாகிக் கொண்டிருக்கக்கூடிய நிலையில் நாம் இல்லை என்பதாகும். அப்படி நினைத்த பிரகாரம் செய்துகொண்டிருந்த காலம் வேறு. இன்று நாம் எடுத்துக் கொண்டிருக்கிற எல்லா வேலைகளும் திட்ட அடிப்படையில்தான். அடுத்த ஐந்து வருடங்களுக்கு என்ன காரியங்கள் செய்யப் போகிறோம் என்பதை நிர்ணயம் செய்து அந்தத் திட்ட அடிப்படையில்தான் நாம் நடவடிக்கைகள் எடுத்து வருகிறோம். அப்படி அந்தத் திட்டங்களில் குறைகள் இருக்கலாம். அது வேறு விஷயம். ஆனால் திட்டம் என்று ஒன்று ஏற்பாடு செய்ததற்குப் பிற்பாடு அந்தத் திட்ட அடிப்படையில்தான் காரியங்களை எடுக்க வேண்டியதாக இருக்கிறது. திடீரென்று சினிமாவில் தோன்றுவது போல் புதுக் கதைகள் அல்லது புது முகங்கள், அல்லது புது மெட்டுகள் எல்லாவற்றையும் கொண்டு வந்து கவர்னர் உரையில் புகுத்தி விட முடியாது. ஆகவே, கவர்னர் அவர்களது உரையைக் கேட்க வரா விட்டாலும் பேச வருகிறவர்கள் இது போன்று திடீர் நிகழ்ச்சிகள் அல்லது மனதை உருக்கக்கூடிய பல கட்டங்கள் இதில் இருக்கும் என்று எதிர்பார்ப்பது தவறு, என்பதை நான் முதலில் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். அடுத்தபடியாக, கவர்னர் உரையில் பல முக்கியமான விஷயங்கள் காணப்படவில்லையே என்று குறை கூறப்பட்டது. கவர்னர் உரை என்பது ஒரு " அட்மினிஸ்ட்ரேஷன் ரிப்போர்ட் " அல்ல. அதாவது, நிர்வாக அறிக்கையல்ல. சமீப காலத்தில் வரக் கூடிய சில முக்கியமான நிகழ்ச்சிகளை மட்டும் தான் கவர்னர் உரையில் அமைந்திருக்க வேண்டியதாகயிருக்கிறது. இது சம்பந்தமாக வேறு ஒரு கஷ்டத்தை ஸ்ரீ அண்ணாதுரை அவர்கள் எடுத்து விளக்கினார்கள். மூன்று வாரங்களுக்குள்ளாக பட்ஜெட் உரை வரவேண்டியிருக்கிறது. இப்படி குறுகிய காலத்திற்குள்ளாக இரண்டு பெரிய கொள்கை உரைகள் நிகழ்த்துவது கஷ்டமாகப் போய்விடுகிறது. ஆகவேதான் சென்ற ஆண்டு இதைத் தவிர்க்க முடியுமாவென்று டிஸம்பர் மாதத்தில் இந்த சட்டசபையைக் கூட்டுவித்து அப்பொழுது கவர்னர் உரையை ஆரம்பித்து அதையே தொடர்ந்து பட்ஜெட் கூட்டமாக அமைத்துக்கொண்டிருந்தோம். இவ்வருடம் அப்படி அமைத்துக்கொள்ள முடியாத காரணத்தினால் பெப்ரவரியில் ஆரம்பித்து கவர்னர் உரை அப்பொழுது நிகழ்த்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டது. இதைத் தொடர்ந்து பட்ஜெட் உரை வளரவேண்டியிருக்கிறது. அதனால் சங்கடங்கள்ஏற்பட்டிருக்கிறது என்று திரு அண்ணாதுரை அவர்கள் சொன்னார்கள். இதில் முக்கியமாக கொடுத்திருக்கக்

9th February 1959] [Sri C. Subramaniam]

கூடிய ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி மறுபடியும் வலியுறுத்த வேண்டியது அவசியம் என்று நான் கருதுகிறேன். இங்கிருக்கக் கூடிய எல்லாக் கட்சி அங்கத்தினர்களும் ஒன்று பட்டு பல காரியங்களை முடிவு செய்திருக்கிறார்கள் என்பதைப்பற்றி பெருமையுடன் கவர்னர் அவர்கள் எடுத்துரைத்திருக்கிறார்கள். அதைப்பற்றி நானும் பெருமைப் படுகிறேன். ஆனால் இதிலிருந்து எல்லா விஷயங்களையும் எதிர்க்கட்சி அங்கத்தினர்களை அல்லது தலைவர்களை கலந்துதான் செய்திருக்கிறோம் என்று நான் சொல்ல வரவில்லை. இது ஒரு ஆரம்பம். இதை ஒரு ஆரம்பமாக வைத்துக் கொண்டு அந்தத் திசையிலேயே நாம் மேலும் மேலும் செல்லவேண்டு மென்பது எனது முயற்சி.

(Mr. Speaker in the Chair.)

அதற்கு என்னால் இயன்ற அளவு முயற்சி செய்து வருகிறேன் என்று தெரிவித்துக்கொள்ள முடியுமே தவிர எல்லா விஷயங்களிலும் எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் அல்லது தலைவர்களை ஆலோசித் துத்தான் செய்கிறோம் என்று சொல்ல வரவில்லை. எந்தக் காலத்திலும் அப்படிசெய்ய முடியாது. கொள்கைகளை வரையறுக்கக் கூடிய விஷ யங்களைப் பொறுத்த மட்டில் எதிர்க்கட்சி அங்கத்தினர்களை, தலைவர்களை கலந்தாலோசித்து ஒன்று பட்டு நிர்ணயிப்பதில் பலவித நன்மைகள் இருக்கின்றன என்பதை நாம் மேலும் மேலும் உணர்ந்து வருகிறோம். அதுவும் நம் ஜனநாயகம் சமீபத்தில் ஆரம்பித்த ஜனநாயகமாகும். பத்து வருட காலந்தான் ஆகிறது. தொடர்ந்து நமது அனுபவம் மூலமாக நம் நாட்டிலுள்ள சூழ்நிலையைப் பொறுத்து ஜனநாயகம் நல்ல முறையில் எப்படி வளர முடியும் என்று நமக்கு ஏற்படும் அனுபவங்களை வைத்துக் கொண்டு ஆலோசித்து அவ்வப்போது வேண்டிய முயற்சிகள் செய்ய வேண்டியதாக இருக்கிறது. என்னுடைய சிற்றறிவுக்குத் தோன்றிய வரையில் இங்குள்ள சூழ்நிலையை இரண்டு பிரிவுகளாகப் பிரித்து, இரண்டு சக்திகளாகப் பிரித்து ஒன்று எதிர்க் கட்சி இன்னொன்று சர்க்கார் கட்சி என்ற முறையில் பணிகளை ஆற்றிச் சென்றால் அதனால் நமது சூழ்நிலையில் ஜனநாயகம் நல்லமுறையில் வளர வாய்ப்பு ஏற்படாதென்று நான் கருது கிறேன். ஆகவே எதிர்க்கட்சிகளின் கருத்துக்களைத் தெரிந்து கொண்டு எந்த அளவு அந்தக் கருத்துக்களை ஏற்றுக்கொள்ளமுடியும், எந்த அளவு ஏற்றுக் கொள்ளலாம் என்று ஆலோசித்து அவர்களும் கொள்கைகளை வகுப்பதில் பங்கு கொண்டிருக்கிறார்கள் என்ற உணர்ச்சி அவர்கள் மனதில் ஏற் படும் முறையில் கொள்கைகளை வகுப்பது நல்லதென்று கருதுகிறேன். நான் அதை ஒப்புக்கொள்கிறேன். அத்துடன் இன்னொரு காரியத்தை ஞாபகப்படுத்த வேண்டியிருக்கிறது. திட்டப்படி செயலாற்றவேண்டுமென்று சொல்லும்போது பிடிவாத குணம் யாருக்கு இருந்தாலும் சரி திட்டப்படி இயங்க முடியாமல் போய் விடுகிறது. அதற்கு உதாரணமாக உதகைக்கு 11-50 a.m.
செல்ல வேண்டிய பிரச்னை இன்று நம் முன்னர் இருக்கிறது. இதில் சர்க்கார் எவ்விதம் நடக்க வேண்டுமென்ற முறையில், அவர்கள் கொள்கை அடிப்படையில் எந்தவிதமான முடிவும் செய்யவில்லை. இது, சட்டசபை நடக்கக்கூடிய விஷயத்தைப் பொறுத்தது. சட்டசபை அங்கத்தினர்கள் எல் லோரும் சேர்ந்து ஆளும் கட்சி அங்கத்தினர்கள், எதிர் கட்சி அங்கத்தினர் கள் எல்லோரும் சேர்ந்து முடிவு செய்ய வேண்டிய விஷயம் என்று நானும் சொல்லியிருந்தேன். அப்படி முடிவு செய்ய நினைக்கும்போது வேறுபட்ட கருத்துக்கள், இரண்டு மூன்று கட்சிகள் வேறு விதமாக நினைத்து இன் னும் சில கட்சிகள் வேறு ஒரு விதமாக நினைத்து இருந்தால் இதுபற்றி புனர் பரிசீலனை செய்வதற்கு இடமில்லாமல் ஒன்றுபட்ட கருத்துக்கு வரு வோம் என்று காத்திருக்க வேண்டிய அவசியமிருக்கலாம். இதிலே துரதிருஷ்டவசமாக என்ன ஆகிவிட்டது என்றால், எல்லா கட்சியினரும் ஒரு விதமாக நினைக்கும்போது, ஒரு கட்சி மட்டும் இது கூடாது என்று சொல்லுகிறது. ஜனநாயகம் வளர்வதற்குப் பிடிவாதம் கூடாது. விட்டுக் கொடுக்கக்கூடிய தன்மை வேண்டும். சர்க்கார் கட்சிக்காக விட்டுக் கொடுக்காவிட்டாலும், எதிர்க்கட்சிகள் எல்லோரும் ஒருமித்துவர வேண்டும் என்று சொல்லும்பொழுது, ஒரு கட்சி மட்டும் தனித்து நிற்பதனால் சர்க் கார் இதுபற்றி யோசிக்க வேண்டியதாயிருக்கிறது. மற்ற கட்சிகள் எல்லோரும் விரும்பும்போது, இந்த ஒரு கட்சி மட்டும் தான் மக்களுடைய

பிரதிநிதியா, ஒரு கட்சிக்கு மட்டும்தான் மக்கள் நன்றாக வாழவேண்டும், பணம் விரயமாகக்கூடாது என்கின்ற உணர்ச்சி இருக்கிறதா, மற்றவர்களுக்கு அந்த உணர்ச்சி இல்லையா என்பது பற்றி யோசிக்க வேண்டியிருக்கிறது. எல்லோரும் சேர்ந்து வேலை செய்ய வேண்டுமென்று சொல்லும்பொழுது, இப்படி மற்ற எல்லோரும் ஒப்புக்கொள்ளுகின்ற காலத்தில் ஒருவர் மட்டும் தனியாக நின்று தடையாக நிற்க முடியும் என்ற சூழ்நிலை ஏற்பட்டால், இந்த முடிவுக்கு வருவதில் கூட ஒரு நல்ல வளர்ச்சி ஏற்படாது. இக் காரணத்தினால், இம்மாதிரி ஒரு தடை இருந்தால் அதை ஒதுக்கிவிட்டு ஒரு முடிவுக்கு வரவேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படுகிறது. இது வருந்தத்தக்கது தான். அவர்களும் நிலைமையை உணர்ந்து கொண்டு மலை உச்சியில் இருப்பவர்கள் என்று நினைத்துக்கொள்ளாமல், மற்ற எல்லோருடைய ஒன்றுபட்ட கருத்தை மதித்து, இதை ஒப்புக்கொண்டிருப்பார்களேயானால் அதுபற்றி நான் அவர்களை பாராட்டியிருப்பேன் கீழே இறங்கிவந்து விட்டார்கள் என்று நான் சொல்லி விடமாட்டேன் அண்ணாதுரை அவர்கள் எச்சரித்தார்கள், மலைக்குப் போகும்பொழுது வெள்ளையர் வாரிசாக ஆகிவிடக்கூடாது என்று. அதை நான் வரவேற்கிறேன அம்மாதிரி எச்சரிக்கக்கூடிய தகுதி அவருக்கு இருக்கிறது. அவர்கள்கூட ஒத்து வாழ்ந்தவர்கள். ஆகையினாலே அவர்கள் வாரிசாக போகக்கூடாது என்பது பற்றி இவ்வளவு அக்கறையோடு சொல்லுவதற்கு அவர்களுக்குத் தகுதி இருக்கிறது. அதை நான் ரொம்பவும் வரவேற்கிறேன். அவர்கள் வாரிசாக ஆகக்கூடாது என்பது தான் எங்களுடைய கருத்தும். மலைக்குப் போவதினால் நாம் வெள்ளையர் வாரிசாகி விடுவோமா என்பது பற்றி எல்லோரும் கொஞ்சம் ஆலோசனை செய்து பார்க்க வேண்டியிருக்கிறது. ஏதற்காக மலையிலே சட்ட சபைக் கூட்டம் கூட்ட வேண்டும் என்பது பற்றி கொஞ்சம் யோசித்துப் பார்க்கவேண்டும். நான் கோவைக்குப் பக்கத்தில் இருப்பதால் மலை வாசம் எனக்கு புதியதல்ல என்பது பற்றி அண்ணாதுரை அவர்கள் குறிப்பிட்டார்கள். அது உண்மைதான். அரசியலில் மாட்டிக் கொள்ளாத காலத்திலே ஒவ்வொரு கோடை காலத்திலும் கொடைக்கானல், உதகமண்டலம் போயிருப்பது தான் வழக்கம். அரசியலிலே சிக்கிய பிற்பாடுதான் அந்த வாழ்க்கை அமைவதில்லை. அது வேறு விஷயம். வேண்டுமானால் அங்கு போய் இருப்பதை யாரும் தடை செய்யப்போவதில்லை. ஏதோ மந்திரிகள் உதகைக்குப் போகவேண்டுமென்று நினைக்கிறார்கள் என்று பலர் பிரசாரம் செய்யலாம். அதற்காக சட்ட சபை மெம்பர்களையும் கூட கூட்டிக்கொண்டு போகிறார்கள் என்று சொல்லலாம். மந்திரிகள் தனியாகப் போய் அங்கே ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டுமென்றால், அவ்வாறு போகலாம். அதற்காக சட்டசபை மெம்பர்களை கூடவே கூட்டிக்கொண்டு போக அவசியமில்லை. இப்பொழுது உதகை இருக்கிற நிலைமை என்ன என்று பார்க்கும்பொழுது, அன்று இருந்த பொலிவோ, அன்று இருந்த வாழ்க்கைத்தரமோ இன்று இல்லாமல் இருக்கிறது. இதற்குக் காரணம் என்ன என்பதை யோசித்துப்பார்க்க வேண்டும். அந்த நாட்களில் அரசாங்கம் ஒரு சில காலம் அங்கே இயங்கி வந்திருக்கிறது. அதுதான் உதகைக்கு ஒரு உயிர் கொடுத்தது. அதன் காரணமாகத் தான் உதகை நல்ல முறையில் வளர்ச்சியுற்றது. அந்தப் பொலிவு இப்பொழுது கொஞ்சம் தேய்ந்து போய் இருப்பதைப் பார்க்கிறோம். ஆகவே, அதற்கு இப்பொழுது புதிய வாழ்வு கொடுக்க வேண்டும், புதிய வாழ்வு கொடுப்பதன் மூலம், நம்முடைய நாட்டின் பொது வாழ்வும் முன்னேற்றம் அடையும். அன்னியர் பலரும் அங்கு வந்து தங்கள் காலத்தைக் கழிப்பார்கள். காலத்தைக் கழிப்பது மட்டுமல்ல. அவர்கள் அங்கு செலவழித்து அதன் மூலம் நம்முடைய நாட்டிற்கு இன்னும் பெரிய வளம் ஏற்பட வேண்டும் என்கின்ற முறையில் மற்றவர்களையும் அங்கே வரவழைக்கிறோம். கூப்பிடுகிறோம். யாரும் பாழடைந்த வீட்டிற்கு வரமாட்டார்கள். எங்கு பொலிவு இருக்கிறதோ, எங்கு வாழ்வு இருக்கிறதோ, அங்கு தான் வெளி நாட்டு மக்கள் வந்து குவிவார்கள். அதனால் நாம் பயனடைகிறோம். இதை நன்றாக யோசித்துப் பார்க்க வேண்டும். அண்ணாதுரை அவர்கள் என்னுடைய நிலையில் இருந்தால், உதகையில் புது வாழ்வு ஏற்படுத்த வேண்டும், பொலிவு கொடுக்க வேண்டுமென்று சொன்னால், கற்பனை செய்து என்ன சொல்லுவார்கள் என்று யோசித்துப் பார்த்தேன். அதை அவர் ஒப்புக்கொள்ளுகிறார்களோ, இல்லையோ, அவர்

கள் சொல்லக்கூடிய கற்பனைக் கதை எனக்குத் தோன்றியதைச் சொல்லுகிறேன். ஒரு பெண்மணி இருக்கிறாள். அவள் கணவனை விட்டுப் பிரிந்து வாழ்கிறாள். அப்பொழுது அந்தப் பெண்மணிக்கு புது வாழ்வு ஏற்பட வேண்டுமென்றால், கணவன் மனைவியோடு போய் வாழ்ந்தால்தான் புது வாழ்வு ஏற்படும். (சிரிப்பு). அதைவிட்டு விட்டு கணவன் மனைவியோடு போய் வாழ்ந்தால் எத்தனை செலவாகும், விருந்து வைப்பதற்கு எவ்வளவு பணம் ஆகும் என்று கணக்குப் பார்ததுக்கொண்டிருப்பதா ? அல்லது கணவன் மனைவிக்கு வேண்டிய பணத்தை அனுப்பி விட்டால் போதும், போனால் வீண் செலவாகும் என்று சொன்னால், அந்தப் பெண்மணியின் வாழ்க்கை மலருமா என்பது பற்றி கொஞ்சம் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அந்த முறையில் பார்க்கும்பொழுது 50,000 ரூபாய் செலவானாலும் சரி, 5 லட்சம் ரூபாய் செலவானாலும் சரி . . . .

SRI C. N. ANNADURAI : கனம் அமைச்சர் அவர்கள் மனைவியை விட்டு கணவன் பிரிந்த காரணம் ஏதாவது குறிப்பிடமுடியுமா என்பதை அறிய விரும்புகிறேன்.

*THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தக் காரணத்தை ஆராய்ந்து மனைவி பேரில் குற்றமா, கணவன் பேரில் குற்றமா என்று பார்த்துக்கொண்டிருப்பதைவிட, அதை மறந்து விட்டு இரண்டு பேர்களையும் கூட்டி வைப்பதுதான் நல்லது. இந்த ஆராய்ச்சியிலே எந்த லட்சியத்தை அடையவேண்டுமோ, அதை மறந்துவிட்டு, கூட்டி வைப்பதற்குப் பதிலாக அவர்கள் இன்னும் பிரிந்து போகும் நிலைமையில் சிலர் மத்தியஸ்தம் செய்வார்கள். அவ்வாறு நடந்துகொள்ள வேண்டாம் என்று அண்ணாதுரை அவர்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன். ஆகவே, அங்கே புது வாழ்வு ஏற்படுத்த வேண்டும், சட்டசபை அங்கே போய் உட்கார்ந்து அங்கு இருக்கக்கூடிய மக்களுடைய வாழ்வுக்கு ஒரு புதிய ஊக்கம் கொடுக்க வேண்டும் என்கின்ற முறையிலேதான் இந்த முடிவு எடுக்கப்பட்டது. இது சர்க்கார் எடுத்த முடிவல்ல. எல்லாக் கட்சியினர்களும் ஒன்று சேர்ந்து—எல்லாக் கட்சியினரும் என்றால் அவர்கள் மறுப்புச் சொல்லுவார்கள்—திராவிட முன்னேற்றக் கழகம் நீங்கலாக எல்லோரும் ஒன்று சேர்ந்து செய்த முடிவு இது. இதிலே இன்னொன்று முக்கியமான விஷயம். இது ஜனநாயக முடிவு. ஒரு காரியம் நமக்குப் பிடிக்க வில்லையென்றால், அதை எதிர்த்துப் பேசக்கூடிய சுதந்திரம், உரிமை எல்லோருக்கும் இருக்கிறது. அந்த உரிமையை நாம் விட்டுக்கொடுக்கக்கூடாது தான். எவ்வளவு பேர்கள் இருந்தாலும், சிலர் இருந்தாலும், ஒரு முடிவு எடுத்தால், முடிவு தவறு என்று கருதினால் அதைத் தவறு என்பதை எடுத்துச் சொல்லக்கூடிய உரிமை, சுதந்திரம் இருக்கிறது. ஜனநாயகத்தை ஒப்புக்கொள்ளுவது என்றால், கொள்கை அளவிலே அப்படி ஒரு தவறான முடிவு ஏற்பட்டாலும், ஜனநாயக முடிவு என்கின்ற முறையிலே அதை ஏற்றுக்கொண்டு நடந்தால் தான் ஜனநாயகம் வளர்ச்சியுறும். நான் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்கின்ற முறையிலே, மற்றவர்கள் என்ன நினைத்தாலும், நான் நினைத்த பிரகாரம் தான் நடந்துகொள்ளுவேன் என்கிற முறையில் ஒதுங்கி இருப்பார்களேயானால், அது ஜனநாயக வளர்ச்சிக்கு நல்லது அல்ல என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

SRI C. N. ANNADURAI : 'எல்லாம்' என்பதற்கு "ஒன்று விடுபட்டு " என்பது பொருளா ? எல்லாக் கட்சிகளும் இசைந்தாலொழிய ஊட்டிக்குப் போவதில்லை என்று நிதி அமைச்சர் அவர்கள் சொன்னார்களே ?

*THE HON. SRI C. SUBRAMANIAM : நான் சொன்னதையே சொல்லுகிறேன். எல்லா கட்சிகளும் இசைந்தால் ஒழிய ஊட்டிக்குப் போவதில்லை என்று சொன்னேன். எல்லோரும் ஒத்துவர வேண்டுமென்பதற்காக அந்த சமயத்தில் அப்படிச் சொன்னேன். ஒருவர் மட்டும் ஒத்துவரமாட்டார், தனித்து நிற்பார் என்ற நிலைமை இருக்கும் என்று எதிர்ப்பார்க்கவில்லை. அப்படியிருந்தால் அப்பொழுதே உதறித் தள்ளி இருக்கலாம். ஆனாலும், அவர்களும் மற்றவர்களோடு சேர்ந்து வருவார்கள் என்ற நல்ல எண்ணத்தோடு, அந்த நம்பிக்கையிலே

[Sri C. Subramaniam] [9th February 1959

எல்லோரும் ஒன்றுபட்டு வரவேண்டும் என்று அவர்களுக்கு மரியாதை கொடுக்க வேண்டுமென்பதற்காக அப்படிச் சொன்னேன். அந்த மரியாதையை அவர்கள் காப்பாற்றிக்கொள்ளவில்லை என்றால், அதற்கு என்னைக் குற்றம் சொல்லி பயனில்லை.

(Sri C. N. Annadurai rose.)

MR. SPEAKER : அடிக்கடி குறுக்கே பேசுவது நல்லது அல்ல, அப்படி பேசவேண்டாம் என்று திராவிட முன்னேற்றக் கழகத் தலைவர் அவர்களைக்கூட நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

Interruptions are permitted. But the hon. Member cannot have constant and frequent interruptions. He must allow the Hon. Minister to reply. I think it is not correct to interrupt frequently.

SRI M. A. MUTHIAH CHETTIAR : But it is left to the discretion of the Chair.

MR. SPEAKER : Therefore it is I allowed three or four interruptions. Then I butted in.

SRI M. A. MUTHIAH CHETTIAR : When it (the interruption) is interesting, Sir?

12 noon *THE HON. SRI C. SUBRAMANIAM : சில சமயங்களில் ஒரு முடிவுக்கு எல்லோரும் வரவேண்டியிருக்கும். இது சகஜமாக நாட்டில் எல்லா இடங்களிலும் நடந்து கொண்டிருக்கும் பழக்கம். அதை உணர்ந்து மற்றவர்களும் அந்த முடிவோடு இசைந்து வருவது தான் சாதாரணமானவர்களின் பண்பு, அதிலும் ஜனநாயகப் பண்பும் அதுவாகத்தான் இருக்க முடியும் என்று நான் நினைக்கிறேன். அவர்களுடைய நினைப்பு என்னவாக இருந்தாலும், இம்மாதிரி விஷயத்தில் பெரும்பான்மையானவர்களின் முடிவோடு இசைந்து கொள்வது தான் ஜனநாயக பண்பாக இருக்கும் என்பதையும் அவர்களுக்குத் தெரிவித்துக் கொள்கிறேன். அதற்கு மேல் அவர்கள் என்ன முடிவு வேண்டுமென்றாலும் எடுத்துக்கொள்ளட்டும், அதற்கு அவர்களுக்கு உரிமையிருக்கிறது.

அடுத்தபடியாக, முக்கியமாக குறிப்பிட்டிருக்கக்கூடிய பிரச்னை பருவ நிலையை பொறுத்தது. இன்றைய நாட்டினுடைய பொருளாதாரம் முழுவதும் பருவ நிலையைப் பொறுத்துத்தான் இருக்கிறது. மழை சரியாகப் பெய்தால் தான் நாடு நல்ல நிலைமையில் இருக்க முடியும். பொருளாதாரத் துறையில் முன்னேறியிருக்கும் நாடுகளில்கூட இதே நிலைமை தான். வான் பொய்த்தால் வாழ்க்கைப் பொய்த்துவிடக்கூடிய நிலைமையில் தான் இருந்துகொண்டிருக்கிறது. இந்த நிலைமையில் நம் நாட்டைப் பொறுத்த வரையில் பல இடங்களில் பருவ நிலை சரியாக இல்லாததின் காரணமாக மிகவும் கஷ்டமான நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இதைப் பற்றித்தான் கவர்னர் அவர்களது உரையில் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. இதற்கு பின்னால் சில பகுதிகளில் மழை பெய்திருக்கின்றது சில இடங்களில் பருவ நிலை மோசமாகியிருக்கிறது. ஆகவே எல்லா பகுதிகளும் இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது என்று சொல்ல முடியாது. இந்த உரையை அமைத்தற்கு பின்னால் பல இடங்களிலும் பல மாறுதல்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஆனால் எங்கெங்கு மழையில்லாததின் காரணமாக மக்கள் கஷ்டப் படக்கூடிய நிலைமை இருக்கின்றதோ அந்த இடங்களுக்கு எல்லாம் நிவாரணம் செய்து கொடுக்கப்படும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதில், என்ன நிவாரணம், எந்த மாதிரியாக கொடுக்கப்படும் என்கின்ற விவரங்களை எல்லாம் அறிக்கையைப் போன்று இப்போது சொல்ல வேண்டிய அவசியமில்லை என்று நினைக்கிறேன். பாதிக்கப்பட்டிருக்கின்ற பகுதியிலுள்ள கனம் அங்கத்தினர்கள் என்னிடம் பல குறைகளை தெரிவித்திருக்கிறார்கள். மேலும் தெரிவிப்பார்கள் என்று நம்புகிறேன். அதோடு ஒரு அங்கத்தினர் அவர்கள் ஒரு யோசனையும் தெரிவித்தார்கள். அந்த யோசனையையும் கவனிக்கலாம் என்று நினைத்

9th February 1959] [Sri C. Subramaniam]

திருக்கிறேன். அதாவது அதிகாரிகள் சொல்லக்கூடிய அறிக்கையை மாத்திரம் கணக்கிலெடுத்துக்கொள்ளாமல் சில இடங்களில் மந்திரிகளும் சென்று உண்மையான நிலைமையை நேரில் பார்க்க வேண்டும் என்பது. அது வரவேற்கத்தகுந்த விஷயம் தான். இம்மாதிரி சந்தேகம் ஏற்படுகிற இடத்தில், போய்ப் பார்க்கவேண்டியது அவசியம் என்று தோன்றுகிற இடத்தில் மந்திரிகள் போய் நேரில் நிலைமைகளை அறிந்து அதற்குத் தகுந்தபடி நடவடிக்கை எடுக்கலாம் என்றும் தீர்மானித்திருக்கிறோம்.

அடுத்ததாக, நாட்டில் இன்றைக்கு மிகச் சிக்கலாக இருக்கின்ற பிரச்னை நிலச்சீர்திருத்தப் பிரச்னையாகும். இந்த நிலச்சீர்திருத்தம் என்று சொன்னவுடனேயே சாதாரணமாக எல்லோரும் நினைப்பது நிலங்களை எல்லாம் பங்கு போட்டுக் கொடுப்பது என்று நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். முதலாவதாக நிலச்சீர்திருத்தம் அவசியமா இல்லையா என்பதைப் பார்க்கும்போது இன்று நாட்டில் இருக்கின்ற உழவர்களுடைய நிலைமையை உயர்த்த வேண்டும் என்பதில் யாருக்கும் கருத்து வேறுபாடு இருக்காது என்று நம்புகிறேன். இன்றைக்கு நாடு பூராவுமே வறுமையில் தான் இருந்து கொண்டிருக்கிறது. இன்றைக்கு நம் நாட்டிலிருக்கின்ற உழவர்களுடைய நிலைமையை எடுத்துப்பார்த்தால் ஏறக்குறைய 100-க்கு 70 பேர்கள் உழவுத் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றார்கள். 70 பேர்கள் என்று சொன்னால் கொஞ்சம் கூடுதல் குறைவு இருக்கலாம். இருந்தாலும் சற்றேறக்குறைய 100-க்கு 70 பேர்கள் உழவுத்தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். பாக்கி 30 பேர்கள் வேறு தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள். இன்றைக்கு நாட்டிலுள்ள சராசரி வருமானத்தைப் பார்த்தால் ஒவ்வொரு நபருக்கும் வருஷம் ஒன்றுக்கு 280 ரூபாயிலிருந்து 300 ரூபாய் வரைக்கும் இருக்கிறது. இதில் உழவுத் தொழிலில் ஈடுபட்டுக் கொண்டிருப்பவர்களின் வருமானத்தை மாத்திரம் தனியாக கணக்கிட்டுப் பார்த்தால் வருஷம் ஒன்றுக்கு நபர் ஒன்றுக்கு ரூபாய் 120 முதல் 130 வரை தான் இருக்கிறது. ஆகவே விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுடைய எண்ணிக்கையை நாம் குறைத்தாக வேண்டியிருக்கிறது. இதற்கு ஏதாவது ஒரு விதத்தில் சீர்திருத்தம் செய்யவேண்டியிருக்கிறது. இன்றைக்கு விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருக்கும் 70 பேர்கள் என்கின்ற எண்ணிக்கையை குறைக்க வேண்டுமானால் வேறு விதமான தொழில்கள் நாட்டில் ஆரம்பிக்கப்பட வேண்டியது அவசியம். 100-க்கு 50 பேர்கள் தான் விவசாயத் தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்கின்ற நிலைமையை ஏற்படுத்த வேண்டும். இதற்காக மற்ற தொழில்கள் ஆரம்பிக்கப்பட வேண்டியது அவசியமாக இருக்கிறது. அவ்விதம் நூற்றுக்கு ஐம்பது பேர்களை வேறு தொழிலில் ஈடுபடுத்தியிருக்கின்றோம் என்றுள்ள நிலைமை ஏற்பட்டு விட்டால் அப்போது உழவர்களுடைய நிலைமையை உயர்த்தியிருக்கிறோம் என்று சொல்ல முடியும். அந்த முறையில் நம்முடைய தமிழ் நாட்டை எடுத்துக்கொண்டால் கோயம்புத்தூர் ஜில்லாவில் இந்த நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இதைப் பற்றிய புள்ளிவிவரங்கள் இதற்கு முன்னால் கொடுக்கப்பட்டிருக்கின்றது என்று நம்புகிறேன். அங்கு நூற்றுக்கு ஐம்பது பேர்கள் தான் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள், பாக்கி ஐம்பது பேர்கள் வேறு தொழிலில் ஈடுபட்டிருக்கிறார்கள் என்று புள்ளிவிரங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. இம்மாதிரிப்பட்ட ஒரு நிலைமையை தமிழ் நாடு பூராவுக்கும் ஏற்படுத்தி விட்டாலே நாம் பெரிய ஒரு சீர்திருத்தத்தை செய்திருக்கிறோம் என்று கூற முடியும். அதோடு இப்போது இருக்கும் விளைச்சலையும் நாம் அதிகப்படுத்த வேண்டியிருக்கிறது. விளைச்சலை அதிகப்படுத்துவதின் மூலமாகவும் ஓரளவு நமது வாழ்க்கைத்தரத்தை உயர்த்த முடியும். ஆகவே, இன்றைக்கு அதற்கான முயற்சிகள் எல்லாம் நடைபெற்றுவருகின்றன என்றிருந்தாலும்கூட விவசாயத்துறையில் இன்னும் அதிகமாக உற்பத்தியை பெருக்குவதற்கு இன்னும் என்ன முடிவு எடுக்கலாம் என்பதைப்பற்றி ஆலோசித்து அதற்கு ஒரு முடிவு எடுக்க வேண்டியிருக்கிறது. இன்றைக்கு நாட்டில் 100-க்கு 90 பேர்கள் சிறு சிறு நிலங்களை வைத்திருப்பவர்கள்தான். ஒரு சிலர் தான் அதிகப்படியான, பெருவாரியான நிலங்களை வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைமையில் சிறு சிறு நிலங்களை வைத்திருப்பவர்கள் மூலம் அதிகமான அளவில் உற்பத்தியை பெருக்க முடியுமா அல்லது பெரிய அளவில் நிலங்களைப் வைத்திருபவர்

[Sri C. Subramaniam] [9th February 1959

கள் மூலமாக உற்பத்தியை பெருக்க முடியுமா என்பதைப் பற்றி நாம் ஆலோசிக்க வேண்டியிருக்கிறது. அந்த அளவில் பார்க்கின்ற போது இன்றைக்கு இருக்கின்ற பெரும் பண்ணைகள் அவசியமா என்றும் யோசித்துப்பார்க்க வேண்டியிருக்கிறது. இதைப் பற்றி தான் நான் ஹைதராபாத்தில் வைத்து பேசினேன். நான் பேசியதைப் பற்றி சரியாகப் புரிந்து கொள்ளாமல் கனம் அங்கத்தினர் கோதண்டராமன் அவர்கள் (அவர்கள் இப்போது இங்கில்லை என்று தோன்றுகிறது) என்னுடைய பேச்சையும் புரிந்து கொள்ளாமல், அந்த பேச்சைப் பற்றி கனம் அண்ணாதுரை அவர்கள் விளக்கம் கேட்டதற்கு நான் கூறின விளக்கத்தையும் சரியாகப் புரிந்து கொள்ளாமல் வேறு விதமாக இங்கு குறிப்பிட்டிருப்பதாகத் தெரிகிறது. அதாவது இன்றைய தினம் நாட்டில் விஞ்ஞான அடிப்படையில் விவசாயம் செய்வதின் மூலமாகத் தான் நமது விவசாயத்தை பெருக்க முடியும் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியாது. அந்த முறையில் விஞ்ஞான முறைகளை பின்பற்றித்தான் நாம் விவசாயத்தை பெருக்கிக்கொள்ள வேண்டும் என்று சொன்னால் இன்றைக்கு நாட்டில் இரண்டு எக்கர், மூன்று எக்கர், பத்து எக்கர் என்று வைத்திருப்பவர்களினால் செய்ய முடியுமா என்று பார்த்தால் அவர்களினால் செய்ய முடியாது என்பது எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய விஷயம். சிறு சிறு நிலங்களை வைத்திருப்பவர்களினால் முன்னேற்றம் காண முடியும் என்பது இந்தக் காலத்திற்கு ஆகக் கூடிய காரியமல்ல. சிறு நிலச் சொந்தக்காரர்களுக்கு எல்லா விதமான வசதிகளைச் செய்து கொடுத்தாலும் கூட, அவர்களுக்கு எல்லா விதமான கடன் வசதிகளைச் செய்து கொடுத்திருந்தாலும் கூட இன்றைக்கு விவசாயத்துறையில் ஏற்பட்டிருக்கும் விஞ்ஞான ரீதியான மாறுதலை ஏற்படுத்த முடியுமா என்பதைப் பார்க்கும் போது அதில் சந்தேகம் தான் வருகிறது. அதிலும் விஞ்ஞான ரீதியான முறைகளை கைக்கொள்வதற்கு சிறு நிலச் சொந்தக்காரர்கள் பயப்படுகிறார்கள். இதன் மூலம் ஒரு வேளை விவசாயம் பொய்த்து விட்டால் என்ன செய்வது என்று சிலர் நினைக்கிறார்கள். இந்தப் புதிய முறைகளை எல்லாம் கொண்டு வந்து விவசாயம் செய்தால் என்னவாகும் என்று பீதியடைகிறார்கள். அந்தப் பீதியின் காரணமாக பலர், இந்த முறைகளை வேறு யாராவது முதலாவது செய்யட்டும் பின்னால் நாம் பார்த்துக்கொள்ளலாம் என்று ஒதுங்கி நின்று விடுகிறார்கள். அதே நேரத்தில் பெரிய பண்ணைகளை வைத்துக்கொண்டு இருப்பவர்கள், தங்களது நிலத்தில் கொஞ்சம் நஷ்டம் ஏற்பட்டாலும் பரவாயில்லை, மற்றப் பகுதிகளில் ஏற்படும் அதிக விளைச்சலைக்கொண்டு சரிகட்டிக் கொள்ளலாம் என்ற நினைப்புடன் அதிகமான அளவில் இம்மாதிரியான விஞ்ஞான ரீதியான முறைகளை கைக்கொள்கிறார்கள். அதன் மூலம் விவசாயத்தில் முன்னேற்றத்தையும் அடைந்து வருகிறார்கள். அதன் காரணமாக உற்பத்தி பெருகி வருகிறது. ஆகவே இன்றைக்கு பெரும் பண்ணைகள் இருக்க வேண்டியது அவசியம் என்று முடிவு எடுக்க வேண்டிய நிலையில் இருக்கிறோம். அதே நேரத்தில் விவசாயத்தில் ஈடுபட்டிருக்கும் ஆட்களின் எண்ணிக்கையும் குறைய வேண்டும் என்று நாம் நினைக்கிறோம். இவ்விதமான ஒரு நிலைமை வருகின்றபோது மற்ற தொழிலையும் அதிகமாக கொண்டு வருவதற்கும் பெரும் பண்ணைகள் இப்போது அவசியமாக இருக்க வேண்டியிருக்கிறது என்கிற முடிவக்கு வந்தாக வேண்டியிருக்கிறது. இதிலும் கருத்து கூறுகிறார்கள், இவ்விதம் பெரும் பண்ணைகள் இருக்க வேண்டும் என்ற வேறுபாடு இருக்கத்தான் செய்கிறது. அதாவது ஒரு சிலர் கூறுகிறார்கள், இவ்விதம் பெரும் பண்ணைகள் இருக்க வேண்டும் என்று சொல்லும் போது இருக்கின்ற நிலங்களுக்கு உச்சவரம்பு கட்ட வேண்டும் என்கின்ற பிரச்னையையே எடுத்துக்கொள்வானேன் என்று கேட்கின்ற ஒரு கேள்வி எழத்தான் செய்யும். இன்றைக்கு இருக்கக்கூடிய பெரும் பண்ணைகளை, எடுத்துப்பார்த்தால், பண்ணையார் பல பண்ணையாட்களை தன் கீழ் அமர்த்தி வேலை வாங்கிக் கொண்டிருக்கிறார்கள். இப்போது பண்ணையார் பண்ணையாட்கள் இவர்களிடையே இருக்கின்ற தொடர்பு நம் எல்லோருக்கும் தெரியும். அதே நேரத்தில் இதற்கு முன்னால் பண்ணையார் பண்ணையாட்களை எந்த விதத்தில் வைத்திருந்தார்கள் என்பதையும் நாம் அறிந்திருக்கிறோம். ஒரு சிறு தப்பு செய்துவிட்டால் கூட கட்டிவைத்து அடிக்கிற பழக்கம் இருந்து வந்தது. அதே போன்று தான் பண்ணை

9th February 1959] [Sri C. Subramaniam]

யாட்கள் ஏதாவது ஒரு சிறிய திருடு செய்துவிட்டால் அவர்களுடைய கையை கட்டி அதில் துணியைச் சுற்றி தீ வைத்திருக்கின்ற பழக்கம் இருந்திருப்பதை எல்லாம் என்னுடைய வக்கீல்வாழ்க்கையின் போது கேட்டிருக்கிறேன், பார்த்திருக்கிறேன். அம்மாதிரிப்பட்ட வழக்குகள் எத்தனையோ கோர்ட்டுகளுக்கு வந்திருக்கின்றன. அது யார் பக்கம் ஆஜரானேன் என்று கேட்டால், 12-10 p.m. எந்தப் பக்கம் வேண்டுமானாலும் ஆஜராகியிருக்கலாம். வக்கீல்கள் எந்தப் பக்கம் வேண்டுமானாலும் ஆஜராகலாம். அது ஒரு புறம் இருக்க, காலையில் 5 மணிக்கு வயலுக்குப் போக வேண்டுமானால் போகவேண்டும் உரிமையைப் பற்றிச் சொல்ல முடியாது. இன்னொன்று, நம்பிக்கை பரஸ்பரம் நம்பிக்கை இருந்து வந்தது. பண்ணையார் குடும்பத்தின் மீது பண்ணையாட்களுக்கு அக்கறை இருந்து வந்தது, நம்பிக்கை இருந்து வந்தது. அதே போல பண்ணையாட்களின் குடும்பத்தினர் மீதும் பண்ணையாருக்கு அக்கறை இருந்து வந்தது, பண்ணையாட்களின் குடும்பங்களும் நம் குடும்பங்கள் தான் என்ற முறையில் அன்பு அடிப்படையில் பரஸ்பரம் நம்பிக்கை அடிப்படையில் அக்கறை இருந்து வந்தது. இப்போது இருக்கக் கூடிய நிலைமையில் இந்தத் தொடர்பு தொடர்ந்து இருக்க முடியுமா ? இப்போது இருக்கிறதா ? என்று பார்த்தால் கிடையவே கிடையாது. இந்தத் தொழில், விவசாயத் தொழில், மற்ற தொழில்களைப்போல அல்ல. யந்திரத்தை ஓட்டுவதென்றால் காலையில் ஓட்ட வேண்டுமென்பதில்லை, 10 மணிக்கு ஆரம்பித்து 8 மணி நேரம் ஓட்டிவிட்டு, வெளியே போய்விடலாம். ஆனால், விவசாயம் அப்படி அல்ல. சில காரியங்களை அதிகாலையில் செய்ய வேண்டும், சில காரியங்களை மாலையில் செய்ய வேண்டும். காலம் தவறி விடக்கூடாது, நாள் தவறி விடக் கூடாது, பருவ காலத்தைச் சொல்லவில்லை. நாற்றுவிட வேண்டிய காலத்தில் விட வேண்டும், அதில் இரண்டு, மூன்று நாட்கள் கால தாமதம் ஏற்பட்டு விடக் கூடாது. சரியான காலத்தில் நாற்றுப் பிடுங்க வேண்டும், சரியான காலத்தில் நாற்று நட வேண்டும். சரியான காலத்தில் அறுவடை செய்ய வேண்டும், எதையும் இரண்டு, மூன்று நாட்கள் கூட கால தாமதத்தோடு செய்யக் கூடாது. தண்ணீர் பாய்ச்ச வேண்டிய காலத்தில் பாய்ச்ச வேண்டும், இல்லையென்றால் பயிரெல்லாம் கருகி விடும். இதெல்லாம் பரஸ்பரம் நம்பிக்கை இருக்கக் கூடிய முறையில் நடந்தால் தான் நடக்க முடியுமே தவிர, கிளர்ச்சி, அவநம்பிக்கை, முரண்பாடு என்ற முறையில் நடக்க முடியாது அந்த முறைகளில் பண்ணைகளை நடத்த முடியாது, இப்போது இருக்கக் கூடிய அமைப்பிலே, பெரும் பண்ணைகள் இப்போது இருப்பதைப் போலவே நடைபெறுமா என்றால் முடியாது. இன்றைக்குப் பல்வேறு கிளர்ச்சிகள் ஆரம்பிக்கப்பட்டு குழப்ப நிலையில் இருந்து வருகிறோம், முன்பு இருந்த தொடர்புகள் அறுந்து விட்டன. "முன்பு பெரும் பண்ணைகள் இருந்து வந்தனவே, இப்போது கூட நல்ல உற்பத்தி இருக்கிறதே, ஆகையால் அவர்களே நடத்தட்டுமே" என்றால், அது காலப் போக்கிற்கு ஒத்ததாக இருக்க முடியாது, முரண்பாடு உள்ளதாக இருக்கும். இப்போது எதிர்வாதம் செய்கிறார்கள், சந்தேகப்படுகிறார்கள், மக்களுக்கு மக்கள் ஒப்பந்தம் செய்துகொண்டு செய்வதில் தலையிட்டால் அது எங்கு கொண்டு போய் விடுமோ என்று. இந்தத் திக்கை நோக்கி ரயிலை நிறுத்தியாயிற்று, இனி அதைத் திருப்பிக் கொண்டு வருவது முடியாத காரியம், இனி யாராலும் முடியாத காரியம். அப்படிப்பட்ட ஒரு முதல் படி தஞ்சை ஜில்லா பண்ணையார் பாதுகாப்புச் சட்டம். முதலில் சட்டம் செய்தோமே 60—40 என்று, பண்ணையாட்களுக்கு உரிமை கொடுத்தோமே, அப்போதே முதல் அடி எடுத்து வைத்தாகி விட்டது. இப்போது ராஜாஜி கூட குறை சொல்லுவதாகப் பார்த்தேன். அவர் அப்போதே யோசித்திருக்க வேண்டும், ஆரம்பத்திலிருந்தே இது எங்கு போய் நிற்கும் என்று யோசித்திருக்க வேண்டும், அப்படி யோசித்திருந்தால் அதைக் கூடச் செய்திருப்பாரோ என்னமோ எனக்குத் தெரியாது. நாம் ஒரு திசையை நோக்கிப் போகிறோம், போய்க் கொண்டிருக்கிறோம், பின்னுக்குப் போக முடியுமா என்று யோசித்துப் பார்க்க வேண்டியிருக்கிறது. ஒரு திக்கை நோக்கிப் போக ஆரம்பித்தாகி விட்டது, அதற்காக ஒவ்வொரு படியாகச் செல்லவேண்டுமென்று முதலில் தஞ்சைக்குப் பொருந்தும்படியாக ஒரு சட்டத்தைச் செய்தோம். தஞ்சைக்கு மட்டும் செய்தால் மற்ற பகுதிகளுக்கு அது போக வேண்டாமா ? . முதலில் 60—40 என்று செய்தோம், அதோடு நிற்க

[Sri C. Subramaniam] [9th February 1959

வேண்டுமா அல்லது 75—25 என்று இருக்க வேண்டுமா, அல்லது 80—20 என்று இருக்க வேண்டுமா, அவர்கள் என்றும் வேலை செய்து கொண்டுதான் இருக்க வேண்டுமா, அவர்கள் சொந்தக்காரர்களாக ஆக வேண்டாமா என்று இப்படியே போய்த்தான் ஆகுமே தவிர, விட்ட அம்பு, எந்த இடத்தை நோக்கிக் குறி பார்த்து எய்தோமோ அந்த இடத்தில் போய்த் தைத்தவுடன் தான் ஓயுமே தவிர, பாதி சென்றதும் அதைத் திரும்பப் பெற முடியாது. ஆகையால் இது எய்த அம்பு, என்பதை எல்லோரும் தெரிந்து கொள்ளவேண்டும். ஆகையால் தான் இன்றைக்கு, நிலச் சீர்திருத்தம் என்று சொல்லும்போது பெரிய பண்ணைகள் என்றால் தனிப்பட்டவர்கள் பெரிய பண்ணைகளை நடத்துவதன் மூலமாகத் தான் உற்பத்தியைப் பெருக்கி விட முடியும் என்று நினைப்பது தவறு. பெரிய பண்ணைகள் இருக்க வேண்டும். தனிப்பட்டவர்களுக்கு உரிமை இருக்கக் கூடாது என்றால், எந்த முறையில் ஒரு அமைப்பை ஏற்படுத்திக் கொள்ள முடியும் என்று பார்க்கும்போது, பெரிய பண்ணைகளாக நடப்பது மட்டு மல்லாமல் இன்றைக்குச் சிறு பண்ணைகளாக இருந்தால், நாளா வட்டத்தில் பெரிய பண்ணைகளாக எந்த முறையில் நடத்த வேண்டுமென்று ஆராய்ந்து பார்க்க வேண்டும். அந்த முறையில் தான் இதில் கூட்டுறவு இயக்கத்திற்குப் பெரும் பங்கு இருக்கிறது என்று சொல்லப்படுகிறது. எல்லோரும் சேர்ந்து கூட்டாக, ஒன்றாகச் சேர்ந்து, பண்ணையாகச் செய்வது என்று இப்போது நினைக்கப்படுகிறது. இப்போது இதைப் பற்றிப் பலர் குறை கூறி வருகிறார்கள். இப்போது நாம் எடுத்துக் கொள்ளக் கூடிய திட்டம் எல்லோரையும் ஒன்றாகச் சேர்த்து கூட்டுப் பண்ணை வைக்க வேண்டும் என்பது அல்ல. கூட்டுறவு முறையில் இன்றைக்கு விவசாயிகளுக்கு எல்லா வசதிகளையும் செய்து கொடுக்க உரிய முறையை உடனடியாகக் கையாண்டாக வேண்டியிருக்கிறது, சிறு உழவர்களைப் பொருத்த வரையிலே. அவர்களுக்கு உடனடியாக இதற்குக் கடன் வசதி கிடைக்க வழிகளைச் செய்ய வேண்டும் ; நல்ல விதைகள் கிடைக்க வழி செய்ய வேண்டும் ; நல்ல உரம் கிடைக்க வழி செய்ய வேண்டும் ; நல்ல விவசாயக் கருவிகள் கிடைக்க வழி செய்ய வேண்டும் ; நல்ல நீர்ப்பாசன வசதிகளெல்லாம் செய்து கொடுக்கப்படவேண்டும். இவைகளையெல்லாம் அவர்களுக்கு இப்போது சர்க்கார் இலாகாக்கள் மூலமாக எல்லாவற்றையும் செய்து வருகிறோம். இதில் என்ன குறையென்றால், எந்தக் காலத்தில் கடன் வேண்டுமோ அந்தக் காலத்தில் கிடைப்பதில்லை விதைக்க வேண்டியகாலத்தில் விதை கிடைப்பதில்லை, அறுவடை காலத்தில் விதை கிடைக்கிறது ; உரம் போட வேண்டிய காலத்தில் கிடைக்காமல், அறுவடை தீர்ந்த பிறகு, வேளாண்மை இல்லாத போது, வருகிறது என்ற குறைகள், புகார்கள் வருகின்றன. அவ்வப்போது வேண்டியதை உடனடியாக உணர்ந்து, வேண்டியவைகளை உடனடியாக வினியோகம் செய்யக் கூடிய அமைப்பை நாம் ஏற்படுத்தவில்லை. இங்கேயிருந்து, சென்னையில் இருப்பவர்கள் முடிவு செய்து, அல்லது ஜில்லாத் தலை நகரத்தில் இருப்பவர்கள் முடிவு செய்து, அவைகளெல்லாம் போக வேண்டியிருக்கிறது. அதனால் காலம் ஆகி விடுகிறது. ஆகையால் தான் இன்றைக்கு கிராம அடிப்படையில் கிராம மக்களின் அடிப்படையில், எந்தெந்த நேரத்தில் என்னென்ன வேண்டுமோ, அவைகள் கிடைக்க வழி செய்ய வேண்டும் என்ற அடிப்படையில் ஒரு அமைப்பை ஏற்படுத்த வேண்டியிருக்கிறது. கிராம மக்கள் எல்லோரும் சேர்ந்திருப்பதானது கூட்டுறவு அமைப்பு. ஆகையால், கூட்டுறவு என்று சொல்லும் போது கூட்டுப் பண்ணை என்ற அடிப்படையில் இல்லை. எல்லா வசதிகளையும், எல்லாச் சலுகைகளையும், இதில் ஈடுபட்டுள்ளவர்களுக்குக் கொடுக்க வேண்டுமென்றால் இந்தக் கூட்டுறவின் மூலமாகத் தான் செய்ய முடியும். கூட்டுறவில் பல குறைகள் இருக்கின்றன என்று கனம் அண்ணாதுரை சொன்னார்கள். அவர் சொல்வது மட்டுமல்ல. நமது பிரதமர் நேரு கூட ஒரு இடத்தில் சொல்லியிருக்கிறார், இன்றைக்கு இருக்கக் கூடிய அமைப்பிலே, இன்றைக்கு இருக்கக் கூடிய சட்ட அமைப்பிலே, இது முடியாத காரியம், இதை மாற்றியாக வேண்டும் என்று. இதை மாற்றுவதற்காகப் பரிசீலனை செய்து வருகிறோம். எந்த முறையில் மாற்றியாக வேண்டும், சீர்திருத்தம் எப்படிச் செய்ய வேண்டும், சட்ட அமைப்பானது எப்படி இருக்க வேண்டும் என்பதைப் பற்றியெல்லாம் இப்போது பரிசீலனை செய்து வருகிறோம். கூட்டுறவு மூலமாகத் தான்

9th February 1959] [Sri C. Subramaniam]

உடனடியாகச் செய்து கொடுக்க முடியும். இந்த வசதிகளையெல்லாம் சரியான முறையில் இதன் மூலமாகத் தான் கொடுக்க முடியுமா என்று குறைகள். சொல்லப் பட்டதே தவிர, வேறு எந்த அமைப்பு இருக்க வேண்டும் ? எவ்வளவு தான் யோசித்தாலும் வேறு அமைப்பு இருக்க முடியாது. குறைகள் இருந்தாலும் அவைகளையெல்லாம் நீக்கி விட்டு, நமது அனுபவங்கள் மூலமாகக் குறைகளையெல்லாம் போக்கி மேலும் மேலும் கூட்டுறவு பலப்படுத்துவதன் மூலமாகத் தான் அந்த வசதிகளையெல்லாம் செய்து தர முடியும். ஒரு காலத்திலாவது, 10 வருஷத்திலோ அல்லது 15 வருஷத்திலோ, 20 வருஷங்கள் ஆனாலும் பரவாயில்லை, உழுகின்றவர்களாக ஒன்று சேர்ந்து விவசாயம் செய்யக் கூடிய நிலைமையை ஏற்படுத்தியாக வேண்டுமென்ற முறையில் இந்தக் கூட்டுறவு இயக்கம் அமைய வேண்டியிருக்கிறது. கூட்டுறவில் வசதிகள் என்று சொல்லும் போது பொதுவாகச் சில வேலைகளைச் செய்து கொடுக்க முடியும். இரண்டு ஏக்கர் நிலம் வைத்திருப்பவர்கள் மாடுகளை வைத்துக் கொள்ள முடியாது. வத்தலும், தொத்துலுமாக வைத்திருந்தால் உழுவது கஷ்டமாக இருக்கிறது. நல்ல தரமுள்ள மாடுகளாகக் கிடைக்க, டிராக்டர் வைத்துக் கொள்ளக் கூடிய இடத்தில் டிராக்டர் வைத்துக் கொள்ள வேண்டிய வசதிகளெல்லாம் எல்லோருக்கும் செய்து கொடுக்க முடியும்.

அதே மாதிரி, நல்ல விதைகளைத் தயார் செய்து கொடுப்பதற்குப் பொதுவான பணியை ஏற்றுக்கொள்ள முடியும். நல்ல நீர்ப்பாசன வசதியைச் செய்து கொடுப்பதற்குக் கூட பொதுவான ஏற்பாடுகளைச் செய்து கொள்ள முடியும். ஒரு கிணறு நல்ல கிணறாக இருக்கும் ; அதில் பத்து ஏக்கருக்குத் தண்ணீர் பாய்ச்சக்கூடிய அளவுக்குத் தண்ணீர் இருக்கலாம் ; ஆனால், அது இரண்டு ஏக்கரா பட்டா நிலத்திற்குள்ளே இருக்கும் ; அந்த இரண்டு ஏக்கராவைத் தாண்டித் தண்ணீர் கொண்டுபோக முடியாது. 12–20 p.m.
ஆகவே தான், பொதுவாக இருக்கும் நீர்ப்பாசன வசதிகளை நல்ல முறையிலே இந்தக் கூட்டுறவு இயக்கத்தின் மூலமாக எல்லோரும் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். பொது வசதிகள் பல செய்து கொடுப்பதன் மூலமாக, பொதுவாக அவைகளைப் பயன்படுத்திக் கொள்வது மூலமாக, உண்மையிலேயே நமக்கு நல்ல பலன் ஏற்படும் என்ற உணர்ச்சி மக்களிடத்திலே ஏற்படும்போது, அந்த அனுபவம் ஏற்படும்போது, சிறிது சிறிதாக ஒன்றாக இணைக்க முடியும் என்ற நம்பிக்கை நமக்கு இருக்கிறது. ஏனென்றால், மனித சக்தி வளருகிறது, மனித அறிவு வளருகிறது, மனிதன் அனுபவத்தின் மூலமாக உயர்கிறான் என்ற நம்பிக்கை இருக்கிற வரையிலே, இது உண்மையான நல்ல அனுபவமாக இருக்குமானால், எல்லோரும் இந்த அனுபவத்தை ஏற்றுக்கொண்டு, மேலும் மேலும் ஒன்றாகக்கூடிய நிலைமைக்கு வருவார்கள் என்ற அடிப்படையிலே, கூட்டுறவு வசதிகள் செய்ய ஆரம்பித்து, பொது வசதிகளாக மாறி, கடைசியில் பொதுப் பண்ணைகளாக மாற வேண்டும் என்ற லட்சியத்திலே அமைந்து, சிறு பண்ணைகளாக இருப்பவை பெரும் பண்ணைகளாக அமைந்து, அதன் மூலமாக உற்பத்தியைப் பலவிதமாகப் பெருக்க வேண்டும் என்ற அடிப்படையில் தான் இன்று யோசனை செய்து கொண்டிருக்கிறோம். இதுதான் நிலச் சீர்திருத்தமே தவிர, பங்கு போடுவது மட்டும் நிலச் சீர்திருத்தம் அல்ல என்று நான் வலியுறுத்துகிறேன். இதிலே பல தடைகள் ஏற்படும் என்ற சந்தேகத்தையும், குறைகளையும் எடுத்துச் சொல்லி வருகிறார்கள். அவைகளையெல்லாம் ஆராய்ந்து பார்த்து, நல்லதொரு திட்டத்தை வகுத்துக்கொண்டு, அந்த அடிப்படையிலே நாம் முன்னேறிச் செல்வதற்கு எல்லா விதமான முயற்சிகளையும் செய்ய வேண்டும். இதைப்பற்றித் தான் பரிசீலனை நடந்து கொண்டிருக்கிறது. அதற்கேற்ப கூட்டுறவு இயக்கத்தை வலுப்படுத்துவதற்காக, கூட்டுறவு இயக்கத்தைப் பரவலாக்குவதற்காக எல்லா விதமான முயற்சிகளும் எடுத்துக் கொள்ளப்பட்டு வருகின்றன என்ற கருத்தையும் இங்கே தெரிவித்திருக்கிறார்கள்.

SRI N. K. PALANISAMI : பெரிய பண்ணைகளைப்பற்றி........

*THE HON. SRI C. SUBRAMANIAM : பெரிய பண்ணைகளைப்பற்றி நான் முன்பே சொன்னேன். தனிப்பட்டவர்கள் பெரிய பண்ணையாக வைத்திருந்து, பண்ணையாட்களை வைத்து, இன்றைக்கிருக்கும் முறைகளிலே தொடர்ந்து நடத்திக்கொண்டு போக முடியாது. ஆகையால், அவைகளை

எடுத்ததற்குப் பிற்பாடு அங்கேயும் உடனடியாக கூட்டுப் பண்ணையை வைக்க வேண்டிய அவசியம் இல்லை. "டெனன்ஸி பார்மிங்" என்ற முறையிலே கூட்டுறவாக வைத்து நடத்த முடியும் என்பதை நாம் ஓரளவு உணருகிறோம். அந்த முறையிலே செய்ய வேண்டும் என்று சொல்லும் போது அதிலேயும் கூட ஒரு சிலருக்குச் சந்தேகம் வந்திருக்கிறது. "நிலத்திற்கு உச்ச வரம்பு கட்டிய பிற்பாடு, பாக்கியிருக்கும் நிலத்தை எடுத்து ஏன் பஞ்சாயத்திலே கொண்டுபோய் கொடுக்க வேண்டும்?" என்று சிலர் சந்தேகப்பட்டார்கள். பஞ்சாயத்தினிடம் கொடுக்க வேண்டியது எதற்காக என்றால், பாக்கியிருக்கும் இந்த நிலங்களை மறுபடியும் தனிப்பட்டவர்களுக்கு சிறு சிறு நிலமாகப் பிரித்துக் கொடுத்தால், எந்தத் திசையை நோக்கிப் போக வேண்டுமென்று நாம் விரும்புகிறோமோ, அதற்கு எதிர்த் திசையில் தான் போக முடியும்.

இப்பொழுது கொடுத்திருக்கும் நிலத்தை கம்யூனிட்டிக்கே, அதாவது சமூதாயத்திற்கே சேர்ந்ததாகச் செய்ய வேண்டும் என்ற முறையிலே யோசித்துக் கொண்டிருக்கிறோம். கம்யூனிடி என்று சொல்லும்போது, இன்றைக்கு கிராமத்திலே இருக்கும் சமூதாயத்திற்குச் சட்ட பூர்வமான பிரதி நிதியாக இருப்பது பஞ்சாயத்து. அதனிடத்திலே ஒப்புவிக்கிறோம். அவர்கள் பண்ணை நடத்துவது இல்லை. அதற்குக் கூட்டுறவுச் சங்கங்களை ஏற்படுத்தி, அந்தக் கூட்டுறவுச் சங்கத்திலே, விவசாயம் செய்யக் கூடியவர்கள் எல்லோரையும் சேர்த்து, அவர்கள் மூலமாக கூட்டுறவுப் பண்ணையை அங்கே நடத்த வேண்டும் என்பது. கூட்டுறவுப் பண்ணை நடத்த வேண்டும் என்று சொன்னவுடனேயே, எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து கூட்டுப் பண்ணையை வைக்க வேண்டிய அவசியம் இல்லை.

பொதுத் தேவைகளை எல்லோரும் ஒன்றாகச் சேர்ந்து பூர்த்தி செய்து கொள்ள வேண்டும்; உள்ள வசதிகளை எல்லோரும் பகிர்ந்து கொள்ள வேண்டும். அதற்காகப் பொதுவான நீர்ப்பாசன வசதி செய்து கொடுப்பது, விதை வசதிகளைச் செய்து கொடுப்பது, பயிர்களுக்கு ஏற்படும் நோய்களைத் தடுப்பதற்கான மருந்துகளை வழங்குவது போன்றவைகள் பொதுவான ஏற்பாடாக இருக்கும். பூச்சி மருந்து அடிக்கும்போது ஒரு கிராமத்தில் பூராவும் ஏற்படும் நோயைத் தடுக்கக் கூடிய முறையில் நடவடிக்கை எடுத்தால் தான் பூச்சித்தொல்லை நீங்கும். அப்படியில்லாமல், ஒருவன் தன் வயலுக்கு மருந்து அடிக்கிறான் என்றால், அந்தப் பூச்சிகள் அடுத்த வயலுக்குப் போய்ப் புகுந்துகொள்ளும். ஆகவே, பரவலாக, எங்கெங்கே நோய் இருக்கிறதோ அங்கெல்லாம் தடுப்பு நடவடிக்கை எடுத்தால் தான், உண்மையான பலன் கிடைக்க முடியும். இவைகளைப் பரவலான முறையில், பொதுவான முறையில், கூட்டுறவுப் பண்ணைகள் மூலமாகச் செய்யும் போது இந்தப் பொது வசதிகளைச் செய்து கொடுத்து விட்டு, கூட்டு உணர்ச்சி ஏற்படுகிற வரையிலும், சிறு சிறு நிலமாக அவர்கள் பயிர் செய்வதற்குத் தனித் தனியாகப் பிரித்துக் கொடுத்தும் கூட ஏற்பாடு செய்ய முடியும் என்ற முறையிலே, கடைசியாக கூட்டுப் பண்ணையாகச் செய்ய வேண்டும் என்ற அடிப்படையிலே தான் இன்றைக்கு உச்ச வரம்பு கட்டியதற்குப் பிற்பாடு கிடைக்கக்கூடிய நிலங்களைப் பஞ்சாயத்திடம் சட்ட பூர்வமாக ஒப்புவித்து, ஆனால், அதிலே விவசாயம் செய்வது கூட்டுறவு சங்கங்கள் மூலமாகத் தான் இருக்க வேண்டும் என்ற ஒரு முடிவு எடுக்கப்பட்டிருக்கிறது. இதிலே விரிவாக ஆலோசனை செய்து, இருக்கும் பல்வேறு நுணுக்கங்களை ஆராய்ந்து, இந்தத் திட்டம் வகுக்கப்படும் என்று தெரிவித்துக்கொள்கிறேன்.

கூட்டுறவு முறையில் பயிர் வைக்க வேண்டுமென்றால், எவ்வளவு ஏக்கர் நிலம் இருந்தால் சௌகரியமாக வைக்க முடியும் என்ற கேள்வி எழுகிறது. ஏதோ பத்து ஏக்கரை வைத்து கூட்டுறவுப் பண்ணை வைக்க முடியாது. குறைந்தபட்சம் ஐம்பது ஏக்கருக்கு மேலேயிருக்கும் நிலங்களை கூட்டுறவுப் பண்ணையாக வைக்கலாம் என்பது என்னுடைய கருத்து. ஆனால், இதை நிர்ணயிக்கும்போது நிலத்தின் தரம், அதிலிருந்து கிடைக்கிற வருமானம் முதலிய பல அம்சங்களைக் கணக்கிலெடுத்துத்தான் முடிவு செய்யவேண்டும். தாராபுரம் தாலூகாவைப் பார்த்தால் ஒரே பொட்டல் காடாக இருக்கும். அதேபோல், இராமனுதபுரம் ஜில்லாவை எடுத்துக் கொண்டால், 50 ஏக்கராவிற்கு 100 ரூபாய் வரும்படி கூட

9th February 1959] [Sri C. Subramaniam]

வராது. ஆகவே, நிலத்தின் தரத்தைப் பொறுத்தும், இடத்தைப் பொறுத்தும், அங்குள்ள வசதியைப் பொறுத்தும் என்று நான் தெரிவித்துக் கொள்கிறேன்.

விவசாயத்துக்கு அடுத்தபடியாய், தொழிற் துறையை எடுத்துக்கொள்வோம். இன்றைககுத் தொழிற் துறையிலே பல்வேறு முயற்சிகளை எடுத்து வருகிறோம். அந்த முயற்சிகள் மூலமாக பல நல்ல பலன்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதை யாரும் மறுக்க முடியாது. நல்ல வேளையாக திரு. அண்ணாதுரை அவர்கள் வட நாடு சென்று பார்த்து வந்திருக்கிறார்கள். எந்த எந்த இடங்களுக்கு அவர்கள் போனார்கள் என்று தெரியாது. அவர்கள் ஒப்புக்கொள்ளாவிட்டாலும் கொஞ்சமாவது உணர்ந்திருப்பார்கள் என்று நான் நினைக்கிறேன். தொழில் முன்னேற்றத்திலே நாம் அவ்வளவு மோசமாக இல்லை ; ஓரளவு நாம் முன்னணியில் இருக்கிறோம் என்பதை அவர்கள் ஒப்புக்கொள்ளாவிட்டாலும், மனதிலாவது கொஞ்சம் உணர்ந்திருப்பார்கள் என்ற நம்பிக்கை ஏற்பட்டிருக்கிறது.

அது ஒரு புறமிருக்க, இன்றைக்குப் பல தொழில்கள் ஏற்பாடு செய்யப்பட்டு, நடைபெற்றும் வருகின்றன. ஆனால், பெரும் தொழில்களை நாம் ஏற்பாடு செய்ய முடியாமலிருப்பதற்கு முக்கிய காரணம் நமக்கு நிலக்கரி இல்லாதது. ஆகையால், நெய்வேலித் திட்டம்தான் இவைகளுக்கெல்லாம் அடிப்படையாக இருக்க வேண்டும் என்று கவர்னர் உரையிலேயே சொல்லியிருக்கிறார்கள். நெய்வேலித் திட்டத்தைப் பற்றிச் சொல்லும்போது, இதை யாரோ மத்திய அரசாங்கத்துக்கு ஒப்புவித்து விட்டார்கள், அது நமக்கு இல்லாமல் போய்விட்டதே என்று சில பேர்கள் சொன்னார்கள். அஸ்ஸாம் மாகாணத்திற்கு எண்ணெய் சுத்திகரிப்புத் தொழிற்சாலை சொந்தமாக இருக்கிறதென்றும், இன்னொரு இடத்தில் இன்னொருத் தொழிற்சாலை சொந்தமாக இருக்கிறதென்றெல்லாம் சொல்லப்பட்டது. இன்னொருவர் என்ன செய்கிறாரோ அதையே நாமும் செய்ய வேண்டும் என்ற அவசியம் இல்லை. அவர்கள் சொன்னவை தவறான உதாரணங்கள். ஏனென்றால், அம்மாதிரி நடக்கவில்லை. நெய்வேலித் திட்டத்தை நாமே எடுத்து நடத்த முடியுமா, அப்படி எடுத்து நடத்தினால், அதனால் நமக்குப்பலன் வந்திருக்குமா என்பதை சற்று யோசித்துப் பார்க்கவேண்டும். எழுபது கோடி ரூபாய் செலவழித்துத்தான் முதல் படி திட்டத்தை நிறைவேற்ற வேண்டியவர்களாக இருக்கிறார்கள். முதலிலே இரண்டரை லட்சம் கிலோவாட் மின்சார சக்தியும், ஒரு லட்சம் டன் உரமும், அதற்கு மேல் கார்ப்பனைஸிங் அண்டு ப்ரிக்கெட்டிங் செய்யவேண்டும். இந்த மூன்று பொருள்களைத் தயாரிக்கக்கூடிய திட்டங்களை நிறைவேற்றுவதற்கு எழுபது கோடி ரூபாய் செலவு செய்யவேண்டும். அந்தத் திட்டத்தை நம்முடைய ராஜ்ய அரசாங்கமே எடுத்து நடத்துவதாகச் சொல்லியிருந்தால் ரொம்ப சந்தோஷமாக அவர்கள் நம்மிடம் அதை விட்டிருப்பார்கள். அப்படிச் செய்திருந்தால் அந்த எழுபது கோடி ரூபாய்ச் செலவு நம் கணக்கில் சேர்ந்திருக்கும். அவ்வளவு தொகையை நம்முடைய ராஜ்ய அரசாங்கம் ஏற்றுக்கொண்டிருக்க முடியுமா என்று யோசித்துப் பாாகக வேண்டும். நாகார்ஜுனசாகர் திட்டத்தை ஆந்திர அரசாங்கமே எடுத்து நடத்துவதாகச் சொன்னார்கள். மத்திய அரசாங்கமும் அதற்கு சம்மதத்தைத் தெரிவித்துவிட்டார்கள். அந்த அளவுக்கு ஆந்திர அரசாங்கத்தின் தொகை குறைநதுவிட்டது. அந்தத் திட்டத்தை எப்படி நடத்துவது என்று இப்பொழுது அவர்கள் யோசிக்க வேண்டிய நிலைமையில் இருக்கிறார்கள். நான் ஏதோ ஆந்திர அரசாங்கத்தைக் குறை சொல்வதாற்காகச் சொல்லவில்லை. நான் ஏன் இதைக் குறிப்பிடுகிறேன் என்றால், ஒரு ராஜ்யத்திலுள்ள தண்ணீரோ, நிலக்கரியோ அந்தந்த ராஜ்யத்திலேதான் உபயோகப்படும். அந்தத் திட்டத்தை ஆந்திர ராஜ்ய அரசாங்கம் எடுத்தக் கொண்டதால், மற்ற பல திட்டங்களை அவர்கள் எடுத்துக்கொள்ள முடியாமல் போய்விட்டது.

இன்றைக்கு வெளிநாட்டிலேயிருந்து இயந்திரங்கள் வரவேண்டுமென்று சொல்லும்போது, அவைகளை வரவழைக்கவேண்டிய பொறுப்பு மத்திய கேந்திரத்திலே இருப்பதால், நெய்வேலி போன்ற பெரிய திட்டம் மத்திய அரசாங்கத்தாருடைய பொறுப்பில் நிறைவேறுவதுதான் சரியான காலத்தில் திட்டம் முடிவடைவதற்கு உதவியாயிருக்கும். அப்படியில்லாமல், ராஜ்ய

[Sri C. Subramaniam] [9th February 1957

அரசாங்கத்தின் பொறுப்பில் இருக்குமானால், இயந்திரங்களை வெளிநாடு களிலிருந்து வரவழைப்பது சம்பந்தமான முதல் இடத்தைப் பெறுவதற்காக மற்ற சலுகைகளைப் பெறுவதற்கோ மற்ற ராஜ்யங்களோடு சேர்ந்து நாமும் 'க்யூ' வரிசையில் நிற்கவேண்டி ஏற்படும். நெய்வேலித் திட்டத்திலிருந்து இப்பொழுது லாபம் வர ஆரம்பிக்கவில்லை. எந்தத் திட்டத்திலிருந்தும் உடனடியாக லாபம் வந்துவிடாது. நெய்வேலித் திட்டத்தைப் பொறுத்தவரையில் பத்து வருஷம் ஆனபிறகுதான் லாபம் வருகிற நிலைமை ஏற்படும் என்று நான் கருதுகிறேன். திட்டம் தொடர்ந்து நடந்துகொண்டே போகப்போகத்தான் இன்னும் பல பலன்கள், பல நன்மைகள் ஏற்பட இருக்கின்றன. 70 கோடி ரூபாயைச் செலவழித்ததற்குப் பிற்பாடு அதிலே கொஞ்சம் வரும்படி வர ஆரம்பிக்கும். ஆரம்ப காலத்திலே வட்டி கூட கட்டாமல் இருக்கும். பின்னால்தான் லாபம் வரும். இப்படிப்பட்ட நிலைமையில் ஒரு பெரிய திட்டத்தை இன்னொருவர் கையிலே கொடுத்து நடத்தும்படிச் சொல்வது நல்லது. நாமே எடுத்துக்கொண்டு, ரூபாய் இல்லை, இயந்திரங்கள் கிடைக்கவில்லை, அன்னியச் செலாவணி போதவில்லை என்று சொல்லிக்கொண்டு கஷ்டப்படுவதினால் நன்மை ஏற்பட முடியாது. இன்றைக்குக் குறை சொல்லலாம். காங்கிரஸ்காரர்கள் காட்டிக்கொடுத்துவிட்டார்கள், மற்றவர்களுக்கு விட்டுவிட்டார்கள் என்று. அப்படிக் குறை சொல்லுகிறவர்கள் குறை சொல்லட்டும். ஆனால், நெய்வேலித் திட்டம் உருப்படியானதற்குப் பிற்பாடு, பிற்கால வாரிசுகள் நம்மை வாழ்த்துவார்கள், சற்று புத்திசாலித்தனமான காரியம் செய்தார்கள் என்று சொல்வார்கள் என்பதில் சந்தேகம் இல்லை. இப்பொழுது வேண்டுமானால், ஒருவரையொருவர் குறை சொல்லவேண்டும் என்பதற்காக, நெய்வேலித் திட்டம் நிறைவேறிக்கொண்டிருக்கிற நேரத்தில், யாரோ வெளியிலேயிருந்து வந்து செய்கிறார்கள் என்று பேத உணர்ச்சியை ஒருசிலர் ஏற்படுத்திக்கொண்டிருக்கலாம். இந்தத் திட்டத்தை எடுத்துக்கொள்ளும்போதே இதுபற்றி பேச்சு வார்த்தை நடந்தது. அதுபற்றி "ரிகார்டு" செய்து வைத்திருக்கிறார்கள். இந்தத் திட்டத்திற்காகச் செலவழித்திருக்கும் பணத்தை நாம் எந்தச் சமயத்தில் கொடுப்பதற்குத் தயாராயிருந்தாலும், அப்பொழுதே அதை நம்மிடத்தில் ஒப்புவிப்பதற்கு அவர்களுக்கு எந்த விதமான ஆட்சேபனையும் இருக்காது என்று நான் நம்புகிறேன். அந்தத் திட்டத்தை நாம் எடுத்துக்கொள்வதா இல்லையா என்பது ஒருபுறம் இருக்க, அங்கே நிலக்கரி எடுக்கப்படுகிறதென்றால், அது வடக்கேயோ எங்கேயோ போவது இல்லை. ஏனென்றால், வடக்கே இதைவிட நல்ல நிலக்கரி கிடைக்கிறது. நாம் உற்பத்தி செய்யப் போகிற மின்சாரத்தை வேறு எங்கோ கொண்டு போவதல்ல. ப்ரிக்கெட்டுகளையோ, உரத்தையோ கூட இங்கேதான் வழங்கப்போகிறார்கள். ஆகையால், இங்கு எல்லாவிதமான காரியங்களையும் நாமேதான் செய்துகொள்ளவேண்டும். மற்றவர்கள் வந்து செய்யக்கூடாது என்று கருதினால், அது நம்முடைய அரசியலமைப்புக்கும் இந்தச் சர்க்காருக்கும் புறம்பாக இருக்கும். மத்திய சர்க்கார் செய்து வைத்தாலுங்கூட, நன்மைகள் நமக்குத்தான் அமைகின்றன என்பதை உணர்ந்து கொண்டு, யாரோ வெளியிலே உள்ளவர்கள் இங்கே வந்து திட்டத்தைச் செய்கிறார்கள் என்ற கிளர்ச்சியைக் கைவிடும்படியாகக் கேட்டுக்கொள்கிறேன். மற்றவற்றைப்பற்றி கிளர்ச்சிகள் இருந்தாலும், தொழிலைப் பற்றிய கிளர்ச்சிக்கு இடமே இல்லை. அங்கு நம்முடைய மக்கள்தான் உழைக்கக் கூடிய நிலைமை இருக்கிறது. இன்னும் எல்லாவிதமான அதிகாரிகளையும் நாம்தான் கொடுக்கவேண்டுமென்று அவர்கள் கேட்கிறார்கள்.

12-30 p.m. போதுமான என்ஜினீயர்களையும், நிபுணர்களையும் நம் சர்க்காரில் இருந்து கொடுக்கக்கூடிய நேரத்தில் மத்திய சர்க்கார் மற்ற இனங்களை ஏற்று நடத்திக்கொண்டு வருகிறார்கள். அந்த முறையில் இந்த நெய்வேலி திட்டமானது மத்திய சர்க்காரால் கார்ப்பரேஷனாக நடத்தப்பட்டு வருவதால் நன்மையே தவிர, எந்த விதமான பாதகமும் ஏற்பட்டுவிடாது. அதைப் பற்றிச் சரிவர உணர்ந்து கொள்ளாதவர்கள்தான் அவ்வாறு குறை கூறுவார்கள் என்பதை வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். நெய்வேலித் திட்டமானது மற்றத் திட்டங்களைப்போல் விரைவில், கால வரையறைக்குள் நிறைவேற்றப்பட வேண்டாமா என்று கேட்கப்பட்டது. பிலாய்த்

9th February 1959] [Sri C. Subramaniam]

திட்டம் என்று சொன்னால், அங்கு யந்திரங்கள் பூட்டுவது மட்டுந்தான் செய்யப்படுகிறது. ஆனால் நாம் நெய்வேலியில் நிலக்கரியை வெளியே எடுக்கவேண்டுமானால் முதலில் 200 அடி ஆழத்திற்கு மண்ணைத் தோண்ட வேண்டும். பிறகு அதற்குக் கீழே இருக்கும் தண்ணீரை வெளியே கொண்டு வரவேண்டும். அந்தத் தண்ணீருக்கும் கீழே இருக்கும் நிலக்கரியை அதற்குப் பின்புதான் வெளியே கொண்டுவர முடியும். மற்றத் திட்டங்களை நிறைவேற்றுவதை விட இந்தத் திட்டத்தில் கஷ்டம் நிறைய இருக்கிறது. வெளி நாட்டிலிருந்து வரவழைக்கப்பட்ட நிபுணர்களைக் கொண்டும், நம்முடைய எஞ்சினீயர்கள், அதிகாரிகள், தொழிலாளர்கள் ஆகியவர்களுடைய ஒத்துழைப்பைக் கொண்டும் அந்தத் திட்டம் வெற்றிகரமாக நடத்தப்பட்டு வருகிறது. கால வரையறைக்குள் இத்திட்டம் முடியாதா என்று கேட்டால், முடியும் என்றுதான் சொல்வேன். காலவரையறைக்கு முன்பே இந்தத் திட்டங்கள் நிறைவேறிக் கொண்டிருக்கின்றன. அதற்காக நான் அங்கு திறமையுடன் உழைக்கும் அனைவரையும் பாராட்டுகிறேன். இந்தப் பாராட்டுதல் அங்கு பணியாற்றும் தொழிலாளர்கள், அதிகாரிகள், வெளி நாட்டு நிபுணர்கள் ஆகிய எல்லோரையும் சாரும் என்பதையும் இந்தச் சபையின் முன் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக, இருப்பது "கம்யூனிடி ப்ராஜக்ட்" "இரிகேஷன் பவர் ப்ராஜக்ட் ப்ரோக்ராம்" ஆகியவை. இவை பற்றி எல்லாம் பட்ஜெட் நேரத்திலும் பேசப்போகிறோம் என்றாலும் நான் முக்கியமாக கல்விப் பிரச்னை பற்றிச் சில வார்த்தைகள் பேச விரும்புகிறேன். அதிலும் ஆரம்பப் பள்ளிகள் விஷயமாக சில பிரச்சனைகள் ஏற்பட்டிருக்கிற காரணத்தால் அது பற்றிச் சில சொல்ல வேண்டுமென்று நினைக்கிறேன். எனக்கு எப்பொழுதும் திராவிட முன்னேற்றத் தலைவர்களில் எல்லோரையும் விட திரு. ஷண்முகத்திடம் தனி மரியாதை உண்டு. அதனால் மற்றவர்களிடம் எனக்கு மரியாதை இல்லை என்று அர்த்தம் இல்லை. திரு. ஷண்முகம் அவர்கள் நன்றாகப் படித்து விஷயம் தெரிந்து பேசுகின்றவர்கள். அவர் திடீரென்று ஒரு புள்ளி விவரத்தை எடுத்துக் கூறினார். 'அகில இந்தியாவிற்கும் 300 கோடி ரூபாய் கல்விக்காக ஒதுக்கி இருக்கும்போது, சென்னை ராஜ்யத்திற்கு ஒரு கோடி ரூபாய்தான் ஒதுக்கப்பட்டிருக்கிறது' என்று அரசாங்கப் புஸ்தகத்தில் இருந்த புள்ளி விவரத்தைச் சுட்டிக் காட்டிப் பேசினார். அந்தப் புள்ளி விவரம் தவறாக அச்சடிக்கப்பட்டிருக்கிறது. அரசாங்கப் புஸ்தகந்தான் ஆயினும் தவறு ஏற்பட்டுவிட்டது. அது தவறுதான் என்பதை ஒத்துக்கொள்கிறேன். ஒரு மனிதனுடைய சராசரி உயரம் ஒரு அடி என்று ஒரு புத்தகத்தில் போட்டிருக்கிறது என்று வைத்துக்கொள்ளுங்கள். அதைப் படிப்பவர்கள் உடனே அது அச்சுப் பிழை என்று கூறிவிடுவார்கள். ஏனெனில் ஒரு மனிதனுடைய சராசரி உயரம் 5 அல்லது $5\frac{1}{2}$ அடி என்பது தெரிந்திருக்கிற காரணத்தினால் அது தவறு என்று தெரிந்து விடுகிறது. அதைப்போல் திட்டத்தைப்பற்றி நன்றாகத் தெரிந்திருப்பவர்கள், திட்டத்தைப் பற்றி உண்மையாக புள்ளி விவரங்களோடு தெரிந்திருப்பவர்கள் "ஒரு கோடி" என்று போட்டிருப்பது தவறு அச்சுப் பிழை என்று பார்த்தவுடன் சொல்லி விடுவார்கள். போன பட்ஜெட்டை எடுத்துக் கொள்ளுங்கள். அதில் கல்விக்காக இரண்டு கோடி அளவில் ஒதுக்கி இருக்கிறோம். ஒரு ஆண்டுக்கே இரண்டு கோடி ரூபாய் ஒதுக்கி இருக்கும்போது ஐந்து ஆண்டுகளுக்கும் ஒரு கோடி என்று இருக்குமா என்பது கடந்த ஆண்டு பட்ஜெட்டிலே கொடுக்கப்பட்ட புள்ளிவிவரத்தை நன்றாகத் தெரிந்தவர்களால் உணர்ந்து கொள்ள முடியும். அது தவறு என்று தெரிந்திருக்கும். திரு. ஷண்முகம் அவர்கள் எப்படியாவது குறை சொல்ல வேண்டுமென்ற ஒரே நோக்கத்துடன் இதைப் பிடித்துக்கொண்டு விட்டார்கள் என்று நினைக்கிறேன். திட்டத்தைப் பற்றியும் புள்ளி விவரங்களைப் பற்றியும் நன்றாகப் புரிந்து கொள்ளாமல் வெறும் அச்சுப் பிழைகளை மட்டும் காட்டி பேசிக் கொண்டிருக்கவேண்டாம் என்று திராவிட முன்னேற்றக் கழக நண்பர்களைக் கேட்டுக்கொள்கிறேன். அச்சில் இருப்பதை எல்லாம் நம்பி விட வேண்டாம், பேசுகிற பேச்சை எல்லாம் நம்பி விட வேண்டாம். தப்பான புள்ளி விவரங்களை வைத்துக்கொண்டு பேசிக் கொண்டிருக்க வேண்டாம். அதற்கு உதாரணமாக கேள்வி நேரத்தில் திரு. அண்ணாமலை "காலேஜில் இட

நெருக்கடி ஏற்பட்டிருக்கிறது, போதுமான இடம் இல்லை" என்று ஒரு கேள்வி கேட்கும்போது குறிப்பிட்டார். அவர் கேட்பதற்கு முன்புதான் காலேஜில் மாணவர்கள் இல்லாமல் ஒரு பெரும் பகுதி காலியாக இருப்பதைப் பற்றிய புள்ளி விவரங்களைச் சொன்னேன். உடனே நான் அவரைத் திருத்த வேண்டி இருக்கிறது. புள்ளி விவரங்களை நன்றாகத் தெரிந்து கொண்டு பேசினால், அதில் தவறுகள், எழுத்துப் பிழைகள் இருந்தால் கூட அவை அச்சுப் பிழைகள் என்பதை உணர்ந்து கொள்ள முடியும். "ஸ்பெல்லிங் மிஸ்டேக்" இருக்கிறது. அதைப் பார்த்தவுடன் அது தவறு என்று தெரிந்து விடுகிறது. ஆகவே ஷண்முகம் அவர்கள் குறை சொல்ல வேண்டுமென்ற ஒரே ஆத்திரத்தில் "ஒரு கோடி ரூபாய்" என்ற அச்சுப்பிழையை உபயோகப்படுத்திக் கொண்டுவிட்டார் என்று நினைக்கிறேன்.

SRI P. U. SHANMUGAM : இந்த மாநிலத்தைப் பற்றிய முதலாவது இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டங்களைப் பற்றிச் சர்க்காரால் வழங்கப்பட்ட புஸ்தகத்தில் கொடுக்கப்பட்டிருந்த புள்ளி விவரங்களைத் தான் நான் எடுத்துக் கூறுகிறேன். அது சர்க்காரால் வழங்கப்பட்டதால் அதில் குறை இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. அந்தத் தவறை அமைச்சர் அவர்கள் ஒத்துக்கொள்ளுவார்கள் என்று நினைக்கிறேன். ஒரு கோடி ரூபாய் என்பதைப் 10 கோடி ரூபாய் என்று சொன்னாலும் நான் எடுத்துக் கூறிய பிரச்சனை அதில் இன்னும் இருக்கத்தான் செய்கிறது. கல்விக்காக 300 கோடி ரூபாய் அகில இந்தியாவிற்கும் ஒதுக்கி இருக்கும் போது நமக்கு 10 கோடி தானா என்று இங்கு மீண்டும் கேட்க விரும்புகிறேன். இதற்கு அமைச்சர் அவர்கள் விளக்கம் தரவேண்டுமென்றும் கேட்டுக்கொள்ளுகிறேன்.

*THE HON. SRI C. SUBRAMANIAM : கவர்னர் உரையிலே கூட ஒரு எழுத்துப் பிழை இருக்கிறது. தமிழ் பதிப்பிலே இருக்கிற எழுத்துப் பிழையை திரு. கோவிந்தசாமி அவர்கள் எடுத்துக் காண்பிக்கிறார்கள்.

ஆரம்பக் கல்வியில் எல்லோருக்கும் இலவசமாகப் படிப்பு சொல்லிக் கொடுக்க வேண்டுமென்பது கல்வித் துறையில் ஏற்பட்டு இருக்கக்கூடிய முக்கியமான பிரச்சனை. இது நம்முடைய அரசியல் சட்டத்திலே ஏற்படுத்தப்பட்டிருக்கக்கூடிய கொள்கை. அதைப் பற்றிச் சர்க்கார் ஒரு உத்தரவு பிறப்பித்தார்கள். முக்கியமாக சென்னை நகரில் ஒரு பெரும் பிரச்சனை ஏற்பட்டிருக்கிறது. இதைப்பற்றி யோசனை செய்யவேண்டியது அவசியம். இன்றைக்குத் திடீரென்று எடுத்துக்கொண்ட முடிவு அல்ல. இதைப்பற்றி அறிவதற்காக திரு. அழகப்பச் செட்டியார் அவர்கள் தலைமையில் ஒரு குழுவை ஏற்படுத்தினோம். அவர்கள் இதைப்பற்றி ஆலோசனை செய்து சில முடிவுகளைச் சொல்லி இருக்கிறார்கள். அதிலே ஒரு பகுதியை மட்டும் வாசித்துக் காண்பிப்பது அவசியம் என்று நான் நினைக்கிறேன் அவர்கள் செய்து இருக்கக்கூடிய முக்கியமான சிபாரிசு இதுதான்.

" We recommend that fees should not be levied in any elementary school, whether it be under the municipality, or the regional board or the aided management. We should like to make it perfectly clear that even when aided institutions are managed by committees Government should never allow them to charge fees We find that fees are levied in some elementary schools. Government may make suitable regulations to the above effect and give the management a year's notice after which time levy of fees if any in those schools should cease. As such there should be no further need for compensation by Government for loss of fee income."

(Sri S. Lazar rose.)

SRI K. VINAYAKAM : Sir, it seems Sri Lazar wants to say something.

9th February 1959]

* THE HON. SRI C. SUBRAMANIAM : அதற்குப் பிற்பாடு இதை அனுசரித்து நாம் தயாரித்த வெள்ளை அறிக்கையிலே இதைப் பற்றி ஆராய்ந்து இரண்டு மூன்று பாராக்களில் இதைப் பற்றிக் கூறி இருக்கிறோம். இதை அறிவதற்காக இந்தச் சட்டசபை ஏற்படுத்திய குழுவும் தீர விசாரணை செய்திருக்கிறது. இதில் இரண்டு விதமான அபிப்பிராயம் இருந்தது. ஒன்று இவர்கள் சம்பளம் வாங்கிக்கொண்டு ஆரம்பப் பள்ளிகளை நடத்தி வந்தால் சர்க்கார் உதவி கொடுக்கக்கூடாது. அல்லது இவர்களுக்குச் சர்க்கார் உதவி கொடுத்தால் மாணவர்களிடம் இருந்து சம்பளம் வாங்கக் கூடாது. இந்த இரண்டும் இருக்கக்கூடாது என்பது பெரும்பாலோர் கருத்தாக இருந்தது. ஆனால் ஒரு சிலர் சட்டசபை அங்கத்தினர்கள் அல்ல அங்கு இருக்கும் அதிகாரிகள் இந்த இரண்டுக்கும் மேல் இருக்கக்கூடாது என்று நினைக்க வேண்டியது அவசியம் இல்லை. மூன்றாவது பிரிவும் கூட இருக்கலாம் என்றார்கள். மூன்றாவது பிரிவு என்னவென்றால், ஆரம்பப்பள்ளிகளில் சம்பளம் வாங்குவதற்குக் கணக்கு வைத்துக்கொள்ளச் சொல்லவேண்டும். சம்பளம் மூலமாக வரும் தொகையைக் கணக் கெடுத்துக் கொண்டு அவர்களுக்குத் கொடுக்கிற உதவித் தொகையைக் கொடுத்து விட்டால் அவர்கள் பள்ளிக்கூடத்தை நடத்தச் சௌகரியமாக இருக்கும் என்ற கருத்து ஒரு சிலரால் தெரிவிக்கப்பட்டது. ஆனால், மேலும் பரிசீலனை செய்து பார்த்தபிறகு, உண்மையான செலவு என்ன என்பதைக் கண்டுபிடிப்பது கணக்குப் போடுவது என்றால், மிகக் கஷ்டம். ஒவ்வொரு வரும், அதிகமான சம்பளத்தையே வாங்கி, அதிகமான உதவித் தொகை யைக் கோரும் நிலைமைதான் வளர்ந்துவிடும். ஆகவே, கடைசியாக, இரண்டு முறைகள்போதும் என்று தீர்மானிக்கப்பட்டது. ஒன்று சர்க்கார் முழு உதவி பெற்று இயங்கும் இலவசப் பள்ளிகள். மற்றொன்று, சம்பளம் வாங்கி தாங்களே நடத்துவது. இந்த முறையிலே, 1959–60 லிருந்து அமுலுக்குக் கொண்டுவர வேண்டும் என்று முடிவு செய்யப் 12-40 p.m. பட்டது. அந்த முறையிலே பள்ளிகளுக்கு நோட்டீஸ் கொடுக்கப்பட்டிருக் கிறது. ஒரு சில பள்ளிக்கூட நிர்வாகிகள், இதை எதிர்க்கிறார்கள். பள்ளிக்கூடங்களை நடத்தவே முடியாது என்று பலர்சொல்லிக்கொள்ளு கிறார்கள். அதே ரீதியில் சர்க்காருக்கும் எழுதியிருக்கிறார்கள். பத்திரிகைகளிலும் எழுதுகிறார்கள். மேடைகளில் பேசுகிறார்கள். ஆகையினால், பள்ளிக்கூடங்கள் சம்பளம் வாங்க வேண்டுமானால், சர்க்கார் உதவி கிடைக்காது. இதைப்பற்றி நம் சட்டசபைக் கமிட்டி ஒன்றும் முடிவு செய்யவில்லை. இப்பொழுது இதற்கென்று நாம் நிறுவியிருக்கும் சட்ட சபைக் குழுவுக்கு முன்னால் இதை வைத்து பரிசீலனை செய்யச் சொல்லு கிறோம். அவர்கள் என்ன முடிவு செய்கிறார்களோ, அதற்குப் பிறகு, நாம் முடிவு செய்யலாம் என்ற முடிவுக்கு வந்திருக்கிறேன்.

இதன் நடுவே, ஆசிரியர்களுக்கு தங்கள் வாழ்க்கை பாதிக்கப்படுமோ என்ற பீதி ஒன்று ஏற்பட்டு இருக்கிறது. பலருக்கு குழந்தைகளுக்கு பள்ளிக்கூடங்கள் இல்லாமல் சில இடங்களில் போய் விடுமோ என்ற கவலை ஏற்பட்டிருக்கிறது. இப்பொழுது நோட்டீஸ் கொடுத்திருக்கிறோம். பலர் சம்பளம் இல்லாமல் நடத்துகிறோம் என்று ஒப்புக் கொள்ளலாம். ஆசிரியர்கள் இன்றைக்கு பள்ளிக்கூடங்களிலே அதிகச் சம்பளம் வாங்க லாம். அவர்கள் ஏதாவது மாற்றத்தினால் பாதிக்கப்பட்டால், சம்பளக் குறைவு ஏற்பட்டால், அதற்கு ஏற்ற ஒரு முடிவு செய்யலாம். எனக்கு உடனடியாக எந்த முடிவும் இல்லை. ஆனால், அவர்களுக்கு, ஆறுதலாக ஒன்று சொல்ல முடியும். அவர்கள் வாங்கி வந்த சம்பளத்திற்கு குறை யின்றி சர்க்கார் விகிதப்படி கொடுக்கப்பட வேண்டும் என்றுதான் சர்க்கார் முடிவு செய்யும். தனியார் பள்ளிக்கூடங்களில் பணியாற்றிவரும் உபாத் தியாயர்களுக்கு இதைக் கூறமுடியும். இரண்டாவதாக, பல பள்ளிக் கூடங்களிலே ஆசிரியர்களுக்கு நோட்டீஸ் கொடுத்து, வெளியேற்றப் படுவார்கள் என்ற பீதி இருக்கிறது. அந்த ஆசிரியர்களுக்கு ஒரு உறுதி கொடுக்கிறேன். அப்படி வெளியேற்றப்பட்டால், வேலையில்லாமல் திண்டாடும் நிலை ஏற்படாது. மற்ற இடங்களிலே அவர்களுக்கு வேலை கொடுத்து அமர்த்தப்படுவார்கள் என்ற உறுதியைக் கொடுக்கிறேன். அதிகச் சம்ப ளம் வாங்கியிருந்தால், சர்க்கார் விகிதப்படி, அந்தச் சம்பளம் கொடுக்கப் படும். (குறுக்கீடு) சர்வீஸ் கண்டிஷன் எல்லாம் சரி செய்து விடலாம்.

[Sri C. Subramaniam] [9th February 1959

யாராவது பள்ளிக்கூடத்தைச் சம்பளம் வாங்காமல் நடத்துவதை எதிர்த்து மூடிவிட்டால், அந்த இடத்திலே, பள்ளிக்கூடங்கள் திறக்க ஏற்பாடுகள் செய்யப்படும். சென்னை நகரமாக இருந்தால், சென்னைக் கார்ப்ப ரேஷனும், மற்ற நகரங்களிலே அந்தந்த முனிசிபாலிடிகளும், மற்றக் கிராமாந்தரங்களிலே, ஜில்லா போர்டு அல்லது பஞ்சாயத்து யூனியனும், பள்ளிக்கூடங்களை ஏற்பாடு செய்ய முயற்சிகள் எடுக்கும். அந்த முறை யில் தாற்காலிகமான பிரச்சினைகள் தீர்க்கப்படும். நமது சட்ட சபைக் குழு மார்ச் மாதத்திற்கு முன்பாக அதன் முடிவுகளை வெளியிடும். அதன் பிரகாரம் செய்யலாம். அப்படியும் ஏதாவது கஷ்டங்கள் ஏற் பட்டால், அம்மாதிரிப் பள்ளிக்கூடங்களை இன்னும் ஒரு வருஷத்திற்கு பழைய முறையிலேயே நடத்த ஏற்பாடு செய்து, முடிவுகள் தீர்மானமாக எடுத்த பிறகு, 1960–61 லிருந்து புது முறையைக் கையாளலாம். ஆகவே இந்த ஆசிரியர்களைப் பொருத்த வரையிலும், பள்ளிக்கூடங்களைப் பொருத்த வரையிலும், சர்க்கார் எல்லாவித நடவடிக்கைகளும் எடுக்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

ஆனால், பழைய முறையில் நிர்வாகிகள் பள்ளிக்கூடங்களை நடத்திக் கொண்டு போவது என்பது முடியாது. எல்லாக் குழந்தைகளுக்கும் இலவசக் கல்வி கொடுக்க வேண்டியிருக்கிறது. சம்பளம் வாங்கும் பள்ளிக்கூடம் என்றிருந்தால், அங்கு ஏழைக் குழந்தைகள் செல்ல முடியாது. அப்படிப்பட்ட குழந்தைகளின் பக்கத்திலே இம்மாதிரி பள்ளிக் கூடம் இருப்பதால், சர்க்கார் உதவி கொடுக்கவேண்டும் என்ற ஒரு நிலைமை ஏற்படும். கிராமப்புறங்களிலே இம்மாதிரிப் பள்ளிக்கூடங்கள் அதிகமாக ஏற்படாது. ஆனால், நகரப்புறத்தில் வேறு விஷயம், ஆகவே நகரத்திற்கு ஒன்று, கிராமத்திற்கு ஒன்று என்றெல்லாம் அமைக்க முடியாது. அது தகுதியா என்பதையெல்லாம் நம் கல்விக் குழு நன்கு ஆராயும். ஆகவே இப்பொழுது, கல்வித் துறையே போய்விடும், கல்வித் தரம் குறைந்துவிடும் என்றெல்லாம் பூச்சாண்டிகள் காட்டவேண்டாம், பயமுறுத்த வேண்டாம். ஆசிரியர்களின் உரிமைகளும் பாதிக்கப்படாமல், குழந்தைகளின் சௌகரியங்களும் பாதிக்கப்படாமல், சர்க்கார் எல்லாவிதமான ஏற்பாடு களும், நடவடிக்கைகளும் எடுப்பதற்குச் சாதகமாக, ஆரம்பக் கல்வி பொருத்த வரையில் நம் கல்விக் குழு நல்ல முடிவுக்கு வரும் என்று நம்புகிறேன்.

SRI N. K. PALANISAMI: தனியார் பள்ளிக்கூடங்களில் ஐந்து டிவிஷன்கள் இருந்தால் மூன்று டிவிஷன்களாகக் குறைத்து விடுகிறார்கள். ஆகவே, அப்படி டிவிஷன் குறைப்பதையும் தடுக்க சர்க்கார் நடவடிக்கை எடுப்பார்களா?

*THE HON. SRI C. SUBRAMANIAM: மாணவர்கள் குறைந்தால் டிவிஷன்கள் குறையலாம். அது பற்றி நாம் எப்படி உத்தரவு போட முடியும். ஆனால், ஆசிரியர்கள் நீக்கப்பட்டால், அவர்களுக்கு பதில் உத்தியோகம் கொடுக்கப்படும் என்ற உறுதியைத்தான் நான் சொன்னேன்

இப்பொழுது, ஆரம்பக் கல்வி, உயர்தரக் கல்வி என்றும், தொழில் கல்வி என்றும் இருக்கிறது. இதில் தொழில் கல்வி மிக முக்கியத்துவம் வாய்ந்தது. தொழில் கல்வியுடன்தான் தொழில் அமைப்பு இணைந் திருக்கிறது. ஆகவே, இன்றைக்கு தொழில் கல்வி அவ்வளவு முக்கிய மாக இருப்பதால்தான், இங்கே ஹையர் டெக்னலாஜிகல் இன்ஸ்டிட்யூட் ஏற்பட இருக்கிறது. அந்த அடிப்படையிலே, சென்ற நாலைந்து வருஷ காலமாக, அந்த ஸ்தாபனம் சென்னையிலே ஏற்படவேண்டும் என்று பெரு முயற்சி செய்து வந்திருக்கிறோம். மற்ற இராச்சியங்களும், ஒப்புக் கொண்ட காரணத்தினால், சென்னை இராச்சியத்திலே, திராவிடத்திற்குப் பொதுவாக, அது அமையப்போகிறது. அது மைசூர், ஆந்திரா, கேரளா, சென்னை இவற்றிற்குப் பொதுவாக திராவிடத்தில் அந்தக் குழு அமையும். திராவிட முன்னேற்றக் கழகத்திற்கு இந்த திராவிடத்தில் அமையும் கழகம் மகிழ்ச்சியைக் கொடுக்கும். ஆனால், அங்கே வேலை செய்யும் நிபுணர்கள், மற்றவர்களும் இருப்பார்கள். அங்கே, டிகிரி படிப்பு, மட்டு மல்ல, அதற்குமேல், ஆராய்ச்சிப் படிப்பு இவை தொழில் துறையில் ஏற்படும். அது முன்னேறி, அந்த திட்டம் உருவாகும்போது, நமக்கு

9th February 1959] [Sri C. Subramaniam]

உண்மையான சக்தி, பலம் ஏற்படும், அது அடுத்த ஆண்டிலிருந்து தொடங்கும். அதற்கும், மேற்கு ஜர்மணியர் உதவி கிடைத்திருக்கிறது. அவர்கள் தொழில் துறையில் நல்ல ஞானமும், அனுபவமும், ஆற்றலும் படைத்தவர்கள். அவர்கள் நமக்குக் கிடைத்தது வரவேற்கத்தக்கது என்பதை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

**SRI A. GOVINDASAMY** : கனம் அமைச்சர் அவர்களிடமிருந்து ஒரு சிறு விளக்கம் தேவை. இந்தக் கஷ்டத்தினுல் ஆசிரியர்களை நீக்கிவிட்டால் உடனடியாக அவர்களுக்கு முனிசிபாலிடியிலோ, ஸ்தல ஸ்தாபனங்களிலோ வேலை அளிக்கத் தக்க ஏற்பாடுகளைச் செய்வதாக கனம் அமைச்சர் அவர்கள் உறுதி அளித்தார்கள். அது வரவேற்கத்தக்க விஷயம். ஆனுல் ஐந்து ஆண்டு, ஆறு ஆண்டு என்று ஏற்கனவே அவர்கள் சர்வீஸ் செய்திருந்தால் அந்த சர்வீசையும் இணைப்பாகச் சேர்த்துக் கொள்ள நடவடிக்கை எடுக்கப்படுமா என்று அறிய விரும்புகிறேன். 12·50 p.m.

***THE HON. SRI C. SUBRAMANIAM** : அதுவும் கணக்கில் எடுத்துக்கொள்ளப்படும். அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. மேலும் இதைப்பற்றிய புள்ளி விவரங்களை நான் எடுத்தேன். குறிப்பாக 1956–57-ல் நமது ராஜ்யத்தில் 20,500 ஆரம்பப் பள்ளிகள் இருக்கின்றன. இதில் 6,700 சொச்சம் பள்ளிகள் தனிப்பட்டவர்களால் நடத்தப்படுகிறது. இதில் 900 பள்ளிக்கூடங்களில் தான் சம்பளம் வாங்குகிறார்கள். சென்னை நகரில் 150 பள்ளிகள்தான் இருக்கின்றன. ஆகவே இது பிரமாதமான பிரச்சனை அல்ல. தீர்க்க முடியாத பிரச்சனையும் அல்ல. வெகு சுலபமாகத் தீர்த்துவிட முடியும் என்று நான் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அடுத்தபடியாக என்.ஜி.ஓ.க்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் சலுகை சம்பந்தமாகவும் கவர்னர் உரையில் வெளியாகியிருக்கிறது. இடைக்கால நிவாரணமாக 5 ரூபாய் கொடுப்பதாகச் சொன்னவுடனேயே, வெகு சுலபமாக ஐந்து ரூபாய் தானே என்று சொல்லிவிடலாம். ஓர் ரூபாய் அதிகப்படுத்தினுல் 35 லட்சம் ரூபாயாகிறது. ஐந்து ரூபாய் என்ருல் 175 லட்சம் ரூபாய்மொத்தச் செலவு.

**SRI S. LAZAR** : ஒரு விளக்கம் தேவை. ஆரம்பக் கல்வித் திட்டத்தை அமுல் நடத்துவதினுல் பாதிக்கப்படக்கூடிய ஆசிரியர்களுக்குத் தக்க பாதுகாப்பு அளிக்க ஏற்பாடு செய்வதாக அமைச்சர் அவர்கள் வாக்குறுதி கொடுத்தார்கள். அதேசமயத்தில் கல்விக் குழுவுக்கு விட்டு அவர்கள் ஆராய்ந்து கொடுக்கிற முடிவுப்படியே நடக்கப்போவதாகவும் சொன்னுர்கள். அப்படி இருப்பதனுல் கல்விக் குழுவுக்கு இப்பிரச்னையை விட்டு, அவர்கள் முடிவு தெரியும் வரையிலும் இப்போது போட்டிருக்கக்கூடிய உத்தரவை நிறுத்தி வைக்க முடியாதா என்று கேட்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : நிறுத்தி வைப்பது என்கிற பிரச்னை ஒன்றும் எழவில்லை. ஏனென்ருல், நாம் உத்தரவு எதுவும் அனுப்பவில்லை. ஜூன் மாதம் முதல் நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம் என்கிற யோசனைக்கு அவரவர்கள் என்ன நினைக்கிருர்கள் என்பதை எழுதி அனுப்பும்படியாகத்தான் சொல்லியிருக்கிறது. மார்ச் மாதத்திற்குள் அவர்கள் அனுப்பினுல் அப்புறம் நாம் அதைப் பரிசீலனை செய்து நடவடிக்கை எடுத்துக் கொள்வதற்கு முடியும்.

**MR. SPEAKER** : இனி தயவு செய்து யாரும் நிதி அமைச்சர் அவர்கள் பேசும்போது இடையில் விளக்கம் கேட்கவேண்டாம். அவரது பிரசங்கத்தில் கேள்வி நேரம் போல் ஆக்கிவிடக்கூடாது என்று கேட்டுக் கொள்கிறேன்.

**THE HON. SRI C. SUBRAMANIAM** : என்.ஜி.ஓ.க்கள் விஷயமாக சொல்ல ஆரம்பித்தேன். இப்போது நாம் 5 ரூபாய் கொடுத்தது பற்றி மிகவும் குறைவு என்று தான் நினைப்பார்கள். ஆனுல் இருக்கக்கூடிய நிதி நிலைமையை அனுசரித்து இதற்குமேல் இடைக்கால நிவாரணமாக ஒன்றும் அளிக்க வசதி கிடையாது. இதுவே ஒரு கோடியே 75 லட்சம் ரூபாய் அதிகச் செலவு நமக்கு இவ்வாண்டில் ஏற்படும் என்று

[Sri C. Subramaniam] [9th February 1959

சொன்னேன். எப்படி இருந்தாலும் இந்தப் பிரச்னையை நன்றாக அலசிப் பார்த்து ஒரு நல்ல முடிவுககு வரவேண்டும் என்கிற நோக்கத்துடன் தான் சர்க்கார் ஒரு கமிஷனை நியமித்துள்ளது. அதற்குள்ளேயே அதன் தலைவராக நாம் நியமித்திருக்கும் ஸ்ரீ ராமுண்ணி மேனனைப்பற்றி பேசுகிறார்கள். அவர் என்னவோ சர்க்கார் ஊழியர்களின் எதிரி போல அவர் தான் ஊழியர்களுக்குச் சம்பளம் அதிகம் கொடுக்கக் கூடாது என்று சொன்னவர் போல அபிப்பிராயம் வெளியிடப்படுகிறது. சர்க்கார் ஊழியர்களுக்கு எதிராக எந்த அதிகாரியும் சம்பளம் அதிகம் கொடுக்கக் கூடாது என்று சொன்னது இல்லை. நிதி இலாகா காரியதரிசியும்கூட அப்படிச் சொன்னதில்லை. உண்மையில் இவர்களுடைய கஷ்டங்களையெல்லாம் அடிக்கடி எங்கள் கவனத்திற்கு அந்தக் காரியதரிசிகள் தான் அவ்வப்போது கொண்டு வந்திருக்கிறார்கள். இதுபற்றி ஏதாவது முடிவு எடுத்திருந்தால் அதற்குப் பொறுப்பு நான். மறறவர்கள் பேரில் குற்றம் சொல்வதில் பயன் இல்லை. குற்றம் சொல்லவேண்டுமென்றால் என் பேரில் குற்றம் சொல்ல வேண்டும். ஏதோ இவர்களும் தான் கேட்கிறார்கள், கேட்ட பணத்தைக் கொடுத்துவிட்டுப் போவோமே என்கிற மனப்பான்மையில் பார்க்கும்போது நான் கொடுக்க முடியாத நிலையில் இருக்கிறேன். காரணம் பணம் என்னுடையது அல்ல. மக்களிடத்திலிருந்து—ஏழை மக்களிடத்திலிருந்து—வரிப் பணமாக வாங்கியது. அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை உயர்த்துவதற்காக வாங்கியது. ஆகவே அந்தப் பணத்திலிருந்து ஒரு அணு செலவு செய்வதாக இருந்தாலும் அதை நன்றாகச் சீர்தூக்கிச் செலவிடக்கூடிய நிலையில் நான் இருக்கிறேன். அந்தப் பொறுப்பு எனக்கு மாத்திரம் இல்லை. இந்தச் சபைக்கும் இருக்கிறது. அந்த முறையில் நீங்கள் எல்லாம் யோசனை சொன்னால் அதன்படி சர்க்கார் நடக்கத் தயாராக இருக்கிறது. எல்லோருடைய வாழ்க்கைத் தரத்தையும் உயர்த்துவதற்கு நாம் பல திட்டங்களை நிறைவேற்றினால் சமுதாயத்திலே இவர்களும் நன்மை அடைவார்கள். அதனால் திட்டங்களை—பணத் தட்டு இல்லாமல் நிறைவேற்ற வேண்டிய முதற்பொறுப்பு நம் எல்லோருக்கும் இருக்கிறது. சர்க்கார் ஊழியர்களுக்கும் இதில் பொறுப்பு இருக்கிறது. இதன் காரணமாகவே தான் அவர்களுடைய கோரிக்கையை உடனடியாக ஏற்றுக்கொள்ள முடியாத நிலைமையில் நாங்கள் இருக்கிறோம். அதைத் தவிர எனக்கோ, முதல் மந்திரி அவர்களுக்கோ அவர்கள் விஷயத்தில் அனுதாபம் இல்லை என்று சொல்ல முடியாது. இதற்குப் பொறுப்பு நாங்கள் என்று குற்றம் சாட்டினாலும் தேவலை. ராமுண்ணி மேனன் கெடுத்துவிட்டார், நிதி இலாகா காரியதரிசி செய்துவிட்டார் என்று எண்ணக்கூடாது. யாரும் அவர்களுக்குக் கொடுக்கக்கூடாது, அவசியம் இல்லையென்று சொல்லவில்லை. எந்த அதிகாரியும் அப்படி யோசனை சொனனதும் கிடையாது. அதற்கு மாறாக அவர்களுடைய கஷ்ட நிலைமையை எடுத்துச் சொல்லி அவர்களுக்கு உடனடியாக ஏதாவது செய்ய வேண்டும் என்று அவர்கள் யோசனை கூறி இருக்கிறார்கள். அவர்களது ஆலோசனைகள் எல்லாவற்றையும் நாங்கள் எடுத்துக் கொள்ளாததற்குக் காரணம்—நான் முன்பே சொன்னதுபோல எதற்கு முதலிடம் கொடுக்க வேண்டும் என்பதுதான். திட்டத்திற்கு முதலிடம் கொடுப்பதா ? அல்லது அரசாங்க ஊழியர்களுடைய சம்பளத்தை உடனடியாக உயர்த்திவிடுவதா ? இதைப்பற்றி ஆலோசனை செய்து பார்க்கும்போது திட்டத்திற்கே முதலிடம் கொடுக்க வேண்டும் என்கிற முறையில் இதுவரையில் காரியங்களைச் செய்துவந்திருக்கிறோம். இப்போது அந்தப் பிரச்னை எல்லாவற்றையும் நன்றாக அலசி ஆராய்ந்து பார்த்து யோசனை கூறும்படியாக ஒரு கமிஷனை நியமித்து, இடைக்கால நிவாரணமாக ரூ. 5 கொடுத்திருக்கிறோம். இந்தச் சமயத்தில் சிலர் உடனடியாக இது விஷயமாக முடிவு செய்துவிட வேண்டும் என்று சொன்னார்கள். செட்டிநாட்டு ராஜா சொன்னார் என்றுதான் நான் நினைக்கிறேன். மார்ச் 31-ந் தேதிக்குள் இந்தக் கமிஷன் தன் ரிப்போர்ட்டை சமர்ப்பிக்கவேண்டும் என்று சொல்லி உடனடியாக அதன்பேரில் நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும் என்று சொன்னார்கள். இவர்கள் கவர்னர் அவர்கள் குறிப்பிட்டிருக்கக் கூடிய விஷயத்தை நன்கு புரிந்து கொள்ள வில்லையென்றே நினைக்கிறேன். மத்திய சம்பளக் கமிஷனின் அறிக்கை வந்த பிறகு தான் அதற்கு இணக்கமாக இந்தக் கமிஷன் சொல்கிற சிபார்சுகளையும் வைத்துக் கொண்டு ஆராய்ந்து பார்த்து ஒரு முடிவுக்கு வர முடியும். நாம்

9th February 1959] [Sri C. Subramaniam]

எவ்வளவு சீக்கிரமாக இதைப்பற்றி முடிவு செய்கிறோம் என்பது மத்திய சம்பளக் கமிஷன் அறிக்கை வெளிவருவதைப் பொறுத்திருக்கிறது. அந்த அறிக்கைக்கு இணங்க நம் ராஜ்ய கமிஷன் ஒன்று இப்பிரச்னையை ஆராய வேண்டுமென எண்ணித்தான் இப்போது ஒரு கமிஷனை அமைக்கவும் முடிவு செய்திருக்கிறோம். ஆகவே கொஞ்சம் பொறுமையாக சர்க்கார் போட்டிருக்கிற திட்டங்கள் எல்லாம் தடைபடாதிருக்கத் தக்க வகையில் நிதானத்துடன் இப்பிரச்சனையை நன்றாக ஆராய்ந்து நல்லதொரு முடிவை எடுக்க வேண்டுமென்று எல்லோரையும் கேட்டுக்கொள்ளுகிறேன.

கடைசியில் ஒரு விஷயம். திராவிட முன்னேற்றக் கழகத்தைப்பற்றி பேசி முடித்துக் கொள்கிறேன். கவர்னர் உரைக்கு முற்றும் சம்பந்தம் இல்லாத விஷயமாக இருக்கலாம். இருந்தும் அந்தப் பக்கத்தில் உள்ளவர்கள் குறிப்பிட்டார்கள். அதைப்பற்றி இந்தப் பக்கத்திலிருந்தும் பலர் பேசினார்கள். அதன் காரணமாக எதைப் பேசுவது என்று இருந்த எனக்கு அதைப்பற்றி பேச வாய்ப்புக் கிடைத்துவிட்டது என்கிற முறையில் திரு அண்ணாதுரை அவர்களும் பேசினார்கள். அதைப்பற்றி நானும் சில வார்த்தைகள் சொல்லத்தான் வேண்டும். கவர்னர் உரைக்குச் சம்பந்தமில்லாதது என்று நான் விட்டுவிட்டாலும் அவர்கள் விடமாட்டார்கள். சட்டசபையில் அண்ணா கேட்டதற்கு நிதி மந்திரி அவர்கள் பதில் சொல்லாது மழுப்பிவிட்டார்கள் என்பதாக நாளையே அவர்கள் பத்திரிகையில் எழுதிவிடுவார்கள். அதனால் பதில் சொல்ல வேண்டியிருக்கிறது.

கவர்னர் உரை நிகழ்த்தியபோது அவர்கள் சபைக்கு வராததற்குக் காரணம் வடநாட்டு ஆதிக்கத்திற்கு கவர்னர் அவர்கள் ஓர் சின்னமாக விளங்குகிறார்கள். அவர் வடநாட்டு ஆதிக்கத்தின் சின்னம் என்கிற முறையில் எதிர்ப்பைத் தெரிவிக்கும் வகையில தான் சபைக்கு வராமல் ஒதுங்கியிருந்ததாகக் குறிப்பிட்டார்கள். அதற்கு அடுத்த நாளே மற்ற விஷயங்களில் பங்கெடுத்துக்கொள்ள அவர்கள் வந்ததுபற்றி மகிழ்ச்சி. அது வரவேற்கத் தக்கது. வரவேண்டாம் என்றுயார் சொன்னாலும் கவலைப் படாதீர்கள், வாருங்கள் என்று தான் நான சொல்வேன். அவர்களால் எங்களுக்கு ஏதேனும் சங்கடம் வரும் என்று நான் நினைக்கவில்லை. அதுவும் இரண்டு வருஷ அநுபவத்திலே சங்கடமே இல்லையென்று தெரிந்து கொண்டுவிட்டேன். ஆகவே எப்போதும் அவர்களை வரவேற்கிறோம். வடநாட்டு ஆதிக்கத்தின் சின்னம் என்பதற்காக ஒதுங்கியிருந்தோம் என்பதோடுகூட வேறு பல காரணங்களையும் எடுத்துச் சொன்னார்கள். சைமன் கமிஷனை பகிஷ்கரிக்கவில்லையா என்று கேட்டார்கள். அந்தக் காலத்தில் வெள்ளையரின் ஆதிக்கத்திற்கு எதிராக காங்கிரஸ் என்ன என்ன காரியங்களைச் செய்ததோ அதைத்தான் நாங்கள் செய்கிறோம் என்பது போலப் பேசினார்கள். இதற்கு உதாரணம் சொல்லவேண்டுமென்றால் ஒன்று தான். குழந்தைகள் விளையாடுகிற பொம்மைக் கல்யாணம் உங்களுக்குத் தெரியும். குழந்தைகளுக்கு பெண் வீட்டார், பிள்ளை வீட்டார் என்று மேளத் தாளங்களோடு கூட வீட்டிலே நடக்கும் கல்யாணத்தைப் பார்த்தவுடன் அது மனதில் பதிந்துவிடுகிறது. அதுதான் முக்கியமான சம்பவம் என்று நினைக்கிறது. உடனே இந்தக் குழந்தைகளும் பொம்மைகளை வைத்துக் கொண்டு தாங்களாகவே பெண் வீட்டார் போலவும், பிள்ளை வீட்டார் போலவும் எண்ணி விளையாட ஆரம்பிக்கிறது. தாங்களும் அம்மாதிரி செய்ய வேண்டும் என்று விரும்பி அவர்கள் பொம்மைக் கலியாண விளையாட்டு விளையாடுவார்கள். அவர்கள் பொம்மைகளை வைத்துக் கல்யாணம் செய்வார்கள். பொம்மைகளை வைத்துக்கொண்டு, குழந்தைகளுக்குள்ளேயே பெண் வீடும், மாப்பிள்ளை வீடும் வைத்துக்கொள்வார்கள். இரண்டு பேர் தப்பட்டை அடிப்பார்கள், நாயனம் வாசிப்பார்கள், சீர் வரிசைகள் எல்லாம் செய்வார்கள். பெரியவர்கள்கூட சில சீர்களைச் செய்ய மறந்து விடுவார்கள் குழந்தைகள் ஒன்று விடாமல் எல்லாச் சீர்களையும் செய்வார்கள். காரணம், அவர்கள் நிஜக் கலியாணத்தை அவர்கள் உன்னிப்பாகக் கவனித்திருப்பார்கள். பெரியவர்கள் கல்யாணம் நடத்தியதால் நாமும் கல்யாணம் நடத்தவேண்டும் என்பதற்காக அவர்கள் பொம்மைக் கல்யாணம் நடத்துவார்கள். அதைப்போல் திராவிட முன்னேற்றக் கழகத்தினரும் செய்கிறார்கள். காங்கிரசுக்கு மக்களிடம் வலு வந்ததற்குக் காரணம் அவர்கள் ஒரு ஆதிக்கத்தை எதிர்த்ததுதான் என்பதை அவர்கள் அறிந்து தாங்

களும் ஒரு ஆதிக்கத்தை எதிர்ப்பதாக மக்களிடம் கூறுகிறார்கள் (சிரிப்பு). குழந்தைகள் பொம்மைகளை பெண்ணும் மாப்பிள்ளையுமாக வைத்துக் கல்யாணம் நடத்துவது போல், இவர்கள் ஆரியர்களின் ஆதிக்கம் என்ற ஒரு ஆதிக்கத்தை எதிர்ப்பதாகக் கூறி வந்தார்கள். அதனால் செல்வாக்கு கிடைக்கவில்லை என்று தெரிந்ததும், வடவர் ஆதிக்கம் என்ற ஒரு ஆதிக்கத்தை எதிர்ப்பதாகக் கூறிவருகிறார்கள். கல்யாணத்திற்குச் சீர் வரிசைகள் செய்வது போல் இவர்கள் கிளர்ச்சிகள் செய்வது, மகாநாடுகள் போடுவது, தீர்மானங்கள் போடுவது முதலிய காரியங்களைச் செய்கிறார்கள். முன்பு காங்கிரஸ் செய்ததை யெல்லாம் அப்படியே காப்பியடித்து வருகிறார்கள். திரு. அண்ணாதுரை அவர்களும் இதையே சொன்னார்கள். "நீங்கள் இப்படிப்பட்ட காரியங்களைச் செய்யவில்லையா? நீங்கள் வெளி நடப்பு (வாக் அவுட்) நடத்தவில்லையா? நீங்கள் கறுப்புக்கொடி காட்டவில்லையா? அப்படிப்பட்ட காரியங்களைத்தான் நாங்களும் செய்கிறோம்" என்று ஸ்ரீ அண்ணாதுரை சொன்னார். இவர்கள் செய்யும் இத்தகைய காரியங்கள், குழந்தைகள் செய்யும் பொம்மைக் கல்யாணத்தைப் போல் இருக்கின்றன. ஆகவே இப்படிப்பட்ட பொம்மை அரசியலை விட்டுவிட்டு உண்மையான அரசியலில் ஈடுபட வேண்டும் என்று உங்களை கேட்டுக் கொள்கிறேன்.

SRI C. N. ANNADURAI : திராவிட முன்னேற்றக் கழகத்தவர்கள் காங்கிரஸ்காரர்கள் செய்த காரியங்களைப் பார்த்துவிட்டு அவைகளைப் போன்ற காரியங்களைத் தாங்களும் செய்கிறார்கள் என்று கதை மூலம் விளக்குவதில் பிரயோஜனமில்லை. பொம்மைக் கல்யாணம் செய்யும் குழந்தைகள் பெரியவர்களாக வளர்ந்து நிஜக் கல்யாணமும் செய்வதைப் பார்க்கிறோம். நாங்கள் செய்யும் கிளர்ச்சிகளும் இதர காரியங்களும் காங்கிரஸ்காரர்கள் செய்த காரியங்களைப் பார்த்துச் செய்யப்படும் பொம்மைக் கல்யாணங்கள் என்று நீங்கள் சொல்லும் பட்சத்தில், காங்கிரஸ்காரர்கள் செய்த கிளர்ச்சிகளும் மற்ற காரியங்களும் அயர்லாந்தில் செய்யப்பட்ட கிளர்ச்சிகளையும் மற்ற காரியங்களையும் பார்த்து செய்யப்பட்ட பொம்மைக் கல்யாணங்கள் என்று நாங்கள் சொல்வோம்.

*THE HON. SRI C. SUBRAMANIAM : இந்தியாவில் நடந்த சுதந்திர இயக்கம் இதுவரையில் மக்கள் சமுதாயத்தின் வரலாற்றிலேயே நடக்காதது என்று இன்றைக்கு உலகமே இந்திய சுதந்திர இயக்கத்தைப் புகழ்கிறது. ஆனால் அறிஞர் அதை ஒப்புக்கொள்ளமாட்டார்.

* SRI C. N. ANNADURAI : காங்கிரஸ் இயக்கத்தில் நடத்தப்பட்ட கிளர்ச்சிகள், சத்தியாக்கிரகங்கள், முதலிய அத்தனையும் அயர்லாந்தில் நடத்தப்பட்டன.

*THE HON. SRI C. SUBRAMANIAM : எங்கேயோ தீ எரிவதற்கும் அடுப்பில் தீ எரிவதற்கும் வித்தியாசம் தெரியாதவர்களுக்கு நான் என்ன சொல்ல முடியும்? அயர்லாந்தில் நடந்த இயக்கமும் இந்தியாவில் நடந்த சுதந்திர இயக்கமும் ஒன்றுதான் என்று சொல்வீர்களானால், கொஞ்சம் இந்திய சுதந்திர இயக்க வரலாற்றைப் படித்துப் பாருங்கள் என்று உங்களைக் கேட்டுக்கொள்வேன்.

SRI C. N. ANNADURAI : எங்களுடைய நடவடிக்கைகள் காங்கிரஸ்காரர்களுடைய கடந்த கால நடவடிக்கைகளைப் பார்த்துச் செய்யப்படும் பொம்மைக் கல்யாணங்கள் என்று நீங்கள் குறிப்பிட்டீர்கள். அதைக் கேட்ட நான் இந்தியக் காங்கிரஸ் நடவடிக்கைகள் அயர்லாந்தில் நடந்த நடவடிக்கைகளைப் பார்த்துச் செய்யப்பட்ட பொம்மைக் கல்யாணங்கள் என்று குறிப்பிட்டேன். நான் அவ்வாறு குறிப்பிட்டதால்தான், அயர்லாந்தில் நடத்தப்பட்டவற்றில் பலவற்றை இந்தியக் காங்கிரஸ் நடத்தியது என்றும் குறிப்பிட்டேன். காங்கிரஸ் நிஜக் கல்யாணமும் செய்துகொண்டது.

*THE HON. SRI C. SUBRAMANIAM : நாம் உண்மையாகவே ஒரு ஆதிக்கத்திற்கு உட்பட்டிருக்கிறோமா என்று சிந்திக்க வேண்டும். ஒரு சில இளைஞர்கள் பொம்மைக் கல்யாணம் பண்ணுவது ஒரு புறம் இருக்க, சில பெரியவர்களும் இப்போது பொம்மைக் கல்யா

9th February 1959] [Sri C. Subramaniam]

ணங்கள் பண்ணுகிருர்கள். பொம்மைக் கல்யாணம் செய்யும் இளை ஞர்களுடன் சேர்ந்திருந்த வரலாற்றை மறைப்பதற்காக "எப்போதுமே ஒரு ஆதிக்கத்தை எதிர்த்து வருவோம்" என்ற எண்ணத்தில்—அவ் வாறு செய்தால் தங்கள் பழைய வரலாறு மறையும் என்ற எண்ணத்தில் இந்தப் பெரியவர்கள் பொம்மைக் கல்யாணங்கள் செய்கிருர்களோ என்று நான் நினைக்கிறேன்.

நாம் எல்லோரும் ஒற்றுமையாக முன்னேற்றப் பாதையில் செல்ல வேண்டும். முன்னேற்றப் பாதையில் செல்வதற்கு ஒத்துழைக்க வாரீர், வாரீர் என்று உங்கள் எல்லோரையும் அழைக்கிறேன். நாம் நமக் குள்ளே ஒற்றுமையை உண்டாக்கிக் கொண்டோமானுல், நாம் இன்று முன்னேறியுள்ளதை விடப் பன்மடங்கு முன்னேற முடியும். நானுடன் ஒன்று சேர்ந்தால் அது ஐந்தாகத்தான் ஆகும். நான்கிலிருந்து ஒன்று பிரிந் தால் அது மூன்ருகக் குறையத்தான் செய்யும். எனவே நமக்குள்ளே ஒற்றுமை ஏற்பட்டால் நம்முடைய சக்தி அதிகரிக்கத்தான் செய்யும். நாம் எல்லோரும் ஒன்று சேர்ந்து திட்டங்களை நிறைவேற்ற வேண்டும். நம் முடைய கருத்து வேற்றுமைகள் நம்முடைய திட்டங்கள் நிறைவேற்றுவதற் குக் தடையாக இருக்கக்கூடாது. எனவே, நீங்கள் "வடநாட்டு ஆதிக்கம், வடநாட்டு ஆதிக்கம்" என்று சொல்லிக்கொண்டே இருப்பதில் பய னில்லை. "ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் வடநாட்டு ஆதிக்கத்தைப்பற்றி தான் பேசுவோம். அதைப்பற்றியே தான் எப்போதும் பேசிக்கொண்டிருப் போம். "திராவிட நாடு தான் சர்வ ரோக நிவாரணி" என்று நீங்கள் சொல்வீர்களானுல், அது சரியல்ல. அவ்வாறு நீங்கள் பேசிக்கொண் டிருப்பது, நமது திட்டங்கள் நிறைவேறுவதற்கு ஒரு விதத்திலும் உத வாது. உங்களுடைய லட்சியம் கடைசியில் நிறைவேறும் என்று நீங்கள் நம்பினுலும், இடைக்காலத்தில் நாம் எடுத்துக்கொண்டிருக்கும் திட்டங் களுக்குத் தடைகளை ஏற்படுத்தாத முறையில் நீங்கள் நடந்துகொள்ள வேண்டும். எனவே, உங்கள் ஒத்துழைப்பை, வடநாட்டு ஆதிக்கத்திற்குக் கொடுக்காவிட்டாலும் எங்களுக்காவது முழுதும் கொடுங்கள். நாங்கள் வட நாட்டு ஆதிக்கத்தின் கையாட்கள் என்று நீங்கள் நினைத்துக்கொண் டிருந்தால், என்றைக்கும் கனவுலகில்தான் இருப்பீர்கள். எனவே கனவு லகிலிருந்து வெளியே வாருங்கள்.

நாங்கள் உங்களை விடத் திறமையும் அனுபவமும் மிக்கவர்கள் என் பதை மறுபடியும் வலியுறுத்திக் கூறுகிறேன். நீங்கள் எல்லோரும் எங்களுடன் ஒத்துழைக்க வேண்டும் என்று, வார்த்தைக்காக அல்லாமல் மனப்பூர்வமாகவே உங்களைக் கேட்டுக்கொள்ளுகிறேன்.

நமக்குள் ஒற்றுமையும், ஒத்துழைப்பும் இருக்க வேண்டியது மிகவும் முக்கியம் என்பது கவர்னர் அவர்களுடைய உரையில், முதல் பாராவிலேயே, சொல்லப்பட்டிருக்கிறது. கவர்னரின் உரை என்பது சர்க்காரின் கொள்கையை அறிவிக்கும் உரைதான். சர்க்காரின் கொள்கை கவர்னரின் மூலம் இந்தச் சபைக்குச் சமர்ப்பிக்கப்படுகிறது. எனவே, நமக்குள் ஒற்றுமையும் ஒத் துழைப்பும் இருக்க வேண்டியது மிகவும் முக்கியம் என்று கவர்னர் அவர் களுடைய உரையில் குறிப்பிடப்பட்டிருப்பதானது, கவர்னர் அவர்களுடைய எண்ணம் மட்டுமின்றி சர்க்காரின் கொள்கையும் கருத்தும் ஆகும். அந்த முறையில், மாநிலத்திற்கான நல்ல திட்டங்களை நிறைவேற்றுவதற்கு ஒத் துழைக்க எல்லோரும் வாருங்கள், வாருங்கள் என்று உங்களை அழைக்கி றேன். திட்டங்கள் நிறைவேற்றுவதற்கான முயற்சியில் உங்கள் பிரசாரங் களைக் கலந்து குழப்பாமல் ஒத்துழைக்க வேண்டும். கவர்னரின் உரையின் பேரில் நடக்கும் விவாதம் முடிந்த பிறகு, மற்றொரு விவாதம் வரப் போகிறது. அது பட்ஜெட் விவாதம், பட்ஜெட் விவாதத்தின் போதும் வட நாட்டையும் திராவிட நாட்டையும் பற்றிப் பேசாமல், நமது மாநிலத்தை முன்னேறச் செய்வதற்கான திட்டங்களையும் காரியங்களையும் பற்றி அப்போது பேசுங்கள் என்று உங்களைக் கேட்டுக்கொண்டு என் உரையை முடித்துக் கொள்கிறேன்.

**Sri K. ANBAZHAGAN :** On a point of information Sir, கனம் அமைச்சர், ஜனநாயகப் பண்பு குறித்து மிக அதிகமாக விளக்கினர். எல்லாக் கட்சிகளும் ஒத்துழைக்க வேண்டும் என்றும், ஒத்

[Sri K. Anbazhagan] [9th February 1959

துழைக்கும் ஜனநாயகப் பண்பை கட்சிகள் வளர்க்க வேண்டும் என்றும் அவர் கூறினார். ஜனநாயகப் பண்பை வளர்க்கும் பொறுப்பு எதிர்க் கட்சிகளுக்கு மட்டுமே உரியதா அல்லது அது ஆளும் கட்சிக்கும் உரியதா ? அது ஆளும் கட்சிக்கும் உரியது என்றால், இந்த மாநிலத்திற்கு தமிழ் நாடு என்று பெயர் வைக்க வேண்டுமென்று எல்லாக் கட்சிகளின் உறுப்பினர்களும் சுயேச்சை உறுப்பினர்களும் சேர்ந்து கோரியபோது, அந்த கோரிக்கை ஆளும் கட்சியால் விடப்பட்டதற்குக் காரணம் என்ன என்று கனம் அமைச்சர் விளக்குவாரா ?

*THE HON. SRI C. SUBRAMANIAM : எல்லாத் துறைகளிலும், எதிர்க் கட்சிகளுக்குள்ளே, தங்களுக்குள் கலந்து பேசி முடிவு செய்துகொள்ளும் பண்பு வரவில்லை. எங்கள் கட்சியைப் பொறுத்த வரையில், எங்கள் கட்சிக்குள் முடிவ செய்வதை ஏற்றுக்கொள்வதற்கு நாங்கள் எல்லோருமே தயாராக இருக்கிறோம். அதேபோல, எதிர்க் கட்சிகள், அவசியமான பிரச்னைகள் சம்பந்தமாக தங்களுக்குள்ளே கலந்து பேசி முடிவு செய்துகொள்ளவேண்டும். மற்றெல்லா எதிர்க் கட்சிகளும் சேர்ந்து முடிவு செய்துள்ளதையாவது நீங்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று சொன்னேன். எதிர்க் கட்சியில் ஜனநாயகம் வளர வேண்டும் என்று சொன்னேன். நீங்கள் ஒன்று சேரமாட்டீர்கள், ஒத்துப்போக மாட்டீர்கள் என்றால் தனித்தே இருங்கள். நீங்கள் தனித்து இருந்தால் எங்களுக்கு நல்லதுதான்.

SRI D. S. AUTHIMOOLAM : On a point of order, Sir.

MR. SPEAKER : There cannot be any point of order. I am not going to allow any point of order.

## IV.—ANNOUNCEMENT *RE* AMENDMENTS TO THE MADRAS GENERAL SALES TAX BILL, 1958 (L.A. BILL No. 6 OF 1958).

MR. SPEAKER : Before I put the amendments and the motion of thanks to vote, I have to announce that the following hours and dates have been fixed for the receipt of amendments to Madras General Sales Tax Bill, 1958 (L.A. Bill No. 6 of 1958).

| Clauses. | Time. | Date. |
|---|---|---|
| 1 to 20 | 12 noon | 10th February 1959. |
| 21 to 40 | 5 p.m. | 10th February 1959. |
| 41 to 6 0 and Schedules | 12 noon | 11th February 1959. |

## III.—DISCUSSION ON THE GOVERNOR'S ADDRESS—*cont.*

MR. SPEAKER : I shall now put the amendments to vote. Mr. Annamalai's amendment. The question is—

" *Add* at the end the following :—

' but regret to note that the Address does not refer to the steps taken in regard to fixing the wages for agricultural labourers. "

The amendment was put and lost.

MR. SPEAKER : Mr. Sattanatha Karayalar's amendment. The question is—

" *Add* at the end the following :—

' but regret that adequate mention has not been made about the soaring prices of foodgrains and essential articles required for daily use and about the steps taken by the Government to bring down the same.' "

The amendment was put and lost.

9th February 1959]

MR. SPEAKER : Mr. T. S. Ramaswamy Pillai's amendment. The question is— 1-10 p.m.

" *Add* at the end the following :—

' but regret to note that the Address does not refer to the failure of the Government :

(i) to introduce free and compulsory universal education;

(ii) to take steps for the speedy nationalization of industries; and

(iii) to revise the taxation structure consistent with the ideal of socialism.' "

The amendment was put and lost.

MR. SPEAKER : I shall now put Mr. Govindasamy's amendment to vote. I am omitting clause (ii) as it is covered by Sri Karayalar's amendment which has been voted down. The question is—

" *Add* at the end the following :—

' but regret to note that the Address does not refer to :

(i) the unemployment and beggar problems;

(ii) Minor Irrigation facilities in the State;

(iii) adequate compensation to the poor agriculturists in the Neiveli lignite Area;

(iv) failure to start sugar and vanaspathy factories in South Arcot district;

(v) failure to extend supply of electricity in South Arcot district; and

(vi) failure to start heavy industries in the State '. "

The amendment was put and lost.

MR. SPEAKER : I shall now put the main motion to vote. The question is :

" That an humble Address be presented to the Governor that the Members of the Madras Legislative Assembly thank him for the Address delivered to the Members of the Legislature on the 4th February 1959."

The motion was put and carried.

MR. SPEAKER : I now adjourn the House to meet again at 9 a.m. tomorrow.

The House then adjourned.

## V.—PAPERS LAID ON THE TABLE OF THE HOUSE.

### *B.—Reports and other papers.*

17. *Short review of activities of the Commercial Taxes Department for the first half-year ending 30th September, 1958.*

18. *Short review of activities of the Accommodation Control Department for the half-year ending 31st December 1958.*

## Appendix I.

[*Vide* answer to started question No. 151 asked by Sri K. Sattanatha Karayalar at the meeting of the Legislative Assembly held on 9th February 1959, page 363 *supra*.]

### Part I.

### List containing names of Chairman and Members of the Rural Development Board.

1 Chief Secretary to Government—*Chairman*.

2 First Member, Board of Revenue.

3 Second Member, Board of Revenue.

4 Third Member, Board of Revenue.

5 Secretary to Government, Finance Department.

6 Secretary to Government, Public Works Department.

7 Secretary to Government, Revenue Department.

8 Secretary to Government, Health, Education and Local Administration Department.

9 Secretary to Government, Food and Agriculture Department.

10 Secretary to Government, Industries, Labour and Co-operation Department.

11 Chief Engineer (Irrigation).

12 Chief Engineer, P.W.D. (General).

13 Chief Engineer (Electricity).

14 Chief Engineer (Highways).

15 Director of Agriculture.

16 Director of Animal Husbandry.

17 Chief Conservator of Forests.

18 Director of Medical Services.

19 Director of Public Health.

20 Director of Public Instruction.

21 Registrar of Co-operative Societies.

22 Director of Industries and Commerce.

23 Director of Harijan Welfare.

24 Inspector of Municipal Councils and Local Boards.

25 Director of Statistics.

26 Joint Secretary to Government, Public (Rural Development Projects) Department.

27 Director of Information and Publicity.

28 Secretary to Government, Public (Planning and Development) Department—*Secretary*.

*Other invitees.*

29 Secretary, Board of Revenue.

30 Deputy Development Commissioners, Madras, Madurai, Tiruchirappalli and Coimbatore.

31 Assistant Development Commissioner (Training), Madras-2.

In addition, Heads of Departments, who are not members of the Board, will be invited to attend the meetings of the Board, whenever their presence is considered necessary and useful depending upon the subject coming up for discussion before the Board.

**Part II.**

STATEMENT SHOWING THE DATES ON WHICH THE RURAL DEVELOPMENT BOARD HAS MET SO FAR SINCE IT WAS CONSTITUTED IN G.O. MS. NO. 1630, PUBLIC, DATED 11TH SEPTEMBER 1954.

(1) 8th December 1954.

(2) 26th March 1955.

(3) 4th July 1955.

(4) 5th December 1955.

(5) 5th March 1956.

(6) 7th April 1956.

(7) 27th July 1956.

(8) 27th August 1956.

(9) 25th October 1956.

(10) 4th January 1957.

(11) 15th April 1957.

(12) 24th July 1957.

(13) 10th March 1958.

(14) 18th September 1958.

[9th February 1959

## APPENDIX II.

[Vide answer to starred question No. 159 asked by Sri K. R. Viswanathan at the meeting of the Legislative Assembly held on 9th February 1959, page 366 supra.[

| | *Serial number and taluk in which situated.* | *Name of block.* | *Whether situated in economically backward or under developed pocket.* | *Date of inauguration if launched.* |
|---|---|---|---|---|
| | (1) | (2) | (3) | (4) |
| 1 | Musiri .. .. | Musiri .. .. | No | 2nd October 1953. |
| 2 | Do. .. .. | Thathaiangarpet .. | No | To be bifurcated from 1st April 1959. |
| 3 | Do. .. .. | Thottiam .. .. | No | 2nd October 1956. |
| 4 | Do. .. .. | Turayur .. .. | No | 2nd October 1957. |
| 5 | Do. .. .. | Vyrichettipalayam. | No | 1st April 1958. |
| 6 | Lalgudi .. .. | Lalgudi .. .. | No | 1st April 1957. |
| 7 | Do. .. .. | Manchanallur .. | No | |
| 8 | Do. .. .. | Pullambadi .. | No | |
| 9 | Perambalur .. | Veppanthattai .. | No | 2nd October 1953. |
| 10 | Do. .. | Perambalur .. | No | 2nd October 1957. |
| 11 | Do. .. | Alathur .. .. | No | |
| 12 | Do. .. | Keelapuliyur .. | Yes | |
| 13 | Udayarpalayam .. | Thirumanur .. | Yes | 2nd October 1956. |
| 14 | Do. .. | Jayankondam .. | Yes | |
| 15 | Do. .. | Ariyalur .. .. | Yes | 1st April 1958. |
| 16 | Do. .. | T. Palur .. .. | Yes | |
| 17 | Do. .. | Sendurai .. .. | Yes | |
| 18 | Do. .. | Andimadam .. | Yes | |
| 19 | Tiruchirappalli .. | Tiruchirappalli .. | No | |
| 20 | Do. .. | Manikandam .. | Yes | |
| 21 | Do. .. | Srirangam .. .. | No | |
| 22 | Kulithalai .. .. | Kulithalai .. .. | No | 1st April 1957. |
| 23 | Do. .. .. | Kadavur .. .. | Yes | |
| 24 | Do. .. .. | Vaiyampatti .. | Yes | |
| 25 | Do. .. .. | Manaparai .. .. | No | |
| 26 | Do. .. .. | Marungapuri .. | Yes | |
| 27 | Do. .. .. | Krishnarayapuram. | No | |
| 28 | Karur .. .. | K. Paramathy .. | No | 2nd October 1953. |
| 29 | Do. .. .. | Arvakurichi .. | Yes | 2nd October 1955. |
| 30 | Do. .. .. | Thanthoni .. | No | 1st April 1958. |
| 31 | Do. .. .. | Karur .. .. | No | |
| 32 | Alangudi .. .. | Thiruvarangulam .. | No | 2nd October 1954. |
| 33 | Do. .. .. | Karambakudi .. | No | 2nd October 1958. |
| 34 | Kolathur .. .. | Keeranur .. .. | Yes | |
| 35 | Do. .. .. | Viralimalai .. | Yes | |
| 36 | Do. .. .. | Annavasal .. | Yes | |
| 37 | Thirumayam .. | Ponnamaravethi .. | Yes | |
| 38 | Do. .. | Tirumayam .. | Yes | |
| 39 | Do. .. | Arimalam .. .. | Yes | |




# INDEX TO MADRAS LEGISLATIVE ASSEMBLY DEBATES

## FIFTH SESSION OF THE SECOND LEGISLATIVE ASSEMBLY UNDER THE CONSTITUTION OF INDIA.

*5th, 6th, 7th and 9th February* 1959.

**Volume XVII (Nos. 1 to 4).**

PAGES

**A**

PAGES

B



C

PAGES

C—*cont.*

PAGES

E—*cont.*



F

PAGES

H—*cont.*

PAGES

M—*cont.*



N

PAGES

O



P

PAGES

**P**—*cont.*

PAGES

**P—*cont.***

PAGES

P—*cont.*

PAGES

P—*cont.*

PAGES

Q

PAGES

Q—*cont.*

PAGES

—answers—cont. Q—cont.

PAGES

Q—*cont.*

PAGES

Q—*cont.*

PAGES

Q—*cont.*



R

PAGES

R – *cont.*



.. ..

PAGES

S

PAGES

S—*cont.*



T

PAGES

T—cont.

PAGES

V—*cont.*

